5. சாத்திரங்க ளொன்றுங் காணார்—பொய்ச்
சாத்திரப் பேய்கள் சொல்லும் வார்த்தை நம்பியே
கோத்திரம் ஒன்றாயிருந்தாலும்—ஒரு
கொள்கையிற் பிரிந்தவனைக் குலைத்திகழ்வார்;
தோத்திரங்கள் சொல்லியவர் தாம்—தமைச்
சூது செய்யும் நீசர்களைப் பணிந்திடுவார்;
ஆத்திரங் கொண்டேயிவன் சைவன்—இவன்
அரிபக்தனென்று பெருஞ் சண்டையிடுவார்.
(நெஞ்சு)

6. நெஞ்சு பொறுக்குதிலையே—இதை
நினைந்து நினைந்திடினும் வெறுக்குதிலையே
கஞ்சி குடிப்பதற் கிலார்—அதன்
காரணங்கள் இவை யென்னும் அறிவுமிலார்
பஞ்சமோ பஞ்சமென்றே—நிதம்
பரிதவித்தே உயிர் துடி துடித்து
துஞ்சி மடிகின்றாரே—இவர்
துயர்களைத் தீர்க்க வோர் வழியிலையே. (நெஞ்சு)

7. எண்ணிலா நோயுடையார்—இவர்
எழுந்து நடப்பதற்கும் வலிமையிலார்
கண்ணிலாக் குழந்தைகள்போல்—பிறர்
காட்டிய வழியிற் சென்று மாட்டிக்கொள்வார்
நண்ணிய பெருங்கலைகள்—பத்து
நாலாயிரங் கோடி நயந்து நின்ற
புண்ணிய நாட்டினிலே—இவர்
பொறியற்ற விலங்குகள் போல வாழ்வார்.
(நெஞ்சு)

# 42. நிகழ்கின்ற ஹிந்துஸ்தானமும் வருகின்ற ஹிந்துஸ்தானமும்.

போகின்ற பாரதத்தை சபித்தல்.

1. வலிமை யற்ற தோளினாய் போ போ போ
மார்பிலே ஒடுங்கினாய் போ போ போ
பொலிவிலா முகத்தினாய் போ போ போ
பொறி யிழந்த விழியினாய் போ போ போ
ஒலி யிழந்த குரலினாய் போ போ போ
ஒளி யிழந்த மேனியாய் போ போ போ
கிலி பிடித்த நெஞ்சினாய் போ போ போ
கீழ்மை யென்றும் வேண்டுவாய் போ போ போ.

2. இன்று பாரதத்திடை நாய் போலே
ஏற்ற மின்றி வாழுவாய் போ போ போ
நன்று கூறி லஞ்சுவாய் போ போ போ
நாணிலாது கெஞ்சுவாய் போ போ போ
சென்று போன பொய் யெலாம் மெய்யாகச்
சிந்தை கொண்டு போற்றுவாய் போ போ போ
வென்று நிற்கு மெய்யெலாம் பொய்யாக
விழி மயங்கி நோக்குவாய் போ போ போ.

3. வேறு வேறு பாஷைகள்—கற்பாய் நீ
வீட்டு வார்த்தை கற்கிலாய் போ போ போ
நூறு நூல்கள் போற்றுவாய்—மெய்கூறும்
நூலி லோத் தியல்கிலாய் போ போ போ

மாறுபட்ட வாதமே ஐந்நூறு
வாயில் நீள ஓதுவாய் போ போ போ
சேறு பட்ட நாற்றமும்—தூறுஞ் சேர்
சிறிய வீடு கட்டுவாய் போ போ போ.

4. ஜாதி நூறு சொல்லுவாய் போ போ போ
தரும மொன்றி யற்றிலாய் போ போ போ
நீதி நூறு சொல்லுவாய்—கா சொன்று
நீட்டினுல் வணங்குவாய் போ போ போ
தீது செய்வ தஞ்சிலாய்—நின் முன்னே
தீமை நிற்கி லோடுவாய் போ போ போ
சோதி மிக்க மணியிலே—காலத்தால்
சூழ்ந்த மாசு போன்றனே போ போ போ.

---

## வருகின்ற பாரதத்தை வாழ்த்தல்.

1. ஒளி படைத்த கண்ணினுய் வா வா வா
உறுதி கொண்ட நெஞ்சினுய் வா வா வா
களி படைத்த மொழியினுய் வா வா வா
கடுமை கொண்ட தோளினுய் வா வா வா
தெளிவு பெற்ற மதியினுய் வா வா வா
சிறுமை கண்டு பொங்குவாய் வா வா வா
எளிமை கண் டிரங்குவாய் வா வா வா
ஏறு போல் நடையினுய் வா வா வா.

2. மெய்மை கொண்ட நூலையே—அன்போடு
வேதமென்று போற்றுவாய் வா வா வா

பொய்மை கூற லஞ்சுவாய் வா வா வா
பொய்மை நூல்க ளெற்றுவாய் வா வா வா
நொய்மை யற்ற சிந்தையாய் வா வா வா
நோய்களற்ற உடலினாய் வா வா வா
தெய்வ சாப நீங்கவே—நங்கள் சீர்த்
தேசமீது தோன்றுவாய் வா வா வா.

3. இளைய பாரதத்தினாய் வா வா வா
எதிரிலா வலத்தினாய் வா வா வா
ஒளியிழந்த நாட்டிலே—நின்றேறும்
உதயஞாயி றொப்பவே வா வா வா
களையிழந்த நாட்டிலே—முன்போலே
கலை சிறக்க வந்தனை வா வா வா
விளையு மாண்பு யாவையும்—பார்த்தன் போல்
விழியினால் விளக்குவாய் வா வா வா.

4. வெற்றி கொண்ட கையினாய் வா வா வா
விநய நின்ற நாவினாய் வா வா வா
முற்றி நின்ற வடிவினாய் வா வா வா
முழுமை சேர் முகத்தினாய் வா வா வா
கற்ற லொன்று பொய்க்கிலாய் வா வா வா
கருதிய தியற்றுவாய் வா வா வா
ஒற்றுமைக்கு ளுய்யவே—நாடெல்லாம்
ஒரு பெருஞ் செயல் செய்வாய் வா வா வா.

---

# 43. பிஜித் தீவிலே ஹிந்து ஸ்திரீகள்.



ஹரிகாம்போதிஜன்யம்

(ராகம்-ஸைந்தவி-திஸ்ரசாப்பு தாளம்.)

பல்லவி.

கரும்புத் தோட்டத்திலே—ஆ
கரும்புத் தோட்டத்திலே.

சரணங்கள்.

1. கரும்புத் தோட்டத்திலே—அவர்
கால்களும் கைகளும் சோர்ந்து விழும்படி
வருந்துகின்றனரே—ஹிந்து
மாதர்தன்னெஞ்சு கொதித்துக் கொதித்துமெய்
சுருங்குகின்றனரே—அவர்
துன்பத்தை நீக்க வழியில்லை யோவொரு
மருந்திதற் கில்லையோ—செக்கு
மாடுகள் போலுழைத் தேங்குகின் றாரந்தக்
கரும்புத் தோட்டத்திலே.

2. பெண்ணென்று சொல்லிடிலோ—ஒரு
பேயுமிரங்கு மென்பார் தெய்வமே—நின
தெண்ண மிரங்காதோ—அந்த
ஏழைக ளங்கு சொரியுங் கண்ணீர் வெறும்

மண்ணிற் கலந்திடுமோ—தெற்கு
மாகடலுக்கு நடுவினிலே யங்கோர்
கண்ணற்ற தீவினிலே—தனிக்
காட்டினிற் பெண்கள் புழுங்குகின்ற ரந்தக்
கரும்புத் தோட்டத்திலே.

3. நாட்டை நினைப்பாரோ—எந்த
நாளினிப் போயதைக் காண்பதென்றே யன்னை
வீட்டை நினைப்பாரோ—அவர்
விம்மி விம்மி விம்மி விம்மி யழுங்குரல்
கேட்டிருப்பாய் காற்றே—துன்பக்
கேணியிலே யெங்கள் பெண்க ளழுதசொல்
மீட்டு முரை யாயோ—அவர்
விம்மி யழவுந் திறங்கெட்டுப் போயினர்
கரும்புத் தோட்டத்திலே.

4. நெஞ்சங் குமுறுகிறார்—கற்பு
நீங்கிடச் செய்யுங் கொடுமையிலே யந்தப்
பஞ்சை மகளிரெல்லாம்—துன்பப்
பட்டு மடிந்து மடிந்து மடிந்தொரு
தஞ்சமு மில்லாதே—அவர்
சாகும் வழக்கத்தை இந்தக் கணத்தினில்
மிஞ்ச விடலாமோ—ஹே!
வீர கராளி, சாமுண்டி, காளீ!
கரும்புத் தோட்டத்திலே.

# 44. மாஜினியின் பிரதிக்கினை.



மாஜினி என்ற இத்தாலி தேசத்து தேசாபிமானி' தம்மால் ஸ்தாபிக்கப்பட்ட 'யௌவன இத்தாலி' என்ற சங்கத்திலே செய்து கொண்ட பிரதிக்கினை.

1. பேரருட் கடவுள் திருவடி யாணை,
   பிறப்பளித் தெமையெலாம் புரக்கும்
   தாரணி விளக்காம் என்னரு நாட்டின்
   தவப்பெய ரதன் மிசை யாணை.
   பாரவெந்துயர்கள் தாய்த் திரு நாட்டின்
   பணிக்கெனப் பல்விதத் துழன்ற
   வீரர் நந்நாடு வாழ்கென வீழ்ந்த
   விழுமியோர் திருப்பெய ராணை.

2. ஈசனிங் கெனக்கு மென்னுடன் பிறந்தோர்
   யாவர்க்கு மியற்கையி னளித்த
   தேசமின் புறுவான் எனக்கவன் பணித்த
   சீருய ரறங்களி னாணை.
   மாசறு மென்நற் றாயினைப் பயந்தென்
   வழிக்கெலாம் உறையுளாம் நாட்டின்
   ஆசையிங் கெவர்க்கு மியற்கையா மன்றோ ?
   அத்தகை யன்பின்மீ தாணை.

3. தீயன புரிதல், முறைதவி றுடைமை,
   செம்மை தீர் அரசியல், அநீதி
   ஆயவற் றென்னெஞ் சியற்கையி னெய்தும்
   அரும்பகை யதன் மிசை யாணை.

தேயமொன் றற்றேன், நற்குடிக் குரிய
உரிமைகள் சிறிதெனு மில்லேன்,
தூயசீ ருடைத்தாம் சுதந்திரத் துவசம்
துளங்கிலா நாட்டிடைப் பிறந்தேன்.

4. மற்றை நாட்டவர் முன் னின்றிடும் போழ்து
மண்டுமென் வெட்கத்தினாணை.
முற்றியவீடு பெறற்கெனப் படைப்புற்
றச் செயல் முடித்திட வலிமை
அற்றதா மறுகும் என்னுயிர்க் கதனி
லார்ந்தபே ராவலி னாணை.
நற்றவம் புரியப் பிறந்ததாயினு மிந்
நலனறு மடிமையின் குணத்தால்

5. வலியிழந் திருக்கு மென்னுயிர்க் கதன்கண்
வளர்ந்திடும் ஆசைமீ தாணை.
மலிவுறு சிறப்பின் எம்முடை முன்னோர்
மாண்பதன் நினைவின் மீதாணை.
மெலிவுட னிந்நாள் யாங்கள் வீழ்ந்திருக்கும்
வீழ்ச்சியி னுணர்ச்சிமீ தாணை.
பொலிவுறு புதல்வர் தூக்கினி லிறந்தும்
புன்சிறைக் களத்திடை யழிந்தும்

6. வேற்று நாடுகளில் அவர் துரத்துண்டும்
மெய்குலைந் திறந்துமே படுதல்
ஆற்ற கிலாராய் எம்மரு நாட்டின்
அன்னைமா ரழுங் கணீ ராணை,

மாற்றலரெங்கள் கோடியர்க் கிழைக்கும்
வகுக்கொணுத் துயர்களி னுணே.
ஏற்ற இவ்வாணே யனேத்துமேற் கொண்டே
யான் செயுஞ் சபதங்கள் இவையே.

7. கடவுளின் நாட்டிற் கிந்தவோர் புனிதக்
கட்டளை தன்னினும், அதனேத்
திடனுற நிறுவ முயலுதல் மற்றித்
தேசத்தே பிறந்தவர்க்கெல்லாம்
உடனுற கடமை யாகுமென்பதினும்
ஊன்றிய நம்புதல் கொண்டும்,
தடநில மிசையோர் சாதியை இறைவன்
சமைகெனப் பணிப்பனேல் அதுதான்

8. சமைதலுக் குரிய திறமையும் அதற்குத்
தந்துள னென்பதை யறிந்தும்,
அமையுமத் திறமை ஜனங்களேச்சாரும்
அன்னவர் தமக்கெனத் தாமே
தமையல தெவர்கள் துணேயு மில்லாது
தம்மருந் திறமையைச் செலுத்தல்
சுமையெனப் பொறுப்பின் செயத்திறுக்கதுவே
சூழ்ச்சியா மென்பதை யறிந்தும்,

9. கருமமுஞ் சொந்த நலத்திணேச் சிறிதும்
கருதிடா தளித்தலுந் தானே
தருமமா மென்றும், ஒற்றுமையோடு
தளர் விலாச் சிந்தனே கொளலே

பெருமைகொள் வலியா மென்றுமே மனத்திற்
பெயர்ந்திடா உறுதிமேற்கொண்டும்,
அருமைசால் சபத மிவை புரிகின்றேன்
ஆணைக ளனைத்து முற்கொண்டே.

10. என்னுடனொத்த கருமத்தை யேற்றார்
இயைந்த இவ் 'வாலிபர் சபை' க்கே
தன்னுடல், பொருளும், ஆவியுமெல்லாம்
தத்தமா வழங்கினேன். எங்கள்
பொன்னுயர் நாட்டை யொற்றுமையுடைத்தாய்ச்
சுதந்திரம் பூண்டது வாகி
இன்னுமொர் நாட்டின் சார்வில தாகிக்
குடியர சியன்றதா யிலக.

11. இவருடன் யானு மிணங்கியே யென்று
மிதுவலாற் பிறதொழி லிலனாய்த்
தவறறு முயற்சி செய்திடக் கடவேன்.
சந்ததஞ் சொல்லினால், எழுத்தால்,
அவமறு செய்கை யதனினால், இயலும்
அளவெலாம், எம்மவ ரிந்த
நவமுறு சபையி னொரு பெருங் கருத்தை
நன்கினின் அறிந்திடப் புரிவேன்.

12. உயரு மிந்நோக்க நிறைவுற 'இணக்கம்'
ஒன்றுதான் மார்க்கமென்பதுவும்,
செயம்நிலையாகச் செய்திடற் கறமே
சிறந்ததோர் மார்க்க மென்பதுவும்,

பெயர்வற எங்கள் நாட்டினர் மனதிற்
பேணுமா றியற்றிடக் கடவேன் ;
அயலொரு சபையி லின்றுதோ றென்றும்
அமைந்திடா திருந்திடக் கடவேன்.

13. எங்கள் நாட் டொருமை யென்னெடுங் குறிக்கும்
இச்சபைத் தலைவரா யிருப்போர்
தங்களாக் கினைக ளனைத் தையும் பணிந்து
தலைக்கொளற் கென்றுமே கடவேன் ;
இங்கென தாவி மாய்ந்திடுமேனு
மிவர்பணி வெளியிடா திருப்பேன் ;
துங்கமார் செயலாற் போதனையாலும்
இயன்றிடுந் துணையிவர்க் களிப்பேன்.

14. இன்று மெந்நாளு மிவை செயத்தவறேன் ;
மெய்யிது, மெய்யிது ; இவற்றை
என்றுமே தவறி யிழைப்பனே லென்னை
ஈசனார் நாசமே புரிக ;
அன்றியுமக்கள் வெறுத்தெனை யிகழ்க ;
அசத்தியப் பாதகஞ் சூழ்க ;
நின்ற தீ யெழுவாய் நகரத்தின் வீழ்ந்து
நித்தம் யா னுழலுக மன்னோ!

15. பேசி நின்ற பெரும்பிர திக்கினை
மாசிலாது நிறைவுறும் வண்ணமே
ஆசி கூறி யருளுக ஏழையேற்
கீச னென்று மிதயத் திலகியே.

# 45. 'பெல்ஜியம்' நாட்டிற்கு வாழ்த்து.



1. *அறத்தினால் வீழ்ந்துவிட்டாய்; அன்னியன் வலியனாகி*
*மறத்தினால் வந்து செய்த வன்மையைப் பொறுத்தல் செய்யாய்*
*முறத்தினாற் புலியைக்காக்கு மொய்வரைக் குறப்பெண் போலத்*
*திறத்தினால் எளியையாகிச் செய்கையால் உயர்ந்து நின்றாய்.*

2. *வண்மையால் வீழ்ந்துவிட்டாய்; வாரி போற் பகைவன் சேனை*
*திண்மையோ டடர்க்கும்போதில் சிந்தனை மெலிதலின்றி*
*ஒண்மை சேர் புகழே மேலென் றுளத்திலே உறுதி கொண்டாய்*
*உண்மைதேர் கோல நாட்டார் உரிமையைக் காத்து நின்றாய்.*

3. *மானத்தால் வீழ்ந்துவிட்டாய்; மதிப்பிலாப் பகைவர் வேந்தன்*
*வானத்தாற் பெருமை கொண்ட வலிமைதான் உடையனேனும்*

ஊனத்தால் உள்ளமஞ்சி ஒதுங்கிட
மனமொவ் வாமல்
ஆனத்தைச் செய்வோ மென்றே அவன்வழி
யெதிர்த்து நின்றாய்.

4. வீரத்தால் வீழ்ந்துவிட்டாய் ; மேல்வரை
யுருளுங் காலை
ஓரத்தே யொதுங்கித் தன்னை யொளித்திட
மனமொவ் வாமல்
பாரத்தை யெளிதாக் கொண்டாய், பாம்பினைப்
புழுவே யென்றாய்
நேரத்தே பகைவன் றன்னை 'நில்' லென
முனைந்து நின்றாய்.

5. துணிவினால் வீழ்ந்துவிட்டாய் ; தொகையிலாப்
படைகளோடும்
பிணிவளர் செருக்கினோடும் பெரும்பகை
யெதிர்த்தபோது
பணிவது கருதமாட்டாய், பதுங்குதல்
பயனென் றெண்ணாய்.
தணிவதை நினைக்க மாட்டாய், 'நில்'
லெனத் தடுத்தல் செய்தாய்.

6. வெருளுத லறிவென்றெண்ணாய் ; விபத்தையோர்
பொருட்டாக் கொள்ளாய் ;
சுருளலை வெள்ளம் போலத் தொகையிலாப்
படைகள் கொண்டே

மருளுறு பகைவர் வேந்தன் வலிமையாற்
புகுந்த வேளை
"உருளுக தலைகள், மானமோங்குகெ"ன்
றெதிர்த்து நின்றாய்.

7. யாருக்கே பகை யென்றாலும் யார்மிசை
யிவன் சென்றாலும்
ஊருக்கு நல்லது சொல்வேன் எனக் கெல்லை தாண்டி யுத்தர
வெண்ணிடாமல்
போருக்குக் கோலம் பூண்டு புகுந்தவன்
செருக்குக் காட்டை
வேருக்கு மிடமில்லாமல் வெட்டுவே
னென்று நின்றாய்.

8. வேள்வியில் வீழ்வதெல்லாம் வீரமும்
புகழுமிக்கு
மீள்வதுண் டுலகிற் கென்றே வேதங்கள்
விதிக்கு மென்பர்
ஆள்வினை செய்யும் போதில், அறத்திலே
யிளைத்து வீழ்ந்தார்
கேள்வியுண் டுடனே மீளக் கிளர்ச்சி கொண்
டுயிர்த்து வாழ்தல்.

9. விளக்கொளி மழுங்கிப் போக வெயிலொளி
தோன்றும் மட்டும்
களக்கமா ரிருளின் மூழ்குங் கனகமா
ளிகையு முண்டாம்.

அளக்கருந் தீதுற்றாலும் அச்சமே
யுளத்துக் கொள்ளார்
துளக்கற வோங்கி நிற்பர் துயருண்டோ
துணிவுள் ளோர்க்கே?

## 46. புதிய ருஷியா.

ஜார் சக்கரவர்த்தியின் வீழ்ச்சி.

1. மாகாளி பராசக்தி உருசிய நாட்டினிற்
கடைக்கண் வைத்தா ளங்கே
ஆகாவென் றெழுந்தது பார் யுகப்புரட்சி;
கொடுங்காலன் அலறி வீழ்ந்தான்;
வாகான தோள்புடைத்தார் வானமரர்;
பேய்களெல்லாம் வருந்திக் கண்ணீர்
போகாமற் கண் புகைந்து மடிந்தன வாம்;
வையகத்தீர், புதுமை காணீர்!

2. இரணியன்போ லரசாண்டான் கொடுங்கோலன்
ஜாரெனும்பே ரிசைந்த பாவி.
சரணின்றித் தவித்திட்டார் நல்லோரும்
சான்றோரும்; தருமந்தன்னைத்
திரணமெனக் கருதிவிட்டான் ஜார்மூடன்;
பொய் சூது தீமையெல்லாம்
அரணியத்திற் பாம்புகள் போல் மலிந்துவளர்ந்
தோங்கினவே யந்த நாட்டில்.

3. உழுதுவிதைத் தறுப்பாருக் குணவில்லை:
பிணிகள் பலவுண்டு; பொய்யைத்
தொழுதடிமை செய்வார்க்குச் செல்வங்க
ளுண்டுண்மை சொல்வோர்க் கெல்லாம்
எழுதரிய பெருங்கொடுமைச் சிறையுண்டு
தூக்குண்டே யிறப்பதுண்டு;
முழுதுமொரு பேய் வனமாஞ் சிவேரியிலே
ஆவிகெட முடிவதுண்டு.

4. இம்மென்றால் சிறைவாசம்; ஏனென்றால்
வனவாசம்; இவ்வாறங்கே
செம்மையெலாம் பாழாகிக் கொடுமையே
அறமாகித் தீர்ந்தபோதில்,
அம்மைமனங் கனிந்திட்டாள்; அடிபாவி
உண்மை சொலும் அடியார் தம்மை
மும்மையிலும் காத்திடு நல் விழியாலே
நோக்கினாள்; முடிந்தான் காலன்.

5. இமயமலை வீழ்ந்ததுபோல் வீழ்ந்துவிட்டான்
ஜாரரசன்; இவனைச் சூழ்ந்து
சமயமுள படிக்கெல்லாம் பொய்கூறி
அறங்கொன்று சதிகள் செய்த
சுமடர் சடசடவென்று சரிந்திட்டார்,
புயற்காற்றுச் சூறை தன்னில்
திமு திமென மரம்விழுந்து காடெல்லாம்
விறகான செய்தி போலே.

6. குடி மக்கள் சொன்னபடி குடிவாழ்வு
மேன்மையுறக் குடிமை நீதி
கடியொன்றி லெழுந்தது பார்; குடியரசென்
றுலகறியக் கூறிவிட்டார்;
அடிமைக்குத் தளையில்லை யாருமிப்போ
தடிமையில்லை அறிக என்றார்;
இடிபட்ட சுவர்போலே கலி விழுந்தான்,
கிருத யுகம் எழுக மாதோ!

---

# 47. பெண்கள் விடுதலைக் கும்மி.

காப்பு.

பெண்கள் விடுதலை பெற்ற மகிழ்ச்சிகள்
பேசிக்களிப்பொடு நாம் பாடக்
கண்களிலே யொளி போல வுயிரில்
கலந்தொளிர் தெய்வநற் காப்பாமே.

1. கும்மியடி தமிழ் நாடு முழுதுங்
குலுங்கிடக் கை கொட்டிக் கும்மியடி
நம்மைப் பிடித்த பிசாசுகள் போயின
நன்மை கண்டோ மென்று கும்மியடி. (கும்மி)

2. ஏட்டையும் பெண்கள் தொடுவது தீமை யென்
றெண்ணி யிருந்தவர் மாய்ந்து விட்டார் [மென்ற
வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டிவைப்போ-
விந்தை மனிதர் தலை கவிழ்ந்தார், (கும்மி)

3. மாட்டை யடித்து வசக்கித் தொழுவினில்
மாட்டும் வழக்கத்தைக் கொண்டு வந்தே
வீட்டினி லெம்மிடங் காட்ட வந்தாரதை
வெட்டி விட்டோ மென்று கும்மியடி. (கும்மி)

4. நல்ல விலைகொண்டு நாயை விற்பாரந்த
நாயிடம் யோசனை கேட்பதுண்டோ ?
கொல்லத்துணிவின்றி நம்மையு மந்நிலை
கூட்டி வைத்தார் பழி கூட்டி விட்டார். (கும்மி)

5. கற்பு நிலை யென்று சொல்ல வந்தா ரிரு
கக்ஷிக்கு மஃது பொதுவில் வைப்போம்
வற்புறுத்திப் பெண்ணைக் கட்டிக் கொடுக்கும்
வழக்கத்தைத் தள்ளி மிதித்திடுவோம். (கும்மி)

6. பட்டங்க ளாள்வதுஞ் சட்டங்கள் செய்வதும்
பாரினிற் பெண்கள் நடத்த வந்தோம்
எட்டு மறிவினி லாணுக்கிங்கே பெண்
இளைப் பில்லை காணென்று கும்மியடி. (கும்மி)

7. வேதம் படைக்கவும் நீதிகள் செய்யவும்
வேண்டி வந்தோ மென்று கும்மியடி
சாதம் படைக்கவுஞ் செய்திடு வோந் தெய்வச்
சாதி படைக்கவுஞ் செய்திடு வோம். (கும்மி)

8. காதலொருவனைக் கைப்பிடித்தே யவன்
காரியம் யாவினுங் கைகொடுத்து
மாதர றங்கள் பழமையைக் காட்டிலும்
மாட்சி பெறச் செய்து வாழ்வமடி. (கும்மி)

# 48. புதுமைப் பெண்.



1. போற்றி போற்றியோ ராயிரம் போற்றி! நின்
பொன்னடிக்குப்பல் லாயிரம் போற்றி காண்!
சேற்றிலே புதிதாக முளைத்த தோர்
செய்ய தாமரைத் தேமலர் போலொளி
தோற்றி நின்றனை பாரத நாட்டிலே
துன்ப நீக்குஞ் சுதந்திர பேரிகை
சாற்றி வந்தனை மாதரசே யெங்கள்
சாதி செய்த தவப்பயன் வாழி நீ!

2. மாதர்க் குண்டு சுதந்திர மென்று நின்
வண்மலர்த்திரு வாயின் மொழிந்தசொல்
நாதந் தானது நாரதர் வீணையோ?
நம்பிரான் கண்ணன் வேய்ங்குழ லின்பமோ?
வேதம் பொன்னுருக் கன்னிகை யாகியே
மேன்மை செய்தெமைக் காத்திடச்சொல்வதோ?
சாதல் மூத்தல் கெடுக்கு மமிழ்தமோ?
தையல் வாழ்க பல் லாண்டுபல்லாண் டிங்கே!

3. அறிவு கொண்ட மனித வுயிர்களை
அடிமை யாக்க முயல்பவர் பித்தராம்
நெறிகள் யாவினு மேம்பட்டு மானிடர்
நேர்மை கொண்டுயர் தேவர்களாதற்கே
சிறிய தொண்டுகள் தீர்த்தடிமைச் சுருள்
தீயி லிட்டுப் பொசுக்கிட வேண்டுமாம்
நறிய பொன்மலர் மென்சிறு வாயினால்
நங்கை கூறு நவீனங்கள் கேட்டிரோ!

4. ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்
அறிவி லோங்கியிவ் வையந் தழைக்குமாம்
பூணு நல்லறத் தோடிங்கு பெண்ணுருப்
போந்து நிற்பது தாய்சிவ சக்தியாம்
நாணு மச்சமும் நாய்கட்கு வேண்டுமாம்
ஞான நல்லறம் வீர சுதந்திரம்
பேணு நற்குடிப் பெண்ணின் குணங்களாம்
பெண்மைத் தெய்வத்தின் பேச்சுகள் கேட்டிரோ!

5. நிலத்தின் தன்மை பயிர்க்குள தாகுமாம்
நீசத் தொண்டு மடமையுங் கொண்டதாய்
தலத்தில் மாண்புயர் மக்களைப் பெற்றிடல்
சாலவே யரி தாவதொர் செய்தியாம்
குலத்து மாதர்க்குக் கற்பியல் பாகுமாம்
கொடுமை செய்து மறிவை யழித்துமந்
நலத்தைக் காக்க விரும்புதல் தீமையாம்
நங்கை கூறும் வியப்புகள் கேட்டிரோ!

6. புதுமைப்பெண்ணிவள் சொற்களுஞ் செய்கையும்
பொய்மை கொண்ட கலிக்குப் புதிதன்றிச்
சதுமறைப்படி மாந்த ரிருந்த நாள்
தன்னிலே பொது வான வழக்கமாம்
மதுரத் தேமொழி மங்கைய ருண்மைதேர்
மாதவப் பெரி யோருட னொப்புற்றே
முதுமைக் காலத்தில் வேதங்கள் பேசிய
முறைமை மாறிடக் கேடு விளைந்ததாம்.

7. நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வையும்
நிலத்தில் யார்க்கு மஞ்சாத நெறிகளும்
திமிர்ந்த ஞானச் செருக்கு மிருப்பதால்
செம்மை மாதர் திறம்புவதில்லையாம்
அமிழ்ந்து பேரிரு ளாமறி யாமையில்
அவலமெய்திக் கலையின்றி வாழ்வதை
உமிழ்ந்து தள்ளுதல் பெண்ணறமாகுமாம்
உதய கன்னி யுரைப்பது கேட்டிரோ!

8. உலக வாழ்க்கையி னுட்பங்கள் தேரவும்
ஓது பற்பல நூல்வகை கற்கவும்
இலகு சீருடை நாற்றிசை நாடுகள்
யாவுஞ் சென்று புதுமை கொணர்ந்திங்கே
திலக வாணுத லார்நங்கள் பாரத
தேசமோங்க உழைத்திடல் வேண்டுமாம்
விலகி வீட்டிலோர் பொந்தில் வளர்வதை
வீரப் பெண்கள் விரைவி லொழிப்பராம்.

9. சாத்திரங்கள் பல பல கற்பராம்
சவுரியங்கள் பல பல செய்வராம்
மூத்த பொய்மைகள் யாவு மழிப்பராம்
மூடக் கட்டுக்கள் யாவுந் தகர்ப்பராம்
காத்து மானிடர் செய்கை யனைத்தையும்
கடவுளர்க் கினிதாகச் சமைப்பராம்
ஏத்தி யாண்மக்கள் போற்றிட வாழ்வராம்
இளைய நங்கையி னெண்ணங்கள் கேட்டிரோ!

10. போற்றி, போற்றி, ஜயஜய போற்றியிப்
புதுமைப் பெண்ணொளி வாழிபல் லாண்டிங்கே
மாற்றி வையம் புதுமை யுறச்செய்து
மனிதர் தம்மை யமரர்க ளாக்கவே
ஆற்றல் கொண்ட பராசக்தி யன்னைநல்
லருளினா லொரு கன்னிகை யாகியே
தேற்றி யுண்மைகள் கூறிட வந்திட்டாள்
செல்வம் யாவினு மேற்செல்வ மெய்தினோம்.

---

## 49. பெண்மை.

1. பெண்மை வாழ்கென்று கூத்திடு வோமடா
பெண்மை வெல்கென்று கூத்திடு வோமடா
தண்மை இன்பநற் புண்ணியஞ் சேர்ந்தன
தாயின் பேரும் ஸதியென்ற நாமமும்.

2. அன்பு வாழ்கென் றமைதியி லாடுவோம்
ஆசைக் காதலைக் கைகொட்டி வாழ்த்துவோம்
துன்பந் தீர்வது பெண்மையி னாலடா
சூரப் பிள்ளைகள் தாயென்று போற்றுவோம்.

3. வலிமை சேர்ப்பது தாய்முலைப்பாலடா
மானஞ் சேர்க்கு மனைவியின் வார்த்தைகள்
கலி யழிப்பது பெண்க ளறமடா
கைகள் கோத்துக் களித்துநின் றாடுவோம்.

4. பெண்ணறத்தினை யாண்மக்கள் வீரந்தான்
பேணு மாயிற் பிறகொரு தாழ்வில்லை ;
கண்ணைக் காக்கு மிரண்டிமை போலவே
காத லின்பத்தைக் காத்திடு வோமடா.

5. சக்தி யென்ற மதுவையுண் போமடா
தாளங் கொட்டித் திசைகள திரவே
ஒத்தி யல்வதொர் பாட்டுங் குழல்களும்
ஊர் வியக்கக் களித்துநின் றாடுவோம்.

6. உயிரைக் காக்கும் உயிரினைச் சேர்த்திடும்
உயிரினுக் குயிரா யின்ப மாகிடும்
உயிரி னும்மிந்தப் பெண்மை யினிதடா
ஊது கொம்புகள், ஆடு களிகொண்டே.

7. 'போற்றி தாய்' என்று தோள் கொட்டியாடுவீர்
புகழ்ச்சி கூறுவீர் காதற் கிளிகட்கே
நூற்றிரண்டு மலைகளைச் சாடுவோம்
நுண்ணிடைப் பெண்ணொருத்தி பணியிலே.

8. 'போற்றி தாய்' என்று தாளங்கள் கொட்டடா
'போற்றி தாய்' என்று பொற்குழ லூதடா
காற்றி லேறியவ் விண்ணையுஞ் சாடுவோம்
காதற் பெண்கள் கடைக்கண் பணியிலே.

9. அன்ன மூட்டிய தெய்வமணிக் கையின்
ஆணை காட்டில் அனலை விழுங்குவோம்
கன்னத் தேமுத்தங் கொண்டு களிப்பினும்
கையைத் தள்ளும் பொற்கைகளைப் பாடுவோம்.

# 50. ஆங்கிலப் பயிற்சி.

நெல்லை யூர்சென் றவ்வூணர் கலைத்திறன்
நேரு மாறெனை எந்தை பணித்தனன்;
புல்லை யுண்கென வாளரிச் சேயினைப்
போக்கல் போலவும், ஊன்விலை வாணிகம்
நல்ல தென்றொரு பார்ப்பனப் பிள்ளையை
நாடு விப்பது போலவும், எந்தைதான்
அல்லல் மிக்கதோர் மண்படு கல்வியை
ஆரியர்க் கிங் கருவருப் பாவதை (1)

நரியு யிர்ச்சிறு சேவகர் தாதர்கள்
நாயெ னத்திரி யொற்றர் உணவினைப்
பெரிதெ னக்கொடு தம்முயிர் விற்றிடும்
பேடி யர்பிறர்க் கிச்சகம் பேசுவோர்
கருது மிவ்வகை மாக்கள் பயின்றிடுங்
கலைப யில்கென வென்னை விடுத்தனன்;
அருமை மிக்க மயிலைப் பிரிந்துமிவ்
வற்பர் கல்வியி னெஞ்சு பொருந்துமோ? (2)

கணிதம் பன்னிரண் டாண்டு பயில்வர்பின்
கார்கொள் வானிலோர் மீனிலை தேர்ந்திலார்
அணிசெய் காவிய மாயிரங் கற்கினும்
ஆழ்ந்தி ருக்குங் கவியுளம் காண்கிலார்
வணிக மும்பொரு ளூலும் பிதற்றுவார்
வாழு நாட்டிற்பொ ருள்கெடல் கேட்டிலார்
துணியு மாயிரஞ் சாத்திர நாமங்கள்
சொல்லு வாரெட் டுணைப்பயன் கண்டிலார். (3)

கம்ப னென்றொரு மானிடன் வாழ்ந்ததும்
காளி தாசன் கவிதைபு னைந்ததும்
உம்பர் வானத்துக் கோளையு மீனையு
மோர்ந்த ளந்ததொர் பாஸ்கரன் மாட்சியும்
நம்ப ருந்திற லோடொரு பாணினி
ஞால மீதிலி லக்கணங் கண்டதும்
இம்பர் வாழ்வி னிறுதிகண் டுண்மையின்
இயல்பு ணர்த்திய சங்கர னேற்றமும் (4)

சேரன் தம்பி சிலம்பை யிசைத்ததும்
தெய்வ வள்ளுவன் வான்மறை செய்ததும்
பாரில் நல்லிசைப் பாண்டிய சோழர்கள்
பார ளித்ததுந் தர்மம் வளர்த்ததும்
பேர ருட்சுடர் வாள்கொண் டசோகனார்
பிழை படாது புவித்தலங் காத்ததும்
வீரர் வாழ்த்த மிலேச்சர்தந் தீயகோல்
வீழ்த்தி வென்ற சிவாஜியின் வெற்றியும் (5)

அன்ன யாவு மறிந்திலர் பாரதத்
தாங்கி லம்பயில் பள்ளியுட் போகுநர் ;
முன்னர் நாடு திகழ்ந்த பெருமையும்
மூண்டி ருக்குமிந் நாளி னிகழ்ச்சியும்
பின்னர் நாடுறு பெற்றியுந் தேர்கிலார்
பேடிக் கல்வி பயின்றுழல் பித்தர்கள் ;
என்ன கூறிமற் றெங்ஙன் உணர்த்துவேன்
இங்கி வர்க்கென துள்ள மெரிவதே ! (6)

சூதி லாத வுளத்தின னெந்தைதான்
சூழ்ந்தெ னக்கு நலஞ்செய ஞடியே
ஏதி லர்தருங் கல்விப் படுகுழி
ஏறி யுய்தற் கரிய கொடும்பிலம்
தீதியன்ற மயக்கமு மையமும்
செய்கை யாவினு மேயசி ரத்தையும்
வாதும் பொய்மையுமென் ற விலங்கினம்
வாழும் வெங்குகைக் கென்னை வழங்கினன். (7)

ஐய ரென் றுந் துரையென் று மன்றெனக்
காங்கி லக்கலை யென்ருென் றுணர்த்திய
பொய்ய ருக்கிது கூறுவன் கேட்பிரேல்:
'பொழுதெ லாமுங்கள் பாடத்திற் போக்கினான்
மெய்ய யர்ந்து விழிகுழி வெய்திட
வீறி ழந்தென துள்ளநொய் தாகிட
ஐயம் விஞ்சிச் சுதந்திர நீங்கியென்
அறிவு வாரித் துரும்பென் றலைந்ததால்.' (8)

செலவு தந்தைக்கோ ராயிரஞ் சென்றது;
தீதெ னக்குப் பல்லாயிரஞ் சேர்ந்தன;
நலமொ ரெட்டுணை யுங்கண்டி லேனிதை
நாற்ப தாயிரங் கோயிலிற் சொல்லுவேன்.
சிலமுன் செய்தன நல்வினையானுநந்
தேவி பாரதத் தன்னை யருளினும்
அலைவு றுத்துநம் பேரிருள் வீழ்ந்துநான்
அழிந்திடா தொருவாறு பிழைத்ததே. (9)

# 51. நாட்டுக் கல்வி.



(ஆங்கிலத்தில் ரவீந்திரநாதர் எழுதிய பாடலின் மொழிபெயர்ப்பு.)

1. விளக்கிலே திரி நன்கு சமைந்தது
மேவுவீர் இங்கு தீக் கொண்டு தோழரே!
களக்க முற்ற இருள் கடந் தேகுவார்
காலைச் சோதிக் கதிரவன் கோவிற்கே
துளக்கமுற்ற விண் மீனிடம் செல்லுவார்
தொகையில் சேர்ந்திட உம்மையும் கூவினர்.
களிப்பு மிஞ்சி ஒளியினைப் பண்டொரு
காலம் நீர்சென்று தேடிய தில்லையோ?

2. அன்று நுங்கள் கொடியினை முத்திட்டே
ஆசை யென்றவின் மீன்ஒளிர் செய்ததே;
தின்று நள்ளிருள் மாலை மயக்கத்தால்
சோம்பி நீரும் வழிநடை பிந்தினீர்
நின் றவிந்தன நுங்கள் விளக்கெலாம்
நீங்கள் கண்ட கனுக்க ளெல்லாம் இசை
குன்றித் தீக்குறி தோற்றும் இராப்புட்கள்
கூவு மாறுத் திருந்தன காண்டிரோ.

3. இன்னு மிங்கிருள் கூடி யிருப்பினும்
ஏங்குகின்ற நரகத் துயிர்கள் போல்
இன்னு மிங்கு வனத்திடை காற்றுத்தான்
ஓங்கும் ஓதை இருந்திடும் ஆயினும்

முன்னைக் காலத்தி னின்றெழும் பேரொலி
முறை முறைபல ஊழியின் ஊடுற்றே
பின்னை இங்கு வந்தெய்திய பேரொலி
போல மந்திர வேதத்தின் பேரொலி.

4. "இருளை நீக்கி ஒளியினைக் காட்டுவாய்,
இறப்பை நீக்கி, அமிர்தத்தை ஊட்டுவாய்"
அருளும் இந்த மறையொலி வந்திங்கே
ஆழ்ந்த தூக்கத்தில் வீழ்ந்திருப்பீர்தமைத்
தெருள் உறுத்தவும் நீர் எழுகில்லீரோ ?
தீயநாச உறக்கத்தில் வீழ்ந்த நீர்
மருளை நீக்கி அறிதிர் அறிதிரோ
வான் ஒளிக்கு மகா அர்இ யாம் என்றே.

## 52. தொழில்.

1. இரும்பைக் காய்ச்சி உருக்கிடுவீரே !
யந்திரங்கள் வகுத்திடு வீரே !
கரும்பைச் சாறு பிழிந்திடுவீரே !
கடலில் மூழ்கிநன் முத்தெடுப்பீரே !
அரும்பும் வேர்வை உதிர்த்துப் புவிமேல்
ஆயிரந் தொழில் செய்திடு வீரே !
பெரும்புகழ் நுமக் கேயிசைக் கின்றேன்.
பிரம தேவன் கலையிங்கு நீரே !

2. மண் ணெடுத்துக் குடங்கள் செய்வீரே!
மரத்தை வெட்டி மனைசெய்கு வீரே!
உண்ணக் காய்கனி தந்திடு வீரே!
உழுது நன்செய்ப் பயிரிடுவீரே!
எண்ணெய், பால்நெய் கொணர்ந்திடு வீரே!
இழையை நூற்றுநல் லாடைசெய் வீரே!
விண்ணி னின்றெமை வானவர் காப்பார்;
மேவிப் பார்மிசைக் காப்பவர் நீரே!

3. பாட்டுஞ் செய்யுளுங் கோத்திடு வீரே!
பரத நாட்டியக் கூத்திடு வீரே!
காட்டும் வையப் பொருள்களின் உண்மை
கண்டு சாத்திரம் சேர்த்திடு வீரே!
நாட்டி லேயறம் கூட்டி வைப்பீரே!
நாடும் இன்பங்கள் ஊட்டி வைப்பீரே!
தேட்ட மின்றி விழியெதிர்காணும்
தெய்வ மாக விளங்குவிர் நீரே!

---

## 53. தமிழ்த் தாய்.

தன் மக்களைப் புதிய சாத்திரம் வேண்டுதல்.

(தாயுமானவர் ஆனந்தக் களிப்பு சந்தம்)

1. ஆதிசிவன் பெற்றுவிட்டான்—என்னை
ஆரிய மைந்தன் அகத்திய னென்றோர்
வேதியன் கண்டு மகிழ்ந்த—நிறை
மேவும் இலக்கணஞ் செய்து கொடுத்தான்.

2. மூன்று குலத்தமிழ் மன்னர்—என்னை
மூண்டநல் லன்பொடு நித்தம் வளர்த்தார்;
ஆன்ற மொழிகளினுள்ளே—உயர்
ஆரியத்திற்கு நிகரென வாழ்ந்தேன்.

3. கள்ளையுந் தீயையுஞ் சேர்த்து—நல்ல
காற்றையும் வான வெளியையுஞ் சேர்த்து;
தெள்ளு தமிழ்ப்புல வோர்கள்—பல
தீஞ்சுவைக் காவியஞ் செய்து கொடுத்தார்.

4. சாத்திரங் கள்பல தந்தார்—இந்தத்
தாரணியெங்கும் புகழ்ந்திட வாழ்ந்தேன்;
நேத்திரங் கெட்டவன் காலன்—தன்முன்
நேர்ந்த தனைத்துந் துடைத்து முடிப்பான்

5. நன்றென்றுந் தீதென்றும் பாரான்—முன்பு
நாடும் பொருள்கள் அனைத்தையும் வாரிச்
சென்றிடுங் காட்டுவெள் ளம்போல்—வையச்
சேர்க்கை யனைத்தையுங் கொன்று நடப்பான்

6. கன்னிப் பருவத்தில் அந்நாள்—என்றன்
காதில் விழுந்த திசைமொழி யெல்லாம்
என்னென்ன வோபெய ருண்டு—பின்னர்
யாவும் அழிவுற் றிறந்தன கண்டீர்.

7. தந்தை அருள்வலி யாலும்—முன்பு
சான்ற புலவர் தவவலி யாலும்
இந்தக் கணமட்டுங் காலன்—என்னை
ஏறிட்டுப் பார்க்கவும் அஞ்சி யிருந்தான்.

8. இன்றொரு சொல்லினைக் கேட்டேன்!—இனி
ஏது செய்வேன்? என தாருயிர் மக்காள்!
கொன்றிடல் போலொரு வார்த்தை—இங்கு
கூறத் தகாதவன் கூறினன் கண்டீர்!

9. "புத்தம் புதிய கலைகள்—பஞ்ச
பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்;
மெத்த வளருது மேற்கே—அந்த
மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை.

10. சொல்லவுங் கூடுவதில்லை—அவை
சொல்லுந் திறமை தமிழ்மொழிக் கில்லை;
மெல்லத் தமிழினிச் சாகும்—அந்த
மேற்கு மொழிகள் புவிமிசை யோங்கும்"

11. என்றந்தப் பேதை உரைத்தான்—ஆ!
இந்த வசையெனக் கெய்திட லாமோ!
சென்றிடுவீ ரெட்டுத்திக்கும்—கலைச் [பீர்!
செல்வங்கள் யாவுங் கொணர்ந் திங்கு சேர்ப்-

12. தந்தை யருள்வலி யாலும்—இன்று
சார்ந்த புலவர் தவவலி யாலும்
இந்தப் பெரும்பழி தீரும்—புகழ்
ஏறிப் புவிமிசை யென்று மிருப்பேன்.

# 54. தமிழ்.



1. யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல்
இனிதாவ தெங்குங் காணோம்.
பாமரராய், விலங்குகளாய், உலகனைத்தும்
இகழ்ச்சி சொலப் பான்மை கெட்டு
நாமமது தமிழரெனக் கொண்டிங்கு
வாழ்ந்திடுதல் நன்றோ ? சொல்லீர் !
தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும் வகை செய்தல் வேண்டும்.

2. யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல்
வள்ளுவர் போல், இளங்கோவைப் போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை, உண்மை
வெறும் புகழ்ச்சி யில்லை ;
ஊமையராய்ச் செவிடர்களாய்க் குருடர்களாய்
வாழ்கின்றோம் ; ஒரு சொற் கேளீர் !
சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்
தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர் !

3. பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ் மொழியிற் பெயர்த்தல் வேண்டும் ;
இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ் மொழியில் இயற்றல் வேண்டும் ;
மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்
சொல்வதிலோர் மகிமை யில்லை ;

திறமான புலமையெனில் வெளி நாட்டோர்
அதை வணக்கஞ் செய்தல் வேண்டும்.

4. உள்ளத்தில் உண்மையொளி யுண்டாயின்
வாக்கினிலே ஒளியுண்டாகும்;
வெள்ளத்தின் பெருக்கைப்போற்கலைப்பெருக்கும்
கவிப்பெருக்கும் மேவு மாயின்
பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெலாம்
விழிபெற்றுப் பதவி கொள்வார்;
தெள்ளுற்ற தமிழமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார்.

---

# 55. செந்தமிழ் நாடு.

1. செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
தேன் வந்து பாயுது காதினிலே—எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சி னிலே—ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே—எங்கள்
(செந்தமிழ்)

2. வேதம் நிறைந்த தமிழ் நாடு—உயர்
வீரம் செறிந்த தமிழ் நாடு—நல்ல
காதல் புரியும் அரம்பையர் போலிளங்
கன்னியர் சூழ்ந்த தமிழ் நாடு.
(செந்தமிழ்)

3. காவிரி தென்பெண்ணை பாலாறு—தமிழ்
கண்ட தோர் வையை பொருநை நதி—யென
மேவிய யாறு பல வோடத்—திரு
மேனி செழித்த தமிழ்நாடு.
(செந்தமிழ்)

4. முத்தமிழ் மாமுனி நீள் வரையே—நின்று
மொய்ம்புறக் காக்குந் தமிழ் நாடு—செல்வம்
எத்தனை யுண்டு புவி மீதே—அவை
யாவும் படைத்த தமிழ் நாடு.
(செந்தமிழ்)

5. நீலத் திரைக்கட லோரத்திலே—நின்று
நித்தந் தவஞ் செய் குமரி யெல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடையே புகழ்
மண்டிக் கிடக்குந் தமிழ் நாடு. (செந்தமிழ்)

6. கல்வி சிறந்த தமிழ் நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ் நாடு—நல்ல
பல்வித மாயின சாத்திரத்தின் மணம்
பாரெங்கும் வீசும் தமிழ் நாடு. (செந்தமிழ்)

7. வள்ளுவன் தன்னை உலகினுக்கே—தந்து
வான்புகழ் கொண்ட தமிழ் நாடு—நெஞ்சை
அள்ளும் சிலப்பதி கார மென் றோர்மணி
யாரம் படைத்த தமிழ் நாடு.
(செந்தமிழ்)

8. சிங்களம் புட்பகம் சாவக—மாதிய
தீவு பலவினுஞ் சென்றேறி—அங்கு
தங்கள் புலிக் கொடி மீன் கொடியும் நின்று
சால்புறக் கண்டவர் தாய்நாடு.
(செந்தமிழ்)

9. விண்ணையிடிக்கும் தலை யிமயம்—எனும்
வெற்பை யடிக்கும் திறனுடையார்—சமர்
பண்ணிக் கலிங்கத் திருள் கெடுத்தார் தமிழ்ப்
பார்த்திவர் நின்ற தமிழ் நாடு.
(செந்தமிழ்)

10. சீனமிசிரம் யவன ரகம்—இன்னும்
தேசம் பலவும் புகழ் வீசிக்—கலை
ஞானம் படைத் தொழில் வாணிபமும் மிக
நன்று வளர்த்த தமிழ் நாடு.
(செந்தமிழ்)

# 56. தமிழ் மொழி வாழ்த்து.

தான தனத்தன தான தனத்தன
தான தந்தான.

1. வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ் மொழி
வாழிய வாழிய வே.

2. வான மளந்தது அனைத்தும் மளந்திடு
வண் மொழி வாழிய வே.

3. ஏழ்கடல் வைப்பினுந் தன் மணம் வீசி
யிசை கொண்டு வாழிய வே.

4. எங்கள் தமிழ் மொழி எங்கள் தமிழ் மொழி
என்றென்றும் வாழிய வே.

5. சூழ்கலி நீங்கத் தமிழ் மொழி யோங்கத்
துலங்குக வைபக மே.

6. தொல்லை வினைதரு தொல்லை யகன்று
சுடர்க தமிழ் நாடே.

7. வாழ்க தமிழ் மொழி வாழ்க தமிழ் மொழி
வாழ்க தமிழ் மொழியே.

8. வானம் அறிந்த தனைத்தும் அறிந்து
வளர் மொழி வாழிய வே.

# 57. புது வருஷம்.



ஆசிரியப் பா.

வாழிய செந்தமிழ்! வாழ்க நற் றமிழர்!
வாழிய பாரத மணித் திரு நாடு!
இன்றெமை வருத்தும் இன்னல்கள் மாய்க!
நன்மை வந் தெய்துக! தீதெலாம் நலிக!
அறம் வளர்ந்திடுக! மற மடி வுறுக!
ஆரிய நாட்டினர் ஆண்மையோ டியற்றுஞ்
சீரிய முயற்சிகள் சிறந்துமிக் கோங்குக!
நந் தேயத்தினர் நாடொறும் உயர்க!
வந்தே மாதரம்! வந்தே மாதரம்!

## அனுபந்தம் 1.

# ஜாதீய கீதம்.



பங்கிம் சந்திர சட்டோபாத்யாயர் வங்காளியில்
இயற்றிய "வந்தே மாதரம்" கீதம்.

*ஸுஜலாம், ஸுபலாம் மலயஜ ஶீதலாம்*
*ஸஸ்ய ஶ்யாமலாம் மாதரம்.* (வந்தே)

1. *ஶுப்ர ஜ்யோத்ஸ்னா புலகித யாமினீம்*
*புல்ல குஸுமித த்ரும தள ஶோபினீம்*
*ஸுஹாஸினீம், ஸுமதுர பாஷிணீம்*
*ஸுகதாம், வரதாம், மாதரம்.* (வந்தே)

2. *ஸப்த கோடி கண்ட கலகல நிநாத கராலே*
*த்விஸப்த கோடி புஜைர் த்ருத கரகர வாலே*
*கே போலே, மா தமி அபலே*
*பஹுபல தாரிணீம், நமாமி தாரிணீம்*
*ரிபுதள வாரிணீம், மாதரம்.* (வந்தே)

3. *தமி வித்யா, தமி தர்ம,*
*தமி ஹ்ருதி, தமி மர்ம,*
*த்வம்ஹி ப்ராணா: சரீரே*
*பாஹுதே தமி மா சக்தி*
*தொமா ரேயி ப்ரதிமா கடிமந்திரே மந்திரே.*
(வந்தே)

4. த்வம்ஹி துர்கா தசப்ரஹரண தாரிணீ
கமலா கமலதல விஹாரிணீ
வாணீ வித்யா தாயினீ, நமாமி த்வாம். (வந்தே)

5. நமாமி, கமலாம், அமலாம் அதுலாம்
ஸுஜலாம், ஸுபலாம் மாதரம்
ஶ்யாமலாம், ஸரலாம், ஸுஸ்மிதாம் பூஷிதாம்
பரணீம், தரணீம், மாதரம். (வந்தே மாதரம்)

# தோத்திரப் பாடல்கள்.

## 1. ஆறு துணை.

ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்—பரா சக்தி
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்.
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி—ஓம் சக்தி
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்.

1. கணபதி ராயன்—அவ னிரு
காலைப் பிடித் திடுவோம்
குண முயர்ந் திடவே—விடுதலை
கூடி மகிழ்ந் திடவே.
(ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்)

2. சொல்லுக் கடங்கா வே—பரா சக்தி
சூரத் தனங்க ளெல்லாம்;
வல்லமை தந்திடு வாள்—பரா சக்தி
வாழி யென்றே துதிப்போம்.
(ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்)

3. வெற்றி வடிவேலன்—அவனுடை
வீரத்தினைப் புகழ்வோம்;
சுற்றி நில்லாதே போ!—பகையே!
துள்ளி வருகுது வேல்.
(ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்)

4. தாமரைப் பூவினிலே—சுருதியைத்
தனி யிருந் துரைப்பாள்
பூமணித் தாளினையே—கண்ணிலொற்றிப்
புண்ணிய மெய் திடு வோம்.
(ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்)

5. பாம்புத் தலை மேலே—நடஞ் செயும்
பாதத்தினைப் புகழ் வோம்
மாம்பழ வாயினிலே—குழலிசை
வண்மை புகழ்ந் திடுவோம்.
(ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்)

6. செல்வத் திரு மகளைத்—திடங் கொண்டு
சிந்தனை செய்திடுவோம்
செல்வ மெல்லாந் தருவாள்—நம தொளி
திக் கனைத்தும் பரவும்.
(ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்)

---

## 2. பக்தி.

ராகம்—பிலஹரி.

பல்லவி.

பக்தியினாலே—தெய்வ—பக்தியினாலே.

சரணங்கள்.

1. பக்தியினாலே—இந்தப்
பாரினிலெய்திடும் மேன்மைகள் கேளடீ!
சித்தந் தெளியும்,—இங்கு
செய்கை யனைத்திலும் செம்மை பிறந்திடும்,

வித்தைகள் சேரும்,—நல்ல
வீர ருறவு கிடைக்கும், மனத்திடைத்
தத்துவ முண்டாம்,—நெஞ்சிற்
சஞ்சல நீங்கி உறுதி விளங்கிடும், (பக்தியினாலே)

2. காமப் பிசாசைக்—குதிக்
கால் கொண்டடித்து விழுத்திட லாகும்; இத்
தாமஸப் பேயைக்—கண்டு
தாக்கி மடித்திட லாகும் ; எந் நேரமும்
தீமையை எண்ணி—அஞ்சுந்
தேம்பற் பிசாசைத் திருகியெறிந்து பொய்ந்
நாம மில்லாதே—உண்மை
நாமத்தினாலிங்கு நன்மை விளைந்திடும்,
(பக்தியினாலே)

3. ஆசையைக் கொல்வோம்,—புலை
யச்சத்தைக் கொன்று பொசுக்கிடுவோம், கெட்ட
பாச மறுப்போம்,—இங்கு
பார்வதி சக்தி விளங்குதல் கண்டதை
மோசஞ் செய்யாமல்—உண்மை
முற்றிலுங் கண்டு வணங்கி வணங்கியோர்
ஈசனைப் போற்றி—இன்பம்
யாவையு முண்டு புகழ்கொண்டு வாழ்குவம்,
(பக்தியினாலே)

4. சோர்வுகள் போகும்,—பொய்ச்
சுகத்தினைத் தள்ளிச் சுகம்பெற லாகும், நற்
பார்வைகள் தோன்றும்,—மிடிப்
பாம்பு கடித்த விஷமகன் றேநல்ல

சேர்வைகள் சேரும்,—பல
செல்வங்கள் வந்து மகிழ்ச்சி விளைந்திடும்,
தீர்வைகள் தீரும்,—பிணி
தீரும், பலபல இன்பங்கள் சேர்ந்திடும்,
(பக்தியினாலே)

5. கல்வி வளரும்,—பல
காரியங் கையுறும், வீரிய மோங்கிடும்,
அல்ல லொழியும்,—நல்ல
ஆண்மை யுண்டாகும், அறிவு தெளிந்திடும்,
சொல்லுவதெல்லாம்—மறைச்
சொல்லினைப் போலப் பயனுள தாகும், மெய்
வல்லமை தோன்றும்,—தெய்வ
வாழ்க்கையுற்றேயிங்கு வாழ்ந்திடலாம்,உண்மைப்
(பக்தியினாலே)

6. சோம்ப லழியும்,—உடல்
சொன்ன படிக்குநடக்கும், முடிசற்றுங்
கூம்புத லின்றி—நல்ல
கோபுரம் போல நிமிர்ந்த நிலைபெறும்,
வீம்புகள் போகும்,—நல்ல
மேன்மையுண்டாகிப் புயங்கள் பருக்கும், பொய்ப்
பாம்பு மடியும்,—மெய்ப்
பரம் வென்று நல்ல நெறிகளுண்டாய் விடும்,
(பக்தியினாலே)

7. சந்ததி வாழும்,—வெறுஞ்
சஞ்சலங் கெட்டு வலிமைகள் சேர்ந்திடும்,
'இந்தப் புவிக்கே—இங்கொர்
ஈசனுண்டாயின் அறிக்கையிட் டேனுன்றன்

கந்த மலர்த்தாள்—துணை ;
காதல் மகவு வளர்ந்திடவேண்டும், என்
சிந்தை யறிந்தே—அருள்
செய்திட வேண்டும்' என்றால் அருளெய்திடும்,
(பக்தியினாலே)

---

## 3. ஸரஸ்வதி ஸ்தோத்திரம்.

நொண்டிச் சிந்து.

1. எங்ஙனம் சென்றிருந்தீர்—என
தின்னுயிரே யென்றன் இசையமுதே
திங்களைக் கண்டவுடன்—கடல்
திரையினைக் காற்றினைக் கேட்டவுடன்
கங்குலைப் பார்த்தவுடன்—கடல்
காலையி லிரவியைத் தொழுதவுடன்
பொங்குவீர் அமிழ்தெனவே—அந்தப்
புதுமையிலே துயர் மறந்திருப்பேன்.

2. மாதமோர் நான்கா நீர்—அன்பு
வறுமையிலே யெனை வீழ்த்திவிட்டீர்.
பாதங்கள் போற்றுகின்றேன்—என்றன்
பாவமெலாங் கெட்டு ஞான கங்கை
நாதமொ டெப்பொழுதும்—என்றன்
நாவினிலே பொழிந்திட வேண்டும் ;
வேதங்க ளாக்கிடுவீர் !—அந்த
விண்ணவர் கண்ணிடை விளங்கிடுவீர் !

3. கண்மணி போன்றவரே !—இங்கு
காலையு மாலையுந் திருமகளாம்
பெண்மணி யின்பத்தையும்—சக்திப்
பெருமகள் திருவடிப் பெருமையையும்
வண்மையி லோதிடுவீர் !—என்றன்
வாயினு மதியினும் வளர்ந்திடுவீர் !
அண்மையி லிருந்திடுவீர் !—இனி
அடியனைப் பிரிந்திடல் ஆற்றுவனோ !

4. தானெனும் பேய் கெடவே,—பல
சஞ்சலக் குரங்குகள் தளைப்படவே,
வானெனும் ஒளிபெறவே,—நல்ல
வாய்மையிலே மதி நிலைத்திடவே,
வானெனப் பொழிந்திடுவீர் !—அந்தத்
திருமகள் சினங்களைத் தீர்த்திடுவீர் !
ஊனங்கள் போக்கிடுவீர் !—நல்ல
ஊக்கமும் பெருமையும் உதவிடுவீர் !

5. தீயினை நிறுத்திடுவீர் !—நல்ல
தீரமுந் தெளிவுமிங் கருள்புரிவீர் !
மாயையி லறிவிழந்தே—உம்மை
மதிப்பது மறந்தனன் பிழைகளெல்லாம்
தாயென வுமைப் பணிந்தேன்—பொறை
சார்த்தி நல் லருள்செய வேண்டுகின்றேன்;
வாயினிற் சபத மிட்டேன் ;—இனி
மறக்ககிலேன், எனை மறக்ககிலீர் !

## 4. ஸரஸ்வதி தேவியின் புகழ்.

ராகம்—ஆனந்த பைரவி. தாளம்—சாப்பு.

1. வெள்ளைத் தாமரைப் பூவி லிருப்பாள்
வீணை செய்யும் ஒலியி லிருப்பாள்
கொள்ளை யின்பங் குலவு கவிதை
கூறுபாவலர் உள்ளத் திருப்பாள்
உள்ள தாம்பொருள் தேடி யுணர்ந்தே
ஓதும் வேதத்தி னுள்ளின் றொளிர்வாள்
கள்ள மற்ற முனிவர்கள் கூறும்
கருணை வாசகத் துட்பொரு ளாவாள்.
(வெள்ளைத்)

2. மாதர் தீங்குரற் பாட்டி லிருப்பாள்
மக்கள் பேசும் மழலையி லுள்ளாள்
கீதம் பாடும் குயிலின் குரலைக்
கிளியினுவை யிருப்பிடங் கொண்டாள்
கோதகன்ற தொழி லுடைத்தாகிக்
குலவு சித்திரம் கோபுரம் கோயில்
ஈதனைத்தின் எழிலிடை யுற்றாள்
இன்பமே வடி வாகிடப் பெற்றாள்.
(வெள்ளைத்)

3. வஞ்சமற்ற தொழில் புரிந் துண்டு
வாழு மாந்தர் குல தெய்வ மாவாள்
வெஞ்சமர்க் குயி ராகிய கொல்லர்
வித்தை யோர்ந்திடு சிற்பியர் தச்சர்

மிஞ்ச நற் பொருள் வாணிகஞ் செய்வோர்
வீர மன்னர் பின் வேதியர் யாரும்
தஞ்சமென்று வணங்கிடுந் தெய்வம்
தரணி மீதறி வாகிய தெய்வம்.
(வெள்ளைத்)

4. தெய்வம் யாவும் உணர்ந்திடுந் தெய்வம்
தீமைகாட்டி விலக்கிடுந் தெய்வம்
உய்வ மென்ற கருத்துடை யோர்கள்
உயிரினுக் குயி ராகிய தெய்வம்
செய்வ மென்றொரு செய்கை யெடுப்போர்
செம்மை நாடிப் பணிந்திடு தெய்வம்
கைவருந்தி உழைப்பவர் தெய்வம்
கவிஞர் தெய்வம், கடவுளர் தெய்வம்.
(வெள்ளைத்)

5. செந்தமிழ் மணி நாட்டிடையுள்ளீர்!
சேர்ந்தித் தேவை வணங்குவம் வாரீர்!
வந்தனம் மிவட் கேசெய்வ தென்றால்
வாழி யஃதிங் கெளிதன்று கண்டீர்!
மந்திரத்தை முணுமுணுத் தேட்டை
வரிசையாக அடுக்கி யதன் மேல்
சந்தனத்தை மலரை யிடுவோர்
சாத்திரம் மிவள் பூசனை யன்றாம்.
(வெள்ளைத்)

6. வீடு தோறும் கலையின் விளக்கம்
வீதி தோறும் இரண்டொரு பள்ளி
நாடு முற்றிலும் உள்ளன வூர்கள்
நகர்க ளெங்கும் பல பல பள்ளி

தேடு கல்வியி லாததொ ரூரைத்
தீயினுக் கிரை யாக மடுத்தல்
கேடு தீர்க்கும் அமுதமென் அன்னை
கேண்மை கொள்ள வழியிவை கண்டீர்.
(வெள்ளைத்)

7. யூனர் தேசம் யவனர் தந் தேசம்
உதய ஞாயிற் றொளிபெறு நாடு
சேனகன்ற தோர் சிற்றடிச் சீனம்
செல்வப் பார சிகப் பழந்தேசம்
தோலைத்த துருக்கம் மிசிரம்
சூழ் கடற் கப் புறத்தினி லின்னும்
காணும் பற்பல நாட்டிடை யெல்லாம்
கல்வித் தேவி யொளிமிகுந் தோங்க.
(வெள்ளைத்)

8. ஞான மென்பதோர் சொல்லின் பொருளாம்
நல்ல பாரத நாட்டிடை வந்தீர்!
ஊன மின்று பெரிதிழைக் கின்றீர்!
ஓங்கு கல்வி யுழைப்பை மறந்தீர்!
மான மற்று விலங்குக ளொப்ப
மண்ணில் வாழ்வதை வாழ்வென லாமோ?
போனதற்கு வருந்துதல் வேண்டா,
புன்மை தீர்ப்ப முயலுவம் வாரீர்!
(வெள்ளைத்)

9. இன்னறுங் கனிச் சோலைகள் செய்தல்
இனிய நீர்த்தண் சுனைக ளியற்றல்
அன்ன சத்திர மாயிரம் வைத்தல்
ஆலயம் பதி னாயிர நாட்டல்

பின்ன ருள்ள தருமங்கள் யாவும்
பெயர் விளங்கி யொளிர நிறுத்தல்
அன்ன யாவினும் புண்ணியங் கோடி
ஆங்கோ ரேழைக் கெழுத் தறிவித்தல்.
(வெள்ளைத்)

10. நிதி மிகுத்தவர் பொற்குவை தாரீர்!
நிதி குறைந்தவர் காசுகள் தாரீர்!
அதுவு மற்றவர் வாய்ச்சொ லருளீர்!
ஆண்மை யாள ருழைப்பினை நல்கீர்!
மதுரத் தேமொழி மாதர்க ளெல்லாம்
வாணி பூசைக் குரியன பேசீர்!
எதுவும் நல்கி யிங்கெவ்வகை யானும்
இப்பெருந் தொழில் நாட்டுவம் வாரீர்!
(வெள்ளைத்)

---

## 5. லக்ஷ்மி தேவி—சரண் புகுதல்.

1. மாதவன் சக்தியினைச்—செய்ய
மலர்வளர் மணியினை வாழ்த்திடுவோம்
போதுமிவ் வறுமையெலாம்—எந்தப்
போதிலுஞ் சிறுமையின் புகைதனிலே
வேதனைப் படுமனமும்—உயர்
வேதமும் வெறுப்புறச் சோர்மதியும்
வாதனை பொறுக்கவில்லை—அன்னை
மாமக ளடியிணை சரண்புகுவோம்.

2. கீழ்களி னவமதிப்பும்—தொழில்
கெட்டவ ரிணக்கமுங் கிணற்றினுள்ளே
மூழ்கிய விளக்கினைப் போல்—செய்யு
முயற்சியெல் லாங்கெட்டு முடிவதுவும்
ஏழ்கட லோடியுமோர்—பயன்
எய்திட வழியின்றி யிருப்பதுவும்
வீழ்கவிக்கொடு நோய்தான்—வைய
மீதினில் வறுமையோர் கொடுமை யன்றோ ?

3. பாற்கட லிடைப் பிறந்தாள்—அது
பயந்நல் லமுதத்தின் பான்மைகொண்டாள்
ஏற்குமோர் தாமரைப்பூ—அதில்
இணைமலர்த் திருவடி இசைந்திருப்பாள்
நாற்கரந் தானுடையாள்—அந்த
நான்கினும் பலவகைத் திருவுடையாள்
வேற்கரு விழியுடையாள்—செய்ய
மேனியள் பசுமையை விரும்பிடுவாள்

4. நாரணன் மார்பினிலே—அன்பு
நலமுற நித்தமு மிணைந்திருப்பாள்
தோரணப் பந்தரிலும்—பசுந்
தொழுவிலும் சுடர்மணி மாடத்திலும்
வீரர்தந் தோளினிலும்—உடல்
வெயர்த்திட வுழைப்பவர் தொழில்களிலும்
பாரதி சிரத்தினிலும்—ஒளி
பரவிட வீற்றிருந் தருள் புரிவாள்.

5. பொன்னிலு மணிகளிலும்—நறும்
பூவிலுஞ் சாந்திலும் விளக்கினிலும்
கன்னியர் நகைப்பினிலும்—செழுங்
காட்டிலும் பொழிலிலும் கழனியிலும்

முன்னிய துணிவினிலும்—மன்னர்
முகத்திலும் வாழ்ந்திடும் திருமகளைப்
பன்னிநற் புகழ்பாடி—அவள்
பதமலர் வாழ்த்திநற் பதம்பெறுவோம்.

6. மண்ணினுட் கனிகளிலும்—மலை
வாய்ப்பிலும் வார்கட லாழத்திலும்
புண்ணிய வேள்வியிலும்—உயர்
புகழிலு மதியிலும் புதுமையிலும்
பண்ணுநற் பாவையிலும்—நல்ல
பாட்டிலுங் கூத்திலும் படத்தினிலும்
நண்ணிய தேவிதனை—எங்கள்
நாவிலும் மனத்திலும் நாட்டிடுவோம்.

7. வெற்றிகொள் படையினிலும்—பல
விநயங்க ளறிந்தவர் கடையினிலும்
நற்றவ நடையினிலும்—நல்ல
நாவலர் தேமொழித் தொடரினிலும்
உற்றசெந் திருத்தாயை—நித்தம்
உவகையிற் போற்றியிங் குயர்ந்திடுவோம்;
கற்றபல் கலைகளெல்லாம்—அவள்
கருணைநல் லொளிபெறக் களிதவிர்ப்போம்.

## 6. லக்ஷ்மி பிரார்த்தனை.

### திரு வேட்கை.

ராகம்—நாட்டை. தாளம்—சதுஸ்ர ஏகம்.

1. மலரின் மேவு திருவே;—உன்மேல்
மையல் பொங்கி நின்றேன்;
நிலவு செய்யு முகமும்—காண்பார்
நினை வழிக்கும் விழியும்
கலகலென்ற மொழியும்—தெய்வக்
களி துலங்கு நகையும்
இலகு செல்வ வடிவும்—கண்டுன்
இன்பம் வேண்டு கின்றேன்.

2. கமல மேவும் திருவே!—நின்மேல்
காதலாகி நின்றேன்;
குமரி நின்னையிங்கே—பெற்றோர்
கோடியின்ப முற்றார்;
அமரர் போல வாழ்வேன்,—என்மேல்
அன்பு கொள்வையாயின்;
இமயவெற்பின் மோத,—நின்மேல்
இசைகள் பாடி வாழ்வேன்;

3. வாணி தன்னை யென்றும்—நினது
வரிசை பாட வைப்பேன்;
நாணி யேகலாமோ?—என்னை
நன்கறிந்திலாயோ?
பேணிவைய மெல்லாம்—நன்மை
பெருக வைக்கும் விரதம்
பூணுமைந்த ரெல்லாம்—கண்ணன்
பொறிக ளாவ ரன்றோ?

4. பொன்னு நல்லமணியும்—சுடர்செய்
பூண்க ளேந்தி வந்தாய் !
மின்னு நின்றன் வடிவிற்—பணிகள்
மேவி நிற்கு மழகை
என்னுரைப்ப னேடீ !—திருவே !
என்னுயிர்க் கொ ரமுதே !
நின்னை மார்பு சேரத்—தழுவி
நிக ரிலாது வாழ்வேன் ;

5. செல்வ மெட்டு மெய்தி—நின்னாற்
செம்மை யேறி வாழ்வேன் ;
இல்லை என்ற கொடுமை—உலகில்
இல்லையாக வைப்பேன் ;
முல்லை போன்ற முறுவல்—காட்டி,
மோக வாதை நீக்கி,
எல்லை யற்ற சுவையே !—எனைநீ
என்றும் வாழ வைப்பாய்.

---

## 7. ஸ்ரீதேவி ஸ்துதி.

### திருமகள்.

ராகம்—சக்கரவாகம். தாளம்—திஸ்ர ஏகம்.

1. நித்தமுனை வேண்டி மனம்
நினைப்பதெல்லாம் நீயாய்ப்
பித்தனைப்போல் வாழ்வதிலே
பெருமையுண்டோ ? திருவே !

சித்தவுறுதி கொண்டிருந்தார்
செய்கை யெல்லாம் வெற்றி கொண்டே
உத்தம நிலை சேர்வ ரென்றே
உயர்ந்த வேத முரைப்ப தெல்லாம்
சுத்த வெறும் பொய்யோடீ?
சுடர் மணியே! திருவே,
மெத்த மயல் கொண்டு விட்டேன்
மேவிடுவாய், திருவே!

2. உன்னையன்றி யின்ப முண்டோ
உலகமிசை வேறே?
பொன்னை வடிவென் றுடையாய்!
புத்தமுதே, திருவே!
மின்னொளி தரு நன் மணிகள்
மேடை யுயர்ந்த மாளிகைகள்
வன்ன முடைய தாமரைப் பூ
மணிக்குள முள்ள சோலைகளும்
அன்னம் நறு நெய் பாலும்
அதிசயமாத் தருவாய்!
நின்னருளை வாழ்த்தி என்றும்
நிலைத்திருப்பேன், திருவே!

3. ஆடுகளு மாடுகளும் அழகுடைய பரியும்
வீடுகளு நெடுநிலமும் விரைவினிலே தருவாய்!
ஈடு நினக் கொர் தெய்வமுண்டோ?
எனக் குனை யன்றிச் சரணமுண்டோ?
வாடு நிலத்தைக் கண் டிரங்கா
மழையினைப் போல் உள்ள முண்டோ?
நாடு மணிச் செல்வ மெல்லாம்
நன்கருள்வாய், திருவே!
பீடுடைய வான் பொருளே
பெருங் களியே, திருவே!

## 8. நவராத்திரிப் பாட்டு.

உஜ்ஜயினீ ! நித்ய கல்யாணீ !
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி
(உஜ்ஜயினீ !)

உஜ்ஜய காரண சங்கர தேவீ
உமா ஸரஸ்வதீ ஸ்ரீ மாதா ஸா.
(உஜ்ஜயினீ !)

வாழி புனைந்து மஹேசுவர தேவன்,
தோழி, பதங்கள் பணிந்து துணிந்தனம்.
(உஜ்ஜயினீ !)

ஸத்ய யுகத்தை அகத்திலிருத்தி
நிறுத்தி தைநமக்கருளிச் செய்யும் உத்தமி
(உஜ்ஜயினீ !)

---

## 9. நவராத்திரிப் பாட்டு.

பராசக்தி: (மூன்றும் ஒன்றாகிய மூர்த்தி).

1. மாதா பராசக்தி வையமெலா நீ நிறைந்தாய் !
ஆதாரமுன்னையல்லால் ஆரெமக்குப் பாரினிலே !
ஏதாயினும் வழி நீ சொல்வாய், எமதுயிரே !
வேதாவின் தாயே ! மிகப் பணிந்து வாழ்வோமே.

வாணி.

2. வாணி கலைத் தெய்வம் மணிவாக் குதவிடுவாள்
ஆணி முத்தைப் போலே அறிவு முத்து [மாலையினாள்
காணுகின்ற காட்சியாய்க் காண்ப தெல்லாங் [காட்டுவதாய்
மாணுயர்ந்து நிற்பாள் மலரடியே சூழ்வோமே.

ஸ்ரீ தேவி.

3. பொன்னரசி, நாரணனார் தேவி, புகழரசி
மின்னு நவரத்தினம்போல் மேனியழகுடையாள்
அன்னையவள் வையமெலாம் ஆதரிப்பாள் ஸ்ரீதேவி
தன்னிரு பொற்றாளே சரண்புகுந்து வாழ்வோ
[மே.

பார்வதி.

4. மலையிலேதான் பிறந்தாள், சங்கரனை மாலையிட்
[டாள்
உலையிலே யூதி உலகக் கனல் வளர்ப்பாள்
நிலையி லுயர்த்திடுவாள், நேரே அவள் பாதம்
தலையிலே தாங்கித் தரணிமிசை வாழ்வோமே.

---

## 10. மூன்று காதல்.

முதலாவது—ஸரஸ்வதி காதல்.

ராகம்—ஸரஸ்வதி மனோஹரி. தாளம்—திஸ்ர ஏகம்.

1. பிள்ளைப் பிராயத்திலே—அவள்
பெண்மையைக் கண்டு மயங்கிவிட் டேனங்கு
பள்ளிப் படிப்பினிலே—மதி
பற்றிட வில்லை யெனிலுந் தனிப்பட
வெள்ளை மலரணை மேல்—அவள்
வீணையுங் கையும் விரிந்த முகமலர்
விள்ளும் பொருளமுதும்—கண்டேன்
வெள்ளை மனது பறி கொடுத்தேனம்மா!

2. ஆடி வருகையிலே—அவள்
அங்கொரு வீதி முனையினிற்பாள்; கையில்
ஏடு தரித்திருப்பாள்,—அதில்
இங்கித மாகப்பதம் படிப்பாள், அதை
நாடி யருகணைந்தால்,—பல
ஞானங்கள் சொல்லி யினிமை செய்வாள்; "இன்று
கூடி மகிழ்வ" மென்றால்,—விழிக்
கோணத்திலே நகை காட்டிச் செல்வாளம்மா!

3. ஆற்றங் கரைதனிலே—தனி
யானதொர் மண்டப மீதினிலே, தென்றற்
காற்றை நுகர்ந் திருந்தேன்,—அங்கு
கன்னிக் கவிதை கொணர்ந்து தந்தாள்; அதை
ஏற்று மனமகிழ்ந்தே "அடி
என்னோ டிணங்கி மணம் புரிவாய்" என்று
போற்றிய போதினிலே,—இளம்
புன்னகை பூத்து மறைந்து விட்டாளம்மா!

4. சித்தந் தளர்ந்த துண்டோ?—கலைத்
தேவியின்மீது விருப்பம் வளர்ந்தொரு
பித்துப் பிடித்ததுபோல்—பகற்
பேச்சு மிரவிற் கனவு மவளிடை
வைத்த நினைவை யல்லால்—பிற
வாஞ்சை யுண்டோ? வய தங்ஙனமே யிரு
பத்திரண் டாமளவும்—வெள்ளைப்
பண்மகள் காதலைப்பற்றி நின்றேனம்மா!

## இரண்டாவது—லக்ஷ்மி காதல்.

ராகம்—ஸ்ரீராகம். தாளம்—திஸ்ர ஏகம்.

5. இந்த நிலையினிலே—அங்கோர்
இன்பப் பொழிலி னிடையினில் வேறொரு
சுந்தரி வந்து நின்றாள்—அவள்
சோதி முகத்தின் அழகினைக் கண்டென்றன்
சிந்தை திறை கொடுத்தேன்—அவள்
செந்திரு வென்று பெயர் சொல்லினாள்; மற்றும்
அந்தத் தினமுதலா—நெஞ்சம்
ஆரத் தழுவிட வேண்டுகின் றேனம்மா!

6. புன்னகை செய்திடுவாள்,—அற்றைப்
போது முழுது மகிழ்ந்திருப்பேன்; சற்றென்
முன்னின்று பார்த்திடுவாள்,—அந்த
மோகத்திலே தலை சுற்றிடுங் காண்; பின்னர்
என்ன பிழைகள் கண்டோ—அவள்
என்னைப் புறக் கணித்தேகிடுவாள்,—அங்கு
சின்னமும் பின்னமுமா—மனஞ்
சிந்தியுளமிக நொந்திடு வேனம்மா!

7. காட்டு வழிகளிலே,—மலைக்
காட்சியிலே, புனல் வீழ்ச்சியிலே, பல
நாட்டுப் புறங்களிலே,—நகர்
நண்ணு சில சுடர்மாடத்திலே, சில
வேட்டுவர் சார்பினிலே,—சில
வீரரிடத்திலும், வேந்தரிடத்திலும்,
மீட்டு மவள் வருவாள்—கண்ட
விந்தையிலே யின்ப மேற்கொண்டு போமம்மா!

## மூன்றாவது—காளி காதல்.

ராகம்—புன்னாகவராளி. தாளம்—திஸ்ர ஏகம்.

8. பின்னொ ரிராவினிலே—கரும்
பெண்மை யழகொன்று வந்தது கண்முன்பு;
கன்னி வடிவ மென்றே—களி
கண்டு சற்றே யருகிற் சென்று பார்க்கையில்,
அன்னை வடிவமடா! இவள்
ஆதி பரா சக்தி தேவியடா! இவள்
இன்னருள் வேண்டுமடா! பின்னர்
யாவு முலகில் வசப்பட்டுப் போமடா!

9. செல்வங்கள் பொங்கி வரும்;—நல்ல
தெள்ளறி வெய்தி நலம்பல சார்ந்திடும்;
அல்லும் பகலுமிங்கே—இவை
அத்தனை கோடிப் பொருளினுள்ளே நின்று
வில்லை யசைப்பவளை—இந்த
வேலை யனைத்தையும் செய்யும் வினைச்சியைத்
தொல்லை தவிர்ப்பவளை—நித்தம்
தோத்திரம் பாடித்தொழுதிடுவோமடா!

## 11. முருகன் பாட்டு.

ராகம்—நாட்டைக்குறிஞ்சி. தாளம்—ஆதி.

பல்லவி

முருகா—முருகா—முருகா.

சரணங்கள்.

1. வருவாய் மயில் மீ தினிலே
வடிவே லுடனே வருவாய்
தருவாய் நலமுந் தகவும் புகழுந்
தவமுந் திறமுந் தனமுங் கனமும். (முருகா)

2. அடியார் பலரிங் குளரே
அவரை விடுவித் தருள்வாய்
முடியா மறையின் முடிவே! அசுரர்
முடிவே கருதும் வடிவே லவனே! (முருகா)

3. சுருதிப் பொருளே, வருக.
துணிவே, கனலே, வருக.
கருதிக் கருதிக் கவலைப் படுவார்
கவலைக் கடலைக் கடியும் வடிவேல் (முருகா)

4. அமரா வதிவாழ் வுறவே
அருள்வாய்! சரணம், சரணம்!
குமரா, பிணியா வையுமே சிதறக்
குமுறும் சுடர்வேலவனே, சரணம். (முருகா)

5. அறிவா கியகோ யிலிலே
அருளா கியதாய் மடிமேல்
பொறிவே லுடனே வளர்வாய், அடியார்
புதுவாழ் வுறவே புவிமீ தருள்வாய். (முருகா)

6. குருவே, பரமன் மகனே,
குகையில் வளருங் கனலே,
தருவாய் தொழிலும் பயனும், அமரா
வமராதிப னே, சரணம் சரணம். (முருகா)

## 12. முருகன் பாட்டு.

1. வீரத் திருவிழிப் பார்வையும்—வெற்றி
வேலு மயிலுமென் முன்னின்றே—எந்த
நேரத் திலுமெனைக் காக்குமே ;—அன்னை
நீலி பராசக்தி தன்னருட்—கரை
யோரத்திலே புணை கூடுதே ;—கந்தன்
ஊக்கத்தை யென்னுள நாடுதே ;—மலை
வாரத் திலே விளை யாடுவான்—என்றும்
வானவர் துன்பத்தைச் சாடுவான்.

2. வேடர் கனியை விரும்பியே—தவ
வேடம் புனைந்து திரிகுவான் ;—தமிழ்
நாடு பெரும் புகழ் சேரவே—முனி
நாதனுக் கிம்மொழி கூறுவான் ;—சுரர்
பாடு விடிந்து மகிழ்ந்திட—இருட்
பார மலைகளைச் சீறுவான் ;—மறை
யேடு தரித்த முதல்வனும்—குரு
வென்றிட மெய்ப்புக ழேறுவான்.

3. தேவர் மகளை மணந்திடத்—தெற்குத்
தீவி லசுரனை மாய்த்திட்டான் ;—மக்கள்
யாவருக் குந்தலை யாயினன் ;—மறை
அர்த்த முணர்த்துநல் வாயினன்;—தமிழ்ப்

பாவலர்க் கின்னருள் செய்குவான்;—இந்தப்
பாரி லறமழை பெய்குவான்;—நெஞ்சின்
ஆவ லறிந்தருள் கூட்டுவான்;—நித்தம்
ஆண்மையும் வீரமு மூட்டுவான்.

4. தீவளர்த் தேபழ வேதியர்—நின்றன்
சேவகத் தின்புகழ் காட்டினார்;—ஒளி
மீவளருஞ் செம்பொ னாட்டினார்—நின்றன்
மேன்மையி னாலற நாட்டினார்;—ஐய,
நீ வளருங் குரு வெற்பிலே—வந்து
நின்றுநின் சேவகம் பாடுவோம்—வரம்
ஈவள் பராசக்தி யன்னைதான்—உங்கள்
இன்னருளே யென்று நாடுவோம்—நின்றன்
(வீரத் திருவிழிப்)

## 13. முருகக் கடவுள்மீது கிளித்தூது.

பல்லவி.

சொல்ல வல்லா யோ?—கிளியே
சொல்ல நீ வல்லாயோ?

அனுபல்லவி

வல்ல வேல் முருகன்—தனை யிங்கு
வந்து கலந்து மகிழ்ந்து குலா வென்று
(சொல்ல)

சரணங்கள்.

1. தில்லை யம்பலத்தே—நடனம்
செய்யும் அமரர் பிரான்—அவன்
செல்வத் திரு மகனை—இங்கு வந்து
சேர்ந்து கலந்து மகிழ்ந்திடுவா யென்று
(சொல்ல)

2. அல்லிக் குளத் தருகே—ஒரு நாள்
அந்திப் பொழுதி னிலே—அங்கொர்
முல்லைச் செடி யதன்பாற்—செய்த வினை
முற்று மறந்திடக் கற்ற தென்னே யென்று
(சொல்ல)

3. பாலை வனத் திடையே—தனைக் கைப்
பற்றி நடக்கை யிலே—தன் கை
வேலின் மிசை யாணை—வைத்துச் சொன்ன
விந்தை மொழிகளைச் சிந்தை செய்வாயென்று
(சொல்ல)

---

## 14. வேலன் பாட்டு.

ராகம்—புன்னுகவராளி. தாளம்—திஸ்ர ஏகம்.

1. வில்லினை யொத்த புருவம் வளைத்தனை,
வேலவா!—அங்கொர்
வெற்பு நொறுங்கிப் பொடிப் பொடி
யானது, வேலவா!

---

குறிப்பு:—வேலன் அல்லது சுப்பிரமணியக் கடவுள் என்பது ஆத்மாவின் வீர்ய ரூபமாகிய அக்நி தேவனுக்குப் பெயர். இஃது வேதப் பொருள்.

சொல்லினைத் தேனிற் குழைத் துரைப்பாள்
சிறுவள்ளியைக்—கண்டு
சொக்கி மரமென நின்றனை
தென்மலைக் காட்டிலே.
கல்லினை யொத்த வலிய மனங்
கொண்ட பாதகன்—சிங்கன்
கண்ணிர ண்டாயிரங் காக்கைக்
கிரையிட்ட வேலவா!
பல்லினைக் காட்டி வெண் முத்தைப்
பழித்திடும் வள்ளியை—ஒரு
பார்ப்பனக் கோலந் தரித்துக் கரந்
தொட்ட வேலவா!

2. வெள்ளலைக் கைகளைக் கொட்டி முழங்குங்
கடலினை—உடல்
வெம்பி மறுகிக் கருகிப் புகைய
வெருட்டினாய்.
கிள்ளை மொழிச் சிறு வள்ளி யெனும்
பெயர்ச் செல்வத்தை—என்றும்
கேடற்ற வாழ்வினை யின்ப விளக்கை
மருவினாய்.
கொள்ளை கொண்டே அமராவதி வாழ்வு
குலைத்தவன்—பானு
கோபன் தலை பத்துக் கோடிதுணுக் குறக்
கோபித்தாய்.

துள்ளிக் குலாவித் திரியுஞ் சிறுவன
மானைப்போல்—தினைத்
தோட்டத்திலே யொரு பெண்ணை மணங்
கொண்ட வேலவா !

3. ஆறுசுடர் முகங் கண்டு விழிக்
கின்ப மாகுதே ;—கையில்
அஞ்ச லெனுங்குறி கண்டு மகிழ்ச்சி
யுண் டாகுதே.
நீறுபடக் கொடும்பாவம் பிணி பசி
யாவையும்—இங்கு
நீக்கி யடியரை நித்தமுங் காத்
திடும் வேலவா !
கூறுபடப் பலகோடி யவுணரின்
கூட்டத்தைக்—கண்டு
கொக்கரித் தண்டங் குலுங்க நகைத்
திடுஞ் சேவலாய் !
மாறுபடப் பலவேறு வடிவோடு
தோன்றுவாள்—எங்கள்
வைரவி பெற்ற பெருங்கனலே,
வடி வேலவா !

## 15. ஆர்ய தரிசனம்.

ஓர் கனவு.

ஸ்ரீ ராகம்—ஆதி தாளம்.

கனவென்ன கனவே—என்றன்
கண்துயி லாது நனவினிலே யுற்ற (கன)

1. கானகங் கண்டேன்—அடா
கானகங் கண்டேன்—உச்சி
வானகத்தே வட்ட மதியொளி கண்டேன். (கன)

2. பொற்றிருக்குன்றம்—அங்கோர்
பொற்றிருக்குன்றம்—அதைச்
சுற்றி யிருக்கும் சுனைகளும் பொய்கையும். (கன)

புத்த தரிசனம்.

3. குன்றத்தின் மீதே—அந்தக்
குன்றத்தின் மீதே—தனி
நின்றதொ ரால நெடுமரங் கண்டேன். (கன)

4. பொன்மரத் தின்கீழ்—அந்தப்
பொன்மரத் தின்கீழ்—வெறுஞ்
சின்மய மானதோர் தேவ னிருந்தனன். (கன)

5. புத்த பகவன்—எங்கள்
புத்த பகவன்—அவன்
சுத்தமெய்ஞ்ஞானச் சுடர்முகங் கண்டேன். (கன)

6. காந்தியைப் பார்த்தேன்—அவன்
காந்தியைப் பார்த்தேன்—உப
சாந்தியில் மூழ்கித் ததும்பிக் குளித்தனன். (கன)

7. ஈதுநல் விந்தை !—என்னே !
ஈதுநல் விந்தை !—புத்தன்
சோதிமறைந்திருள் துன்னிடக்கண்டனன்.(கன)

8. பாய்ந்ததங் கொளியே ;—பின்னும்
பாய்ந்ததங்கொளியே ;—அருள்
தேய்ந்த தென்மேனி சிலிர்த்திடக்
கண்டேன். (கன)

கிருஷ்ணார்ஜுன தரிசனம்.

9. குன்றத்தின் மீதே—அந்தக்
குன்றத்தின் மீதே—தனி
நின்ற பொற்றேரும் பரிகளும் கண்டேன். (கன)

10. தேரின் முன் பாகன்—மணித்
தேரின் முன் பாகன்—அவன்
சீரினைக் கண்டு திகைத்துநின் றேனிந்தக் (கன)

11. ஓமென்ற மொழியும்—அவன்
ஓமென்ற மொழியும்—நீலக்
காமன்ற னுருவுமவ் வீமன்றன் திறனும் (கன)

12. அருள் பொங்கும் விழியும்—தெய்வ
அருள் பொங்கும் விழியும்—காணில்
இருள் பொங்கு நெஞ்சினர் வெருள்
பொங்குந் திகிரியும், (கன)

13. கண்ணனைக் கண்டேன்—எங்கள்
கண்ணனைக் கண்டேன்—மணி
வண்ணனை ஞான மலையினைக் கண்டேன். (கன)

14. சேனைகள் தோன்றும்—வெள்ளச்
சேனைகள் தோன்றும்—பரி
யானையுந் தேரும் அளவில தோன்றும். (கன)

15. கண்ணனற் றேரில்—நீலக்
கண்ணனற் றேரில்—மிக
எண்ணயர்ந்தானொ ரிளைஞனைக் கண்டேன். (கன)

16. விசையன் கொலிவனே !—விறல்
விசையன் கொலிவனே!—நனி
இசையு நன்கிசையுமிங் கிவனுக் கிந்நாமம்.
(விசை)

17. வீரிய வடிவம்!—என்ன
வீரிய வடிவம் !—இந்த
ஆரிய னெஞ்ச மயர்ந்ததென் விந்தை !
(விசை)

18. பெற்றதென் பேறே—செவி
பெற்றதென் பேறே—அந்தக்
கொற்றவன் சொற்கள் செவியுறக் கொண்டேன்.
(கன )

19. " வெற்றியை வேண்டேன்;—ஐய,
வெற்றியை வேண்டேன் ;—உயிர்
அற்றிடு மேனு மவர்தமைத் தீண்டேன்.
(பெற்ற)

20. சுற்றங் கொல்வேனோ ?—என்றன்
சுற்றங் கொல்வேனோ?—கிளை
அற்றபின்செய்யு மரசுமொ ரரசோ?"
(பெற்ற)

21. மிஞ்சிய அருளால்—மித
மிஞ்சிய அருளால்—அந்த
வெஞ்சிலை வீரன் பலசொல் விரித்தான்.
(கன)

22. இம்மொழி கேட்டான்—ஐயன்
இம்மொழி கேட்டான்—ஐயன்
செம்மலர் வதனத்திற் சிறுநகை பூத்தான்.
(கன)

23. வில்வினை யெடடா—கையில்
வில்வினை யெடடா—அந்தப்
புல்லியர் கூட்டத்தைப் பூழ்தி செய்திடடா.
(வில்வினை)

24. வாடி நில்லாதே;—மனம்
வாடி நில்லாதே ;—வெறும்
பேடியர் ஞானப் பிதற்றல் சொல்லாதே.
(வில்வினை)

25. ஒன்றுள துண்மை—என்றும்
ஒன்றுள துண்மை—அதைக்
கொன்றி டொணாது குறைத்த லொண்ணாது.
(வில்வினை)

26. துன்பமு மில்லை—கொடுந்
துன்பமு மில்லை—அதில்
இன்பமுமில்லை பிறப்பிறப் பில்லை.
(வில்வினை)

27. படைகளுந் தீண்டா—அதைப்
படைகளுந் தீண்டா—அனல்
சுடவு மொண்ணாது புனல் நனையாது.
(வில்வினை)

28. செய்தலுன் கடனே—அறஞ்
செய்தலுன் கடனே—அதில்
எய்துறும் விளைவினி லெண்ணம் வைக்காதே.
(வில்வினே)

## 16. கண்ணன் பிறப்பு.

1. கண்ணன் பிறந்தான்—எங்கள்
கண்ணன் பிறந்தான்—இந்தக்
காற் றதை யெட்டுத் திசையிலுங் கூறிடும்.
திண்ண முடையான்—மணி
வண்ண முடையான்—உயர்
தேவர் தலைவன் புவிமிசைத் தோன்றினன்.

2. பண்ணை யிசைப்பீர்—நெஞ்சிற்
புண்ணை யொழிப்பீர்—இந்தப்
பாரினிலே துயர் நீங்கிடு மென்றிதை
எண் ணிடைக் கொள்வீர்—நன்கு
கண்ணை விழிப்பீர்—இனி
ஏதுங் குறைவில்லை; வேதந் துணையுண்டு.

3. அக்கினி வந்தான்—அவன்
திக்கை வளைத்தான்—புவி
யாரிருட் பொய்மைக் கலியை மடித்தனன்;
துக்கங் கெடுத்தான்—சுரர்
ஒக்க லும் வந்தார்—சுடர்ச்
சூரியன், இந்திரன், வாயு, மருத்துக்கள்—

4. மிக்க திரளாய்—சுரர்
இக் கணந் தன்னில்—இங்கு
மேவி நிறைந்தனர் ; பாவி யசுரர்கள்
பொக் கென வீழ்ந்தார்,—உயிர்
கக்கி முடிந்தார்,—கடல்
போல ஒலிக்குது வேதம் புவி மிசை.

5. சங்கரன் வந்தான்,—இங்கு
மங்கல மென்றான் ;—நல்ல
சந்திரன் வந் தின் னமுதைப் பொழிந்தனன் ;
பங்க மொன் றில்லை—ஒளி
மங்குவ தில்லை; இந்தப்
பாரின் கண் முன்பு வானத்தி லே நின்று
(கண்ணன் பிறந்தான்)

6. கங்கையும் வந்தாள்;—கலை
மங்கையும் வந்தாள்;—இன்பக்
காளி பராசக்தி அன்புட னெய்தினள்;
செங்கமலத்தாள்—எழில்
பொங்கு முகத்தாள்—திருத்
தேவியும் வந்து சிறப்புற நின்றனள்.
(கண்ணன் பிறந்தான்)

## 17. கண்ணன் வரவு.

பல்லவி.

வருவாய், வருவாய், வருவாய்—கண்ணா
வருவாய், வருவாய், வருவாய்.

சரணங்கள்.

1. உருவாய் அறிவில் ஒளிர்வாய்—கண்ணா
உயிரின் னமுதாய்ப் பொழிவாய்—கண்ணா
கருவாய் என்னுள் வளர்வாய்—கண்ணா
கமலத் திருவோ டிணைவாய்—கண்ணா
(வருவாய்)

2. இணைவாய் என தாவியிலே—கண்ணா
இதயத்தினிலே யமர்வாய்—கண்ணா
கணைவா யசுரர் தலைகள்—சிதறக்
கடை யூழியிலே படையோ டெழுவாய் !
(வருவாய்)

3. எழுவாய் கடல் மீதினிலே—யெழுமோர்
இரவிக் கிணையா உள மீதினிலே
தொழுவேன் சிவனும் நினையே—கண்ணா,
துணையே, அமரர் தொழும் வானவனே !
(வருவாய்)

## 18. கண்ணன் துதி.

காயிலே புளிப்பதென்னே ?
கண்ணா பெருமானே !—நீ
கனியிலே இனிப்பதென்னே ?
கண்ண பெருமானே !
நோயிலே படுப்பதென்னே ?
கண்ண பெருமானே !—நீ
நோன்பிலே உயிர்ப்பதென்னே ?
கண்ணா பெருமானே !
காற்றிலே குளிர்ந்த தென்னே ?
கண்ண பெருமானே !—நீ
கனலிலே சுடுவதென்னே ?
கண்ணா பெருமானே !
சேற்றிலே குழம்பலென்னே ?
கண்ண பெருமானே !—நீ
திக்கிலே தெளிந்ததென்னே ?
கண்ணா பெருமானே !
ஏற்றி நின்னைத் தொழுவதென்னே ?
கண்ண பெருமானே !—நீ
எளியர் தன்னைக் காப்பதென்னே ?
கண்ணா பெருமானே !
போற்றினோரைக் காப்பதென்னே ?
கண்ணா பெருமானே !—நீ
பொய்யர் தன்னை மாய்ப்பதென்னே ?
கண்ணா பெருமானே !
போற்றி ! போற்றி ! போற்றி ! போற்றி !
கண்ணா பெருமானே !—நின்
பொன்னடி போற்றி நின்றேன்,
கண்ணா பெருமானே !

## 19. கண்ணம்மா—அங்க வர்ணனை.

ராகம்—சேஞ்சுருட்டி. தாளம்—ரூபகம்.

பல்லவி.

எங்கள் கண்ணம்மா நகை புது ரோஜாப் பூ;
எங்கள் கண்ணம்மா விழி இந்த்ர நீலப் பூ!
எங்கள் கண்ணம்மா முகஞ் செந்தாமரைப்பூ;
எங்கள் கண்ணம்மா நுதல் பால ஸூர்யன்.

சரணங்கள்.

1. எங்கள் கண்ணம்மா எழில் மின்னலை நேர்க்கும்;
எங்கள் கண்ணம்மா புருவங்கள் மதன் விற்கள்;
திங்களை மூடிய பாம்பினைப் போல
சேற் குழல்; இவள் நாசி எட் பூ. (எங்கள்)

2. மங்கள வாக்கு நித்யானந்த ஊற்று;
மதுர வாய் அமிர்தம்; இத ழமிர்தம்;
ஸங்கீத மென் குரல் ஸரஸ்வதி வீணை;
சாய ரம்பை; சதுர் அயிராணி. (எங்கள்)

3. இங்கித நாத நிலையமிரு செவி;
சங்கு நிகர்த்த கண்டம் அமிர்த சங்கம்;
மங்களக் கைகள் மஹா சக்தி வாஸம்;
வயி றாலிலை; இடை அமிர்த வீடு. (எங்கள்)

4. சங்கரனைத் தாங்கு நந்தி பத சதுரம்;
தாமரை யிருதாள் லக்ஷ்மீ பீடம்;
பொங்குத் ததும்பித் திசை யெங்கும் பாயும்
புத்தன்பும் ஞானமும் மெய்த் திருக் கோலம்.

---

(எங்கள்)

## 20. கண்ணம்மா (1).

பல்லவி.

பீடத்தி லேறிக் கொண்டாள்—மனப்
பீடத்தி லேறிக் கொண்டாள்.

சரணங்கள்.

1. நாடித் தவம் புரிந்து—பீடுற்ற முனிவரர்
கேடற்ற தென்று கண்டு—கூடக் கருது மொளி
மாடத்தி லேறி ஞானக்—கூடத்தில் விளையாடி
ஓடத் திரிந்து கன்னி—வேடத் திரதியைப்போல்
ஈடற்ற கற்பனைகள்—காடுற்ற சிந்தனைகள்
மூடிக் கிடக்கு நெஞ்சின்—ஊடுற்றதை யமரர்
தேடித் தவிக்கு மின்ப—வீடொத் தினிமைசெய்து
வேடத்தி சிறுவள்ளி வித்தையென் கண்ணம்மா
(பீடத்திலேறி)

2. கண்ணன் திருமார்பிற்—கலந்த கமலை யென்கோ?
விண்ணவர் தொழுதிடும்—வீர சிங்காதனத்தே,
நண்ணிச் சிவனுடலை—நாடுமவ ளென்கோ?
எண்ணத் திகைக்குதடா, இவள்பொன்னுடலமுதம்
பெண்ணி லரசியிவள்—பெரிய எழி லுடையாள்
கண்ணுள் மணியெனக்குக்—காதலிரதியிவள்
பண்ணி லினிய சுவை—பரந்த மொழியினள்
உண்ணு மிதழமுத ஊற்றினள் கண்ணம்மா
(பீடத்திலேறி)

## 21. கண்ணம்மா (2).

பல்லவி.

நின்னையே ரதியென்று
நினைக்கிறேனடி—கண்ணம்மா! (நின்னையே)
தன்னையே சசியென்று
சரணமெய்தினேன். (நின்னையே)

சரணங்கள்.

1. பொன்னையே நிகர்த்த மேனி
மின்னையே நிகர்த்த சாயற்
பின்னையே—நித்ய
கன்னியே,—கண்ணம்மா! (நின்னையே)

2. மாரனம்புகளென் மீது
வாரி வாரி வீச நீ—கண்
பாராயோ—வந்து
சேராயோ,—கண்ணம்மா! (நின்னையே)

3. யாவுமே சுக முனிக்கோர்
ஈசனாமெனக்குன் தோற்றம்
மேவுமே—இங்கு
யாவுமே, கண்ணம்மா! (நின்னையே)

---

## 22. கண்ணம்மா (3).

1. காற்று வெளியிடைக் கண்ணம்மா—நின்றன்
காதலை யெண்ணிக் களிக்கின்றேன் ;—அமு
தூற்றினை யொத்த இதழ்களும்—நில
வூறித் ததும்பும் விழிகளும்—பத்து
மாற்றுப் பொன் னொத்த நின்மேனியும்—இந்த
வையத்தில் யானுள்ள மட்டிலும்—எனை
வேற்று நினைவின்றித் தேற்றியே—இங்கொர்
விண்ணவ னாகப் புரியுமே—இந்தக்
(காற்று வெளி)

2. நீயென தின்னுயிர் கண்ணம்மா—எந்த
நேரமு நின்றனைப் போற்றுவேன்—துயர்
போயின, போயின துன்பங்கள்—நினைப்
பொன்னெனக் கொண்ட பொழுதிலே—என்றன்
வாயினிலே யமுதூறுதே—கண்ணம்
மாவென்ற பேர் சொலும் போழ்திலே—உயிர்த்
தீயினிலே வளர் சோதியே—என்றன்
சிந்தனையே, என்றன் சித்தமே! இந்தக்
(காற்று வெளி)

## 23. திருக்காதல்.

திருவே நினைக்காதல் கொண்டேனே—நினது திரு
வுருவே மறவா திருந்தேனே—பல திசையில்
தேடித் திரிந் திளைத்தேனே—நினக்கு மனம்
வாடித் தினங் களைத் தேனே—அடி, நினது
பருவம் பொறுத்திருந்தேனே—மிகவு நம்பிக்
கருவம் படைத்திருந்தேனே—இடை நடுவில்
பையச் சதிகள் செய்தாயே—அதனிலுமென்
மையல் வளர்தல் கண்டாயே—அமுதமழை
பெய்யக் கடைக் கலைக்காயே—நினதருளில்
உய்யக் கருணை செய்வாயே—பெருமை கொண்டு
வையந் தழைக்க வைப்பேனே—அமரயுகஞ்
செய்யத் துணிந்து நிற்பேனே—அடியெனது
தேனே, யென திருகண்ணே,—எனையுகந்து
தானே வருந் திருப்—பெண்ணே!

## 24. ஸூர்ய தர்சனம்.

காலை வேளையில், கடற் கரையில், சூரியன் மேகங்களால் மூடப்பட்டிருக்க, முகம் காட்டும்படி அவனை வேண்டிப் பாடிய பாடல்கள்.

ராகம்—பூபாளம்.

1. சுருதி யின்கண் முனிவரும் பின்னே
தூமொ ழிப்புல வோர்பலர் தாமும்
பெரிது நின்றன் பெருமை யென் றேத்தும்
பெற்றி கண்டுனை வாழ்த்திட வந்தேன் ;
பரிதி யே, பொருள் யாவிற்கு முதலே,
பானுவே, பொன் செய் பேரொளித் திரளே,
கருதி நின்னை வணங்கிட வந்தேன் ;
கதிர்கொள் வான்முகம் காட்டுதி சற்றே.

2. வேதம் பாடிய சோதியைக் கண்டு
வேள்விப் பாடல்கள் பாடுதற் குற்றேன் ;
நாத வார்கட லின்னொலி யோடு
நற்ற மிழ்ச்சொ லிசையையுஞ் சேர்ப்பேன்;
காத மாயிர மோர்கணத் துள்ளே
கடுகியோடும் கதிரினம் பாடி
ஆத வா, நினை வாழ்த்திட வந்தேன்
அணி கொள் வான்முகம் காட்டுதி சற்றே.

## 25. ஞாயிறு—ஸூர்ய ஸ்துதி.

1. கடலின் மீது கதிர்களை வீசிக்
கடுகி வான் மிசை ஏறுதி யையா,
படரும் வானொளி யின்பத்தைக் கண்டு
பாட்டுப் பாடி மகிழ்வன புட்கள்.
உடல் பரந்த கடலுந் தனுள்ளே
ஒவ்வொர் நுண் டுளியும் விழியாகச்
சுடரு நின்றன் வடிவையுட் கொண்டே
சுருதி பாடிப் புகழ்கின்ற திங்கே.

2. என்ற னுள்ளங் கடலினைப்போலே
எந்த நேரமு நின்னடிக் கீழே
நின்று தன் னகத் தொவ்வொ ரணுவும்
நின்றன் ஜோதி நிறைந்தது வாகி
நன்று வாழ்ந்திடச் செய்குவை யையா,
ஞாயிற்றின்க ணொளி தருந் தேவா!
மன்று வானிடைக் கொண்டுல கெல்லாம்
வாழ நோக்கிடும் வள்ளிய தேவா!

3. காதல் கொண்டனை போலு மண் மீதே,
கண் பிறழ்வின்றி நோக்கு கின்றாயே!
மாதர்ப் பூமியு நின் மிசைக் காதல்
மண்டி னா ளிதி லைய மொன் றில்லை;
சோதி கண்டு முகத்தி லிவட்கே
தோன்று கின்ற புதுநகை யென்னே!
ஆதித் தாய் தந்தை நீவி ருமக்கே
ஆயிரந் தரம் அஞ்சலி செய்வேன்.

## 26. வெண்ணிலா.

வெண்ணிலா என்பது இங்கு சந்திரனுடைய பிரகாசத்தை யன்று, சந்திரனையே குறிப்பது.

1. எல்லை யில்லாததோர் வானக் கடலிடை
வெண்ணிலாவே—விழிக்
கின்ப மளிப்பதோர் தீவென் றிலகுவை
வெண்ணிலாவே.
சொல்லையுங் கள்ளையு நெஞ்சையுஞ் சேர்த்திங்கு
வெண்ணிலாவே—நின்றன்
சோதி மயக்கும் வகையது தானென் சொல்
வெண்ணிலாவே.
நல்ல வொளியின் வகை பல கண்டிலன்
வெண்ணிலாவே
நனவை மறந்திடச் செய்வது கண்டிலன்
வெண்ணிலாவே.
கொல்லு மமிழ்தை நிகர்த்திடுங் கள்ளொன்று
வெண்ணிலாவே—வந்து
கூடி யிருக்குது நின்னொளி யோடிங்கு
வெண்ணிலாவே.

2. மாதர் முகத்தை நினக்கிணை கூறுவர்
வெண்ணிலாவே—அஃது
வயதிற் கவலையி னோவிற் கெடுவது
வெண்ணிலாவே.

காதலொருத்தி யிளைய பிராயத்தள்
வெண்ணிலாவே—அந்தக்
காமன்றன் வில்லை யிணைத்த புருவத்தள்
வெண்ணிலாவே
மீதெழு மன்பின் விலைபுன் னகையினள்
வெண்ணிலாவே—முத்தம்
வேண்டி முன் காட்டு முகத்தி னெழிலிங்கு
வெண்ணிலாவே.
சாத லழித லிலாது நிரந்தரம்
வெண்ணிலாவே—நின்
தண்முகந் தன்னில் விளங்குவ தென்னைகொல்
வெண்ணிலாவே.

3. நின்னொளி யாகிய பாற்கடல் மீதிங்கு
வெண்ணிலாவே—நன்கு
நீயு மமுது மெழுந்திடல் கண்டனன்
வெண்ணிலாவே
மன்னு பொருள்க ளனைத்திலு நிற்பவன்
வெண்ணிலாவே—அந்த
மாயனப் பாற்கடல் மீதுறல் கண்டனன்
வெண்ணிலாவே.
துன்னிய நீல நிறத்தள் பராசக்தி
வெண்ணிலாவே—இங்கு
தோன்று முலகவளே யென்று கூறுவர்
வெண்ணிலாவே.

பின்னிய மேகச் சடைமிசைக் கங்கையும்
வெண்ணிலாவே—
பெட்புற நீயும் விளங்குதல் கண்டனன்
வெண்ணிலாவே.

4. காதலர் நெஞ்சை வெதுப்புவை
நீயென்பர் வெண்ணிலாவே—நினைக்
காதல் செய்வார் நெஞ்சிற் கின்னமு
தாகுவை—வெண்ணிலாவே.

சீத மணி நெடு வானக் குளத்திடை
வெண்ணிலாவே—நீ
தேசு மிகுந்த வெண்டாமரை போன்றனை
வெண்ணிலாவே.

மோத வருங் கருமேகத் திரளினை
வெண்ணிலாவே—நீ
முத்தி னொளிதந் தழகுறச் செய்குவை
வெண்ணிலாவே.

தீது புரிந்திட வந்திடும் தீயர்க்கும்
வெண்ணிலாவே—நலஞ்
செய்தொளி நல்குவர்மேலவ ராமன்றோ?
வெண்ணிலாவே.

5. மெல்லிய மேகத்திரைக்குள் மறைந்திடும்
வெண்ணிலாவே—உன்றன்
மேனி யழகு மிகைபடக் காணுது
வெண்ணிலாவே.

நல்லியலார் யவனத்தியர் மேனியை
வெண்ணிலாவே—மூடு
நற்றிரை மேனி நயமிகக் காட்டிடும்,
வெண்ணிலாவே.
சொல்லிய வார்த்தையில் நாணுற்றனை
போலும் வெண்ணிலாவே—நின்
சோதி வதன முழுது மறைத்தனை
வெண்ணிலாவே.
புல்லியன் செய்த பிழைபொறுத்தே
யருள் வெண்ணிலாவே—இருள்
போகிடச் செய்து நினதெழில்
காட்டுதி, வெண்ணிலாவே.

---

## 27. ஸோமதேவன் புகழ்.

பல்லவி.

ஜய ஸோம, ஜய ஸோம, ஜய ஸோம தேவா
ஜய ஜய.

சரணம்.

நயமுடைய இந்திரனை நாயகத் திட்டாய்
வய மிக்க அஸுரரின் மாயையைச் சுட்டாய்
வியனுலகி லாநந்த விண்ணிலவு பெய்தாய்
துயர் நீங்கி யென்னுளஞ்சுடர் கொளச் செய்தாய்
மயல் கொண்ட காதலரை மண்மிசைக் காப்பாய்
உய வேண்டி யிருவருளம் ஒன்றுறக் கோப்பாய்
புய லிருண்டே குமுறி யிருள் வீசி வரல்போற்
பொய்த் திரள் வருமதைப் புன்னகையில்
[மாய்ப்பாய்.

## 28. சாகா வரம்.

### பல்லவி.

சாகா வர மருள்வாய், ராமா
சதுர் மறை நாதா—ஸரோஜ பாதா !

### சரணங்கள்.

1. ஆகாசந் தீ கால் நீர் மண்
அத்தனை பூதமும் ஒத்து நிறைந்தாய்
ஏகாமிர்த மாகிய நின் தாள்
இணை சரணென்றால் இது முடியாதா ? (சாகா)

2. வாகார் தோள் வீரா, தீரா,
மன்மத ரூபா, வானவர் பூபா,
பாகார் மொழி ஸீதையின் மென்றோள்
பழகிய மார்பா ! பதமலர் சார்பாச் (சாகா)

3. நித்யா, நிர்மலா, ராமா,
நிஷ் களங்கா, ஸர்வாதாரா,
ஸத்யா, ஸநாதநா, ராமா,
சரணம், சரணம், சரண முதாரா ! (சாகா)

---

## 29. கிளிப் பாட்டு.

1. திருவைப் பணிந்து நித்தம்
செம்மைத் தொழில் புரிந்து
வருக வருவ தென்றே—கிளியே
மகிழ் வுற் றிருப்போ மடி.

2. வெற்றி சொலுக் குண்டு
விதியி னியம மென்று
கற்றுத் தெளிந்த பின்னும்—கிளியே
கவலைப் படலாகு மோ ?

3. துன்ப நினைவு களும்
சோர்வும் பயமு மெல்லாம்
அன்பி லழியு மடீ—கிளியே
அன்புக் கழிவில்லை காண்.

4. ஞாயிற்றை யெண்ணி யென்றும்
நடுமை நிலை பயின்று
ஆயிர மாண் டுலகில்—கிளியே
அழி வின்றி வாழ்வோ மடீ.

5. தூய பெருங்கனலைச்
சுப்பிர மண்ணி யனை
நேயத்துடன் பணிந்தால்—கிளியே
நெருங்கித் துயர் வருமோ ?

---

## 30. சந்திரமதி பாட்டு.*

ராகம்—ஆனந்த பைரவி. தாளம்—ஆதி.

1. பச்சைக் குழந்தையடி—கண்ணிற்
பாவை யடி சந்திரமதி.
இச்சைக் கினிய மது ;—என்றன்
இரு விழிக்குத் தே நிலவு ;

* "சந்திரமதி" என்பது காதல் கொண்டவளாகிய பெண்ணைக் குறிப்பது ; சந்திரன் காதலுக்கு அதிதேவதை யாதலால்.

நச்சுத் தலைப் பாம்புக் குள்ளே—நல்ல
நாக மணியுள்ள தென்பார் ;
துச்சப் படு நெஞ்சிலே—நின்றன்
சோதி வளரு தடீ.

2. பேச்சுக் கிடமே தடி—நீ
பெண் குலத்தின் வெற்றியடி
ஆச்சர்ய மாயை யடி—என்றன்
ஆசைக் குமரி யடி
நீச்சு நிலை கடந்த—வெள்ள
நீருக் குள்ளே வீழ்ந்தவர் போல்
தீச் சுடரை வென்ற வொளி—கொண்ட
தேவி, நினை விழந்தே னடி.

3. நீலக் கடலினி லே—நின்றன்
நீண்ட குழல் தோன்று தடி ;
கோல மதியினிலே—நின்றன்
குளிர்ந்த முகங் காணு தடி ;
ஞால வெளியினி லே—நின்றன்
ஞான வொளி வீசு தடி ;
கால நடையினி லே—நின்றன்
காதல் விளங்கு தடி.

(பச்சைக் குழந்தையடி)

## 31. வேள்விப் பாட்டு.

1. இயற்கையென் றுனையுரைப்பார்—சிலர்
இணங்குமைம் பூதங்க ளென்றிசைப்பார்
செயற்கையின் சக்தியென்பார்—உயிர்த்
தீயென்பர், அறிவென்பர், ஈசனென்பர்
வியப்புறு தாய்நினக்கே—இங்கு
வேள்விசெய் திடுமெங்கள் 'ஓம்' என்னும்
நயப்படு மதுவுண்டே—சிவ
நாட்டியங் காட்டிநல் லருள்புரிவாய்.

2. அன்புறு சோதியென்பார்—சிலர்
ஆரிருட் காளியென் றுனைப்புகழ்வார்
இன்பமென் றுரைத்திடுவார்—சிலர்
எண்ணருந் துன்பமென் றுனையிசைப்பார்
புன்பலி கொண்டுவந்தோம்—அருள்
பூண்டெமைத் தேவர்தங் குலத்திடுவாய்
மின்படு சிவசக்தி—எங்கள்
வீரைநின் திருவடி சரண்புகுந்தோம்.

3. உண்மையி லமுதாவாய்—புண்கள்
ஒழித்திடுவாய் களியுதவிடுவாய்
வன்மைகொ ளுயிர்ச்சுடராய்—இங்கு
வளர்ந்திடு வாயென்று மாய்வதிலாய்
ஒண்மையும் ஊக்கமுந்தான்—என்றும்
ஊறிடுந் திருவருட் சுனையாவாய்
அண்மையி லென்று நின்றே—எம்மை
ஆதரித் தருள் செயும் விரதமுற்றாய்.

4. தெளிவுறு மறிவினை நாம்—கொண்டு
சேர்த்தனம், நினக்கது ஸோமரஸம்
ஒளியுறு முயர்ச்செடியில்—இதை
ஓங்கிடு மதிவலி தனிற் பிழிந்தோம்
களியுறக் குடித்திடுவாய்—நின்றன்
களிநடங் காண்பதற் குளங் கனிந்தோம்
குளிர்சுவைப் பாட்டிசைத்தே—சுரர்
குலத்தினிற் சேர்ந்திடல் விரும்புகின்றோம்.

5. அச்சமுந் துயருமென்றே—இரண்
டசுரர் வந் தெமையிங்கு சூழ்ந்து நின்றார்
துச்சமிங் கிவர் படைகள்—பல
தொல்லைகள் கவலைகள் சாவுகளாம்
இச்சையுற் றிவரடைந்தார்—எங்கள்
இன்னமு தைக் கவர்ந் தேகிடவே
பிச்சை யிங்கெமக் களித்தாய்—ஒரு
பெரு நக ருடலெனும் பெயரினதாம்.

6. கோடி மண்டபந் திகழும்—திறற்
கோட்டையிங் கிதையவர் பொழுதனைத்தும்
நாடி நின்றிடர் புரிவார்—உயிர்
நதியினைத் தடுத்தெமை நலித்திடுவார்
சாடுபல் குண்டுகளால்—ஒளி
சார்மதிக் கூடங்கள் தகர்த்திடுவார்
பாடிநின் றனைப்புகழ் வோம்—எங்கள்
பகைவரை அழித்தெமைக் காத்திடுவாய்.

7. நின்னருள் வேண்டுகின்றோம்—எங்கள்
நீதியுந் தர்மமும் நிலைப்பதற்கே
பொன்னவிர் கோயில் களும்—எங்கள்
பொற்புடை மாதரு மதலையரும்
அன்னநல் லணிவயல்கள்—எங்கள்
ஆடு மாடுகள் குதிரைகளும்
இன்னவை காத்திடவே—அன்னை
இணைமலர்த் திருவடி துணை புகுந்தோம்.

8. எம் முயி ராசைகளும்—எங்கள்
இசைகளுஞ்செயல்களுந் துணிவுகளும்
செம்மை யுற்றிட வருள்வாய்—நின்றன்
சேவடி யடைக்கலம் புகுந்துவிட்டோம்.
மும்மையின் உடைமைகளும்—திரு
முன்னரிட் டஞ்சலி செய்து நிற்போம்
அம்மை நற் சிவசக்தி—எமை
அமரர்தந் நிலையினி லாக்கிடுவாய்.

## 32. அக்நி தோமம்—(தீ)

ராகம்—நாதநாமக்ரியை. தாளம்—சதுஸ்ரஏகம்.

1. ரிஷிகள் : எங்கள் வேள்விக் கூட மீதில்
ஏறுதே தீ ! தீ !—இந்நேரம்
பங்க முற்றே பேய்க ளோடப்
பாயுதே தீ ! தீ !—இந்நேரம்.

2. அஸுரர் : தோழரே, நம் மாவி வேவச்
சூழுதே தீ ! தீ !—ஐயோ ! நாம்
வாழ வந்த காடு வேவ
வந்ததே தீ ! தீ !—அம்மாவோ !

3. ரிஷி : பொன்னை யொத்தோர் வண்ணமுற்றான்
போந்து விட்டானே—இந்நேரம்
சின்னமாகிப் பொய் யரக்கர்
சிந்தி வீழ்வாரே—இந்நேரம்.

4. அஸு : இந்திராதி தேவர் தம்மை
ஏசி வாழ்ந்தோமே—ஐயோ ! நாம்
வெந்து போக மானிடர்க்கோர்
வேத முண்டாமோ !—அம்மாவோ !

5. ரிஷி : வானை நோக்கிக் கைகள் தூக்கி
வளருதே தீ ! தீ !—இந்நேரம்
ஞானமேனி உதய கன்னி
நண்ணி விட்டாளே—இந்நேரம்.

6. அஸு : கோடி நாளாய் இவ்வனத்திற்
கூடி வாழ்ந்தோமே—ஐயோ ! நாம்
பாடி வேள்வி மாந்தர் செய்யப்
பண்பிழந்தோமே—அம்மாவோ !

7. ரிஷி : காட்டில் மேயுங் காளை போன்றான்
காணுவீர் தீ ! தீ !—இந்நேரம்
ஓட்டி யோட்டிப் பகையை யெல்லாம்
வாட்டு கின்றானே—இந்நேரம்.

8. அஸுர : வலியி லாதார் மாந்த ரென்று
மகிழ்ந்து வாழ்ந்தோமே—ஐயோ! நாம்
கலியை வென்றோர் வேத வுண்மை
கண்டு கொண்டாரே—அம்மாவோ !

9. ரிஷி : வலிமை மைந்தன் வேள்வி முன்னோன்
வாய் திறந்தானே—இந்நேரம்
மலியு நெய்யுந் தேனு முண்டு
மகிழ வந்தானே—இந்நேரம்.

10. அஸுர : உயிரை விட்டும் உணர்வை விட்டும்
ஓடி வந்தோமே—ஐயோ ! நாம்
துயி லுடம்பின் மீதிலுந் தீ
தோன்றி விட்டானே—அம்மாவோ !

11. ரிஷி : அமரர் தூதன் சமர நாதன்
ஆர்த் தெழுந்தானே—இந்நேரம்
குமரி மைந்தன் எமது வாழ்விற்
கோயில் கொண்டானே—இந்நேரம்.

12. அஸுர : வருணன் மித்ரன் அர்ய மானும்
மதுவை யுண்பாரோ !—ஐயோ ! நாம்
பெருகு தீயின் புகையும் வெப்பும்
பின்னி மாய்வோமோ !—அம்மாவோ!

13. ரிஷி: அமர ரெல்லாம் வந்து நம்முன்
அவிகள் கொண்டாரே—இந்நேரம்
நமனுமில்லை பகையுமில்லை
நன்மை கண்டோமே—இந்நேரம்.

14. அஸுர: பகனு மிங்கே யின்ப மெய்திப்
பாடுகின்றானே—ஐயோ! நாம்
புகையில் வீழ இந்திரன் சீர்
பொங்கல் கண்டீரோ!—அம்மாவோ!

15. ரிஷி: இளையும் வந்தாள் கவிதை வந்தாள்
இரவி வந்தானே—இந்நேரம்
விளையு மெங்கள் தீயினாலே
மேன்மை யுற்றோமே—இந்நேரம்.

16. ரிஷி: அன்ன முண்பீர் பாலு நெய்யும்
அமுதுமுண்பீரே—இந்நேரம்
மின்னி நின்றீர் தேவ ரெங்கள்
வேள்வி கொள்வீரே—இந்நேரம்.

17. ரிஷி: ஸோம முண்டு தேவர் நல்கும்
ஜோதி பெற்றோமே—இந்நேரம்
தீமை தீர்ந்தே வாழி யின்பஞ்
சேர்ந்து விட்டோமே—இந்நேரம்.

18. ரிஷி: உடலுயிர்மே லுணர்விலுந் தீ
ஓங்கி விட்டானே—இந்நேரம்
கடவுளர் தாம் எம்மை வாழ்த்திக்
கை கொடுத்தாரே—இந்நேரம்.

19. ரிஷி : எங்கும் வேள்வி யமர ரெங்கும்
யாங்கணுந் தீ ! தீ !—இந்நேரம்
தங்கு மின்பம் அமர வாழ்க்கை
சார்ந்து நின்றோமே—இந்நேரம்.

20. ரிஷி : வாழ்க தேவர் ; வாழ்க வேள்வி
மாந்தர் வாழ்வாரே—இந்நேரம்
வாழ்க வையம், வாழ்க வேதம்,
வாழ்க தீ ! தீ ! தீ !—இந்நேரம்.

## 33. அக்னி பகவான்.

யாகப் பாட்டு.

ராகம்—புன்னாகவராளி.

பல்லவி.

தீ வளர்த்திடுவோம்—பெருந்
தீ வளர்த்திடுவோம்.

சரணங்கள்.

ஆவியி னுள்ளும் அறிவி னிடையிலும்
அன்பை வளர்த்திடுவோம்—விண்ணின்
ஆசை வளர்த்திடுவோம்—களி
யாவல் வளர்த்திடுவோம்—ஒரு
தேவி மகனைத் திறமைக் கடவுளைச்
செங்கதிர் வானவனை—விண்ணோர் தமைத்
தேனுக் கழைப்பவனைப்—பெருந்திரள்
சேர்ந்து பணிந்திடுவோம்—வாரீர். (தீ)

2. சித்தத் துணிவினை மானுடர் கேள்வனைத்
தீமை யழிப்பவனை—நன்மை
சேர்த்துக் கொடுப்பவனை—பல
சீர்க ளுடையவனைப்—புவி
அத்தனையுஞ்சுட ரேறத் திகழ்ந்திடும்
ஆரியர் நாயகனை—உருத்திரன்
அன்புத் திருமகனை—பெருந்திர
ளாகிப் பணிந்திடுவோம்—வாரீர். (தி)

3. கட்டுக்கள் போக்கி விடுதலை தந்திடுங்
கண்மணி போன்றவனை—எம்மைக்
காவல் புரிபவனைத்—தொல்லைக்
காட்டை யழிப்பவனைத்—திசை
எட்டும் புகழ்வளர்ந் தோங்கிட வித்தைகள்
யாவும் பழகிடவே—புவிமிசை
இன்பம் பெருகிடவே—பெருந்திரள்
எய்திப் பணிந்திடுவோம்—வாரீர். (தி)

4. நெஞ்சிற் கவலைகள் நோவுகள் யாவையுந்
நீக்கிக் கொடுப்பவனை—உயிர்
நீளத் தருபவனை—ஒளிர்
நேர்மைப் பெருங்கனலை—நித்தம்
அஞ்ச லஞ்சே லென்றுகூறி யெமக்குநல்
லாண்மை சமைப்பவனைப்—பல்வெற்றிகள்
ஆக்கிக் கொடுப்பவனைப்—பெருந்திரள்
ஆகிப் பணிந்திடுவோம்—வாரீர். (தி)

5. அச்சத்தைச் சுட்டங்கு சாம்பரு மின்றி
அழித்திடும் வானவனைச்—செய்கை
ஆற்றாநிச் சுடரைத்—தடை
யற்ற பெருந் திறலை—எம்முள்
இச்சையும் வேட்கையும் ஆசையுங் காதலும்
ஏற்றதொர் நல்லறமும்—கலந்தொளி
ஏறுந் தவக்கனலைப்—பெருந்திரள்
எய்திப் பணிந்திடுவோம்—வாரீர். (தீ)

6. வானகத்தைச்சென்று தீண்டுவ னிங்கென்று
மண்டி யெழுந்தழலைக்—கவி
வாணர்க்கு நல்லமுதைத்—தொழில்
வண்ணந் தெரிந்தவனை—நல்ல
தேனையும் பாலையு நெய்யையுஞ் சோற்றையுந்
தீம்பழம் யாவினையும்—இங்கே யுண்டு
தேக்கிக் களிப்பவனைப்—பெருந்திரள்
சேர்ந்து பணிந்திடுவோம்—வாரீர். (தீ)

7. சித்திர மாளிகை பொன்னொளிர் மாடங்கள்
தேவத் திருமகளிர்—இன்பந்
தேக்கிடுந் தேனிசைகள்—சுவை
தேறிடு நல்லிளமை—நல்ல
முத்து மணிகளும் பொன்னு நிறைந்த
முழுக்குடம் பற்பலவும்—இங்கேதர
முற்பட்டு நிற்பவனைப்—பெருந்திரள்
மொய்த்துப் பணிந்திடுவோம்—வாரீர். (தீ)

## 34. வேண்டும்.

மனதி லுறுதி வேண்டும்
வாக்கினிலே யினிமை வேண்டும்
நினைவு நல்லது வேண்டும்
நெருங்கின பொருள் கைப்படவேண்டும்
கனவு மெய்ப் படவேண்டும்
கைவசமாவது விரைவில் வேண்டும்
தனமு மின்பமும் வேண்டும்
தரணியிலே பெருமை வேண்டும்
கண் திறந்திட வேண்டும்
காரியத்தி லுறுதி வேண்டும்
பெண்விடுதலை வேண்டும்
பெரியகடவுள் காக்கவேண்டும்
மண் பயனுற வேண்டும்
வானகமிங்கு தென்படவேண்டும்
உண்மை நின்றிட வேண்டும்.
ஓம் ஓம் ஓம் ஓம்.

## 35. கோவிந்தன் பாட்டு.

1. கண்ணிரண்டும் இமையாமல் செந்நிறத்து
மெல்லிதழ்ப்பூங் கமலத் தெய்வப்
பெண்ணிரண்டு விழிகளையு நோக்கிடுவாய்,
கோவிந்தா! பேணினோர்க்கு
நண்ணிரண்டு பொற்பாத மளித்தருள்வாய்,
சராசரத்து நாதா! நாளும்
எண்ணிரண்டு கோடியினு மிகப் பலவாம்
வீண் கவலை யெளிய னேற்கே.

2. எளியனேன் யானெனலை எப்போது
போக்கிடுவாய், இறைவனே யிவ்
வளியிலே பறவையிலே மரத்தினிலே
முகிலினிலே வரம்பில்வான
வெளியிலே கடலிடையே மண்ணகத்தே
வீதியிலே வீட்டி லெல்லாம்
களியிலே, கோவிந்தா, நினைக் கண்டு
நின்னொடு நான் கலப்ப தென்றோ?

3. என் கண்ணை மறந்துனிரு கண்களையே
யென்னகத்தில் இசைத்துக் கொண்டு
நின் கண்ணாற் புவி யெல்லா நீ யெனவே
நான் கண்டு நிறைவு கொண்டு
வன் கண்மை மறதி யுடன் சோம்பர்
முதற் பாவமெலா மடிந்து நெஞ்சிற்
புன்கண் போய் வாழ்ந்திடவே, கோவிந்தா,
எனக் கமுதம் புகட்டுவாயே.

---

## 36. இறைவனை வேண்டுதல்.

ராகம்—தன்யாசி.

பல்லவி.

எத்தனை கோடி இன்பம் வைத்தாய்—எங்கள்
இறைவா! இறைவா! இறைவா!

(ஓ—எத்தனை

சரணங்கள்.

1. சித்தினை அசித்துடன் இணைத்தாய்—அங்கு
சேருமைம் பூதத்து வியனுல கமைத்தாய்
அத்தனை யுலகமும் வர்ணக் களஞ்சிய
மாகப் பல பல நல் லழகுகள் சமைத்தாய்.
(எத்தனை)

2. முக்தி யென் றொரு நிலை சமைத்தாய்—அங்கு
முழுதினையு முணரு முணர் வமைத்தாய்
பக்தி யென்றொரு நிலை வகுத்தாய் எங்கள்
பரமா, பரமா, பரமா.
(ஓ—எத்தனை)

---

## 37. காளிப் பாட்டு.

1. யாதுமாகி நின்றாய்—காளி
எங்கு நீ நிறைந்தாய்
தீது நன்மை யெல்லாம்—காளி
தெய்வ லீலை யன்றோ?
பூத மைந்து மானாய்—காளி
பொறிகளைந்து மானாய்
போதமாகி நின்றாய்—காளி
பொறியை விஞ்சி நின்றாய்.

2. இன்பமாகி விட்டாய்—காளி
என்னுளே புகுந்தாய்
பின்பு நின்னையல்லால்—காளி
பிறிது நானுமுண்டோ?

அன்பளித்து விட்டாய்—காளி
ஆண்மை தந்து விட்டாய்
துன்ப நீக்கிவிட்டாய்—காளி
தொல்லை போக்கி விட்டாய்.

## 38. காளி ஸ்தோத்திரம்.

1. யாது மாகி நின்றாய்—காளீ
எங்கு நீ நிறைந்தாய்
தீது நன்மை யெல்லாம்—நின்றன்
செயல்க ளன்றி யில்லை.
போது மிங்கு மாந்தர்—வாழும்
பொய்மை வாழ்க்கை யெல்லாம்
ஆதி சக்தி, தாயே—என் மீ
தருள் புரிந்து காப்பாய்.

2. எந்த நாளு நின்மேல்—தாயே,
இசைகள் பாடி வாழ்வேன்
கந்தனைப் பயந்தாய்,—தாயே,
கருணை வெள்ள மானாய்!
மந்த மாரு தத்தில்—வானில்
மலையி னுச்சி மீதில்,
சிந்தை யெங்கு செல்லும்—அங்குன்
செம்மை தோன்று மன்றே!

3. கர்ம யோக மொன்றே—உலகில்
காக்கு மென்னும் வேதம்;
தர்ம நீதி சிறிதும்—இங்கே
தவற லென்ப தின்றி

மர்ம மான பொருளாம்—நின்றன்
மலரடிக் கணெஞ்சம்
செம்மை யுற்று நாளும்—சேர்ந்தே
தேசு கூட வேண்டும்.

4. என்ற னுள்ள வெளியில்—ஞானத்
திரவி யேற வேண்டும்.
குன்ற மொத்த தோளும்—மேருக்
கோல மொத்த வடிவும்
நன்றை நாடு மனமும்—நீயெந்
நாளு மீதல் வேண்டும்
ஒன்றை விட்டு மற்றோர்—துயரில்
உழலு நெஞ்சம் வேண்டா.

5. வா னகத்தி னொளியைக்—கண்டே
மன மகிழ்ச்சி பொங்கி
யானெதற்கு மஞ்சேன்—ஆகி
எந்த நாளும் வாழ்வேன்
ஞான மொத்த தம்மா—உவமை
நானுரைக் கொணு தாம்
வானகத்தி லொளியின்—அழகை
வாழ்த்து மாறி யாதோ ?

6. ஞாயி றென்ற கோளம்—தருமோர்
நல்லபே ரொளிக் கே
தேய மீதோ ருவமை—எவரே
தேடி யோத வல்லார் ?

வாயினிக்கு மம்மா—அழகாம்
மதியி னின்ப ஒளியை
நேயமோ டுரைத்தால்—ஆங்கே
நெஞ் சிளக்க மெய்தும்.

7. காளி மீது நெஞ்சம்—என்றும்
கலந்து நிற்க வேண்டும்
வேலை யொத்த விறலும்—பாரில்
வேந்த ரேத்து புகழும்
யாளி யொத்த வலியும்—என்றும்
இன்ப நிற்கு மனமும்
வாழி யீதல் வேண்டும்—அன்னாய் !
வாழ்க நின்றன் அருளே.

## 39. ஹே காளீ !

1. எண்ணிலாத பொருட்குவை தானும்
ஏற்றமும் புவியாட்சியு மாங்கே
விண்ணிலாதவ னேர்த்திடும் ஒளியும்
வெம்மையும் பெருந்திண்மையு மறிவும்
தண்ணிலாவி னமைதியும் அருளும்
தருவ ளின்றெனை தன்னை யென்காளி;
மண்ணிலார்க்குந் துயரின்றிச் செய்வேன்,
வறுமை யென்பதை மண்மிசை மாய்ப்பேன்

2. தானம் வேள்வி தவங் கல்வி யாவும்
தரணி மீதி னிலை பெறச் செய்வேன்,
வான மூன்று மழை தரச் செய்வேன்,
மாற்லாத வளங்கள் கொடுப்பேன்,

மானம் வீரிய மாண்மை நன்னேர்மை
வண்மை யாவும் வழங்குறச் செய்வேன்,
ஞான மோங்கி வளர்ந்திடச் செய்வேன்;
நான் விரும்பிய காளி தருவாள்.

## 40. மகா காளியின் புகழ்.

### காவடிச் சிந்து.

ராகம்—ஆனந்த பைரவி. தாளம்—ஆதி.

1. காலமாம் வனத்திலண்டக் கோலமா மரத்தின்மீது
காளி சக்தி யென்றபெயர் கொண்டு—ரீங்
கார மிட்டுலவுமொரு வண்டு—தழல்
காலும் விழி நீலவன்னமூல அத்து வாக்களெனும்
கால்களா றுடையதெனக் கண்டு—மறை
காணுமுனி வோருரைத்தார் பண்டு.
மேலுமாகிக் கீழுமாகி வேறுள திசையுமாகி
விண்ணு மண்ணுமான சக்திவெள்ளம்—இந்த
விந்தையெல்லா மாங்கதுசெய் கள்ளம்—பழ
வேதமா யதன்முனுள்ள நாதமாய் விளங்குமிந்த
வீரசக்தி வெள்ளம் விழும் பள்ளம்—ஆக
வேண்டுநித்த மென்றனேழை யுள்ளம்.

2. அன்புவடி வாகிநிற்பள் துன்பெலா மவளிழைப்பள்
ஆக்க நீக்கம் யாவுமவள் செய்கை—இதை
ஆர்ந்துணர்ந்த வர்களுக்குண் டுய்கை—அவள்
ஆதியா யநாதியா யகண்டவறி வாவளுன்றன்
அறிவு மவள் மேனியிலோர் சைகை—அவள்
ஆனந்தத்தி னெல்லையற்ற பொய்கை.

இன்பவடிவாகிநிற்பள் துன்பெலாமவளிழைப்பள்
இஃதெலா மவள்புரியு மாயை—அவள்
ஏதுமற்ற மெய்ப்பொருளின் சாயை—எனில்
எண்ணியே ஓம் சக்தியெனும் புண்ணியமுனிவர்நித்த
மெய்துவார் மெய்ஞ் ஞான மெனுந்தீயை—எரித்
தெற்றுவாரிந் நானெனும் பொய்ப் பேயை.

3. ஆதியாஞ் சிவனுமவன் சோதியானசக்தியுந்தான்
அங்குமிங்கு மெங்குமுள வாகும்—ஒன்றே
யாகினு லுலகனைத்தும் சாகும்—அவை [யிதை
யன்றியோர்பொருளுமில்லை,அன்றியொன்றுமில்லை
ஆய்ந்திடில் துயரமெல்லாம் போகும்—இந்த
அறிவுதான் பரமஞான மாகும்.
நீதியா மரசுசெய்வர் நிதிகள்பல கோடிதுய்ப்பர்
நீண்டகாலம் வாழ்வர் தரைமீது—எந்த
நெறியு மெய்துவர் நினைத்தபோது—அந்த
நித்தமுத்த சுத்த புத்த சத்த பெருங் காளிபத
நீழலடைந் தார்க்கில்லை யோர்தீது—என்று
நேர்மை வேதஞ் சொல்லும் வழியீது.

## 41. முத்துமாரி.

1. உலகத்து நாயகியே,—எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ!
உன் பாதம் சரண்புகுந்தோம்,—எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ!
கலகத் தரக்கர் பலர்,—எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ!
கருத்தி னுள்ளே புகுந்து விட்டார், எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ!
பல கற்றும் பல கேட்டும்,—எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ!
பய னொன்று மில்லையடி,—எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ!
நிலை யெங்கும் காணவில்லை,—எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ!
நின் பாதம் சரண் புகுந்தோம்,—எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ.

2. துணி வெளுக்க மண்ணுண்டு,—எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ!
தோல் வெளுக்கச் சாம்பருண்டு,—எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ!
மணி வெளுக்கச் சாணையுண்டு,—எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ!
மனம் வெளுக்க வழியில்லை,—எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ!

பிணிகளுக்கு மாற்றுண்டு,—எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ!
பேதைமைக்கு மாற்றில்லை,—எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ!
அணிகளுக்கொரெல்லை யில்லாய்,—எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ! [முத்து
அடைக்கல மிங்குனைப்புகுந்தோம்,—எங்கள்
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ!

## 42. தேச முத்துமாரி.

1. தேடியுனைச் சரணடைந்தேன்,
தேச முத்து மாரி!
கேடதனை நீக்கிடுவாய்,
கேட்ட வரந் தருவாய்.

2. பாடியுனைச் சரணடைந்தேன்
பாச மெல்லாங் களைவாய்
கோடி நலஞ் செய்திடுவாய்,
குறைக ளெல்லாந் தீர்ப்பாய்.

3. எப்பொழுதுங் கவலையிலே
இணங்கி நிற்பான் பாவி;
ஒப்பி யுன தேவல் செய்வேன்
உன தருளால் வாழ்வேன்.

4. சக்தி யென்று நேர மெல்லாந்
தமிழ்க் கவிதை பாடி,
பக்தியுடன் போற்றி நின்றால்
பய மனைத்துந் தீரும்.

5. ஆதாரம் சக்தி யென்றே
அருமறைகள் கூறும்;
யாதானுந் தொழில் புரிவோம்;
யாது மவள் தொழிலாம்.

6. துன்பமே யியற்கை யெனும்
சொல்லை மறந்திடுவோம்;
இன்பமே வேண்டி நிற்போம்;
யாவு மவள் தருவாள்.

7. நம்பினார் கெடுவதில்லை;
நான்கு மறைத் தீர்ப்பு;
அம்பிகையைச் சரண்புகுந்தால்
அதிக வரம் பெறலாம்.

## 43. கோமதி மஹிமை.

(சங்கர நயினார் கோயில் ஆவுடையம்மையின் புகழ். சிவபிரான் தானும் திருமாலும் ஒரு பொருளென்றுணர்த்தி ஒரு வடிவங் காட்டிய சரித்திரம்).

1. தாருக வனத்தினிலே—சிவன்
சரண நன்மலரிடை யுளம் பதித்துச்
சீருறத் தவம் புரிவார்—பர
சிவன் புகழமுதினை யருந்திடுவார்
பேருயர் முனிவர் முன்னே—கல்விப்
பெருங்கடல் பருகிய சூதனென்பான்
தேரு மெய்ஞ் ஞானத்தினால்—உயர்
சிவனிகர் முனிவரன் செப்புகின்றான் :

2. "வாழிய, முனிவர்களே,—புகழ்
வளர்ந்திடுஞ் சங்கரன் கோயிலிலே,
ஊழியைச் சமைத்த பிரான்,—இந்த
உலகமெலா முருக்கொண்ட பிரான்,
ஏழிரு புவனத்திலும்—என்றும்
இயல் பெறும் உயிர்களுக் குயிராவான்,
ஆழு நல் லறிவா வான்,—ஒளி
யறி வினைக் கடந்த மெய்ப் பொருளாவான்,

3. தேவர்க் கெலாந் தேவன்,—உயர்
சிவ பெருமான் பண்டொர்காலத்திலே
காவலி னுலகளிக்கும்—அந்தக்
கண்ணனுந் தானுமிங் கோருருவாய்

ஆவ லொடருந் தவங்கள்—பல
ஆற்றிய நாகர்களிருவர் முன்னே
மேவி நின்றருள் புரிந்தான்,—அந்த
வியப் புறு சரிதையை விளம்புகின்றேன் ;

4. கேளீர் முனிவர்களே,—இந்தக்
கீர்த்தி கொள் சரிதையைக் கேட்டவர்க்கே,
வேள்விகள் கோடி செய்தால்—சதுர்
வேதங்களாயிர முறை படித்தால்
மூளு நற் புண்ணியந்தான்—வந்து
மொய்த்திடும் ; சிவனியல் விளங்கி நிற்கும் ;
நாளு நற் செல்வங்கள்—பல
நணுகிடும் ; சரத மெய் வாழ்வுண்டாம்.

5. இக் கதை யுரைத்திடுவேன்,—உளம்
இன்புறக் கேட்பீர், முனிவர்களே!
நக்க பிரானரு ளால்—இங்கு
நடைபெறு முலகங்கள் கணக்கிலவாம் ;
தொக்கன அண்டங்கள்—வளர்
தொகை பல கோடி பல் கோடிகளாம்!
இக்கணக்கெவ ரறிவார்? புவி
எத்தனை யுளதென்பதியா ரறிவார்?

6. நக்க பிரானறிவான் ;—மற்று
நானறியேன், பிற நர ரறியார் ;
தொக்க பேரண்டங்கள்—கொண்ட
தொகைக் கெல்லை யில்லை யென்று சொல்லுகின்ற

தக்க பல் சாத்திரங்கள்;—ஒளி
தருகின்ற வானமோர் கடல் போலாம்;
அக்கடலதனுக்கே—எங்கும்
அக்கரை யிக்கரை யொன்றில்லையாம்.

7. இக்கட லதனகத்தே—அங்கங்
கிடை யிடை தோன்றும் புன் குமிழிகள் போல்
தொக்கன உலகங்கள்;—திசைத்
தூவெளி யதனிடை விரைந்தோடும்;
மிக்கதோர் வியப்புடைத்தாம்—இந்த
வியன் பெரு வையத்தின் காட்சி, கண்டீர்;
மெய்க்கலை முனிவர்களே!—இதன்
மெய்ப் பொருள் பரசிவன் சக்தி, கண்டீர்.

8. எல்லை யுண்டோ இலையோ—இங்
கியாவர் கண்டார் திசை வெளியினுக்கே?
சொல்லு மொர் வரம்பிட்டால்—அதை

(இது முற்றுப்பெற வில்லை.)

## 44. யோக சித்தி.

### வரங் கேட்டல்.

1\. விண்ணும் மண்ணுந் தனியாளும்—எங்கள்
வீரை சக்தி நினதருளே—என்றன்
கண்ணுங் கருத்து மெனக் கொண்டு—அன்பு
கசிந்து கசிந்து கசிந் துருகி—நான்
பண்ணும் பூசனைக ளெல்லாம்—வெறும்
பாலை வனத்தி லிட்ட நீரோ ?—உனக்
கெண்ணுஞ் சிந்தை யொன்றிலையோ—அறி
வில்லா தகில மளிப்பாயோ ?

2\. நீயே சரணமென்று கூவி—என்றன்
நெஞ்சிற் பேருறுதி கொண்டு—அடி
தாயே யெனக்கு மிக நிதியும்—அறந்
தன்னைக் காக்கு மொரு திறனும்—தரு
வாயே யென்று பணிந்தேத்திப்—பல
வாறு நினது புகழ் பாடி—வாய்
ஓயே னுவ துணராயோ ?—நின
துண்மை தவறுவ தொரழகோ ?

3\. காளீ வலிய சாமுண்டி—ஓங்
காரத் தலைவி யென் னிராணி—பல
நாளிங் கெனை யலைக்க லாமோ ?—உள்ளம்
நாடும் பொரு ளடைதற் கன்றோ—மலர்த்

தாளில் விழுந் தபயங் கேட்டேன்—அது
தாரா யெனி லுயிரைத் தீராய்—துன்பம்
நீளி லுயிர் தரிக்க மாட்டேன்—கரு
ணீஇ யென் னியல் பறியா யோ?

4. தேடிச் சோறு நிதந் தின்று—பல
சின்னஞ் சிறு கதைகள் பேசி—மனம்
வாடித் துன்ப மிக வுழன்று—பிறர்
வாடப் பல செயல்கள் செய்து—நரை
கூடிக் கிழப் பருவ மெய்தி—கொடுங்
கூற்றுக் கிரையெனப் பின்மாயும்—பல
வேடிக்கை மனிதரைப் போலே—நான்
வீழ்வே னென்று நினைத்தாயோ?

5. நின்னைச் சில வரங்கள் கேட்பேன்—அவை
நேரே யின்றெனக்குத் தருவாய்—என்றன்
முன்னைத் தீய வினைப் பயன்கள்—இன்னும்
மூளா தழிந்திடுதல் வேண்டும்—இனி
என்னைப் புதிய வுயிராக்கி—எனக்
கேதுங் கவலை யறச் செய்து—மதி
தன்னை மிகத்தெளிவு செய்து—என்றும்
சந்தோஷங் கொண்டிருக்கச்—செய்வாய்.

6. தோளை வலியுடையதாக்கி—உடற்
சோர்வும் பிணி பலவும் போக்கி—அரி
வாளைக் கொண்டு பிளந்தாலும்—கட்டு
மாறா வுடலுறுதி தந்து—சுடர்

நாளைக் கண்டதோர் மலர்போல்—ஒளி
நண்ணித் திகழு முகந் தந்து—மத
வேளை வெல்லு முறை கூறித்—தவ
மேன்மை கொடுத் தருளல் வேண்டும்.

7. எண்ணுங் காரியங்க ளெல்லாம்—வெற்றி
யேறப் புரிந் தருளல் வேண்டும்—தொழில்
பண்ணப் பெரு நிதியம் வேண்டும்—அதிற்
பல்லோர் துணை புரிதல் வேண்டும்—சுவை
நண்ணும் பாட்டினொடு தாளம்—மிக
நன்று வுளத் தழுந்தல் வேண்டும்—பல
பண்ணிற் கோடி வகை யின்பம்—நான்
பாடத் திறனடைதல் வேண்டும்.

8. கல்லை வயிரமணி யாக்கல்—செம்பைக்
கட்டித் தங்க மெனச் செய்தல்—வெறும்
புல்லை நெல்லெனப் புரிதல்—பன்றிப்
போத்தைச் சிங்கவே றாக்கல்—மண்ணை
வெல்லத் தினிப்பு வரச் செய்தல்—என
விந்தை தோன்றிட இந்நாட்டை—நான்
தொல்லை தீர்த் துயர்வு கல்வி—வெற்றி
சூழும் வீர மறி வாண்மை

9. கூடுந் திரவியத்தின் குவைகள்—திறல்
கொள்ளுங் கோடிவகைத் தொழில்கள்—இவை
நாடும் படிக்கு வினை செய்து—இந்த
நாட்டோர் கீர்த்தி யெங்கு மோங்கக்—கலி

சாடுந் திறனெனக்குத் தருவாய்—அடி
தாயே உனக் கரிய துண்டோ—மதி
மூடும் பொய்மை யிருளெல்லாம்—எனை
முற்றும் விட் டகல வேண்டும்;
10. ஐயந் தீர்ந்து விடல் வேண்டும்—புலை
அச்சம்போ யொழிதல் வேண்டும்—பல
பையச் சொல்லுவ திங் கென்னே—முன்னைப்
பார்த்தன் கண்ணனிவர் நேரா—எனை
உய்யக் கொண்டருள வேண்டும்—அடி
உன்னைக் கோடிமுறை தொழுதேன்—இனி
வையத் தலைமை யெனக் கருள்வாய்—அன்னை
வாழி, நின்ன தருள் வாழி.
ஓம் காளீ வலிய சாமுண்டீ
ஓங்காரத் தலைவி யென் னிராணி.

குறிப்பு:—காளி, சக்தி, மாரி முதலிய உலகத்தின் மூலசக்தியைக் குறிக்கும் பெயர்களாம்.

---

## 45. போற்றி யகவல்.

போற்றி உலகொரு மூன்றையும் புணர்ப்பாய் !
மாற்றுவாய், துடைப்பாய், வளர்ப்பாய், காப்பாய்!
கனியிலே சுவையும் காற்றிலே யியக்கமும்
கலந்தாற் போலநீ அனைத்திலும் கலந்தாய்.
உலகெலாந் தானு மொளிர்வாய், போற்றி !
அன்னை, போற்றி ! அமுதமே, போற்றி !
புதியதிற் புதுமையாய், முதியதில் முதுமையாய்,
உயிரிலே யுயிராய், இறப்பிலு முயிராய்,

உண்டெனும் பொருளி னுண்மையாய், என்னுளே
நானெனும் பொருளாய், நானையே பெருக்கித்
தானென மாற்றுஞ் சாகாச் சுடராய்,
கவலைநோய் தீர்க்கு மருந்தின் கடலாம்,
பிணியிருள் கெடுக்கும் பேரொளி ஞாயிறாய்.
யானென நின்றி யிருக்குநல் யோகியர்
ஞானமா மகுட நடுத்திகழ் மணியாய்,
செய்கையாய், ஊக்கமாய், சித்தமாய், அறிவாய்
நின்றிடுந் தாயே, நித்தமும் போற்றி!
இன்பங் கேட்டேன், ஈவாய் போற்றி!
துன்பம் வேண்டேன், துடைப்பாய் போற்றி!
அமுதங் கேட்டேன், அளிப்பாய் போற்றி!
சக்தி, போற்றி! தாயே, போற்றி!
முக்தி, போற்றி! மோனமே, போற்றி!
சாவினை வேண்டேன், தவிர்ப்பாய் போற்றி!

## 46. காணி நிலம்.

1. காணி நிலம் வேண்டும்,—பராசக்தி
காணி நிலம் வேண்டும்;—அங்கு
தூணி லழகியதாய்—நன்மாடங்கள்
துய்ய நிறத்தினதாய்—அந்தக்
காணி நிலத்திடையே—ஓர் மாளிகை
கட்டித் தரவேண்டும்;—அங்கு
கேணியருகினிலே—தென்னைமரம்
கீற்று மிள நீரும்,

2. பத்துப் பனிரண்டு—தென்னை மரம்
பக்கத்திலே வேணும் ;—நல்ல
முத்துச் சுடர் போலே—நிலாவொளி
முன்பு வர வேணும் ;—அங்கு
கத்துங் குயிலோசை—சற்றே வந்து
காதிற்பட வேணும் ;—என்றன்
சித்த மகிழ்ந்திடவே—நன்றாயிளந்
தென்றல் வரவேணும்.

3. பாட்டுக் கலந்திடவே—அங்கே யொரு
பத்தினிப் பெண் வேணும் ;—எங்கள்
கூட்டுக் களியினிலே—கவிதைகள்
கொண்டுதர வேணும் ;—அந்தக்
காட்டு வெளியினிலே,—அம்மா, நின்றன்
காவலுற வேணும் ;—என்றன்
பாட்டுத் திறத்தாலே—இவ்வையத்தைப்
பாலித்திட வேணும்.

## 47. மகாசக்தி வெண்பா.

1. தன்னை மறந்து ஸகல உலகினையும்
மன்ன நிதங்காக்கு மஹாசக்தி—அன்னை
அவளே துணையென் றனவரதம் நெஞ்சந்
துவளா திருத்தல் சுகம்.

2. நெஞ்சிற் கவலை நிதமும் பயிராக்கி
அஞ்சி யுயிர்வாழ்த லறியாமை ;—தஞ்ச மென்றே
வையமெலாங் காக்கு மஹாசக்தி நல்லருளை
ஐயமறப் பற்ற லறிவு.

3. வையகத்துக் கில்லை, மனமே, நினக்கு நலஞ்
செய்யக்கருதி யிவை செப்புவேன்—பொய்யில்லை
எல்லாம் புரக்கும் இறை நமையுங் காக்குமென்ற
சொல்லால் அழியுந் துயர்.

4. என்ணிற் கடங்காமல் எங்கும் பரந்தனவாய்
விண்ணிற் சுடர்கின்ற மீனையெல்லாம்—
[பண்ணியதோர்
சக்தியே நம்மைச் சமைத்தது காண், நூறாண்டு
பக்தியுடன் வாழும் படிக்கு.

## 48. ஓம் சக்தி.

1. நெஞ்சுக்கு நீதியும் தோளுக்கு வாளும்
நிறைந்த சுடர் மணிப் பூண்,
பஞ்சுக்கு நேர் பல துன்பங்களாம், இவள்
பார்வைக்கு நேர் பெருந்தீ.
வஞ்சனை யின்றிப் பகையின்றிச் சூதின்றி
வையக மாந்த ரெல்லாம்
தஞ்ச மென்றே யுரைப்பீர் அவள்பேர், சக்தி
ஓம் சக்தி, ஓம் சக்தி, ஓம்.

2. "நல்லதுந் தீயதுஞ் செய்திடும் சக்தி
நலத்தை நமக் கிழைப்பாள்;
அல்லது நீங்கும்" என்றே யுலகேழும்
அறைந்திடுவாய், முரசே!

சொல்லத் தகுந்த பொருளன்று காண்! இங்கு
சொல்லு மவர் தமையே
அல்லல் கெடுத் தமரர்க் கிணையாக்கிடும்
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்.

3. நம்புவதே வழியென்ற மறை தன்னை
நாமின்று நம்பி விட்டோம்.
கும்பிட் டெந்நேரமும் "சக்தி" யென்றுனைக்
கும்பிடுவேன், மனமே.
அம்புக்குந் தீக்கும் விடத்துக்கும் நோவுக்கும்
அச்சமில் லாத படி
உம்பர்க்கு மிம்பர்க்கும் வாழ்வுதரும் பதம்
ஓம் சக்தி, ஓம் சக்தி, ஓம்.

4. பொன்னைப் பொழிந்திடு, மின்னை வளர்த்திடு,
போற்றி யுனக் கிசைத்தோம்;
அன்னை பராசக்தி யென்றுரைத்தோம்; தளை
யத்தனையுங் களைந்தோம்;
சொன்னபடிக்கு நடந்திடுவாய், மன
மே, தொழில் வேறில்லை, காண்;
இன்னுமதே யுரைப்போம், சக்தி ஓம் சக்தி
ஓம் சக்தி, ஓம் சக்தி, ஓம்.

5. வெள்ளை மலர் மிசை வேதக் கருப்பொரு
ளாக விளங்கிடுவாய்!
தெள்ளு கலைத்தமிழ் வாணி, நினக்கொரு
விண்ணப்பஞ் செய்திடுவேன்,
எள்ளத்தனை பொழுதும் பயனின்றி
யிரா தென்றன் நாவினிலே
வெள்ள மெனப் பொழிவாய், சக்திவேல், சக்தி
வேல், சக்திவேல், சக்திவேல்!

## 49. கேட்பன.

1\. நல்லதோர் வீணைசெய்தே—அதை
நலங்கெடப்புழுதியி லெறிவதுண்டோ?
சொல்லடி, சிவசக்தி!—எனைச்
சுடர்மிகு மறிவுடன் படைத்துவிட்டாய்,
வல்லமை தாராயோ, இந்த
மாநிலம் பயனுற வாழ்வதற்கே?
சொல்லடி, சிவசக்தி!—நிலச்
சுமையெனவாழ்ந்திடப் புரிகுவையோ?

2\. விசையுறு பந்தினைப்போல்—உள்ளம்
வேண்டியபடி செலும் உடல் கேட்டேன்,
நசையறு மனங் கேட்டேன்,—நித்தம்
நவமெனச்சுடர் தரும் உயிர்கேட்டேன்,
தசையினைத் தீ சுடினும்—சிவ
சக்தியைப் பாடுநல் லகங் கேட்டேன்,
அசைவறு மதிகேட்டேன்;—இவை
அருள்வதில் உனக்கெதுந் தடையுளதோ?

---

## 50. பராசக்தி.

1\. கதைகள் சொல்லிக் கவிதை யெழுதென்பார்
காவியம் பல நீண்டன கட்டென்பார்;
விதவிதப் படு மக்களின் சித்திரம்
மேவு நாடகச் செய்யுளை மே வென்பார்;
இதயமோ எனிற் காலையு மாலையும்
எந்த நேரமும் வாணியைக் கூவுங் கால்
எதையும் வேண்டில தன்னை பராசக்தி
இன்ப மொன்றினைப் பாடுத லன்றியே.

2. நாட்டு மக்கள் பிணியும் வறுமையும்
நையப் பாடென்றொரு தெய்வங் கூறுமே;
கூட்டி மானுடச் சாதியை யொன்றெனக்
கொண்டு வைய முழுதும் பயனுறப்
பாட்டிலே யறங் காட்டெனுமோர் தெய்வம்;
பண்ணி லின்பமுங் கற்பனை விந்தையும்
ஊட்டி யெங்கும் உவகை பெருகிட
ஓங்கு மின்கவி யோதெனும் வேறொன்றே.

3. நாட்டு மக்கள் நலமுற்று வாழவும்
நானிலத்தவர் மேனிலை யெய்தவும்
பாட்டிலே தனி யின்பத்தை நாட்டவும்
பண்ணிலே களி கூட்டவும் வேண்டி, நான்
மூட்டு மன்புக் கனலோடு வாணியை
முன்னுகின்ற பொழுதி லெலாங் குரல்
காட்டி யன்னை பராசக்தி யேழையேன்
கவிதை யாவுந் தனக் கெனக் கேட்கின்றாள்.

4. மழை பொழிந்திடும் வண்ணத்தைக் கண்டு நான்
வானிருண்டு கரும் புயல் கூடியே
இழையு மின்னல் சரேலென்று பாயவும்
ஈர வாடை யிரைந் தொலி செய்யவும்
உழை யெலாம் இடையின்றி யிவ் வான நீர்
ஊற்றுஞ் செய்தி யுரைத் திடவேண்டுங் கால்,
"மழையுங் காற்றும் பராசக்தி செய்கை காண்!
வாழ்க தாய்!" என்று பாடுமென் வாணியே.

5. சொல்லினுக் கெளிதாகவு நின்றிடாள்
சொல்லை வேறிடஞ் செல்ல வழி விடாள் ;
அல்லினுக் குட் பெருஞ் சுடர் காண்பவர்
அன்னை சக்தியின் மேனி நலங் கண்டார்.
கல்லினுக் குள் அறி வொளி காணுங் கால்,
கால வெள்ளத்திலே நிலை காணுங் கால்,
புல்லினில் வயிரப் படை தோன்றுங் கால்,
பூதலத்தில் பராசக்தி தோன்றுமே!

## 51. சக்திக் கூத்து.

ராகம்—பியாக்.

பல்லவி.

தகத் தகத்தகத் தகதகவென் றாடோமோ?—சிவ
சக்தி சக்திசக்தியென்று பாடோமோ ? (தக)

சரணங்கள்.

1. அகத்தகத் தகத்தினிலே உள்நின்றாள்—அவள்
அம்மை யம்மை யெம்மை நாடு பொய் வென்றாள்
தகத்தக நமக் கருள் புரிவாள் தாளொன்றே
சரண மென்று வாழ்ந்திடுவோம் நாமென்றே(தக)

2. புகப்புகப் புக வின்பமடா போதெல்லாம்
புறத்தினிலே தள்ளிடுவாய் சூதெல்லாம்
குகைக்கு ளங்கே யிருக்குதடா தீபோலே—அது
குழந்தை யதன் தாயடிக்கீழ் சேய்போலே. (தக)

3. மிகத்தகைப்படு களியினிலே மெய்சோர—உள
வீரம்வந்து சோர்வை வென்று கைதேர [நாம்
சகத்தினிலுள்ள மனிதரெல்லாம் நன்று நன்றென
சதிருடனே தாள மிசையிரண்டு மொன்றென(தக)

4. இந்திர னுலகினிலே நல்லின்பம்
இருக்குதென்பார் அதனையிங்கே கொண்டெய்தி
மந்திரம் போல் வேண்டுமடா சொல்லின்பம்—
நல்ல
மதமுறவே அமுதநிலை கண்டெய்தித் (தக)

## 52. சக்தி

1. துன்ப மிலாத நிலையே சக்தி
தூக்க மிலாக் கண் விழிப்பே சக்தி
அன்பு கனிந்த கனிவே சக்தி
ஆண்மை நிறைந்த நிறைவே சக்தி
இன்ப முதிர்ந்த முதிர்வே சக்தி
எண்ணத் திருக்கு மெரியே சக்தி
முன்புநிற் கின்ற தொழிலே சக்தி
முக்தி நிலையின் முடிவே சக்தி.

2. சோம்பர் கெடுக்குந் துணிவே சக்தி
சொல்லில் விளங்கும் சுடரே சக்தி
தீம்பழந் தன்னில் சுவையே சக்தி
தெய்வத்தை யெண்ணு நினைவே சக்தி
பாம்பை யடிக்கும் படையே சக்தி
பாட்டினில் வந்த களியே சக்தி
சாம்பரைப்பூசி மலைமிசை வாழும்
சங்கர னன்புத் தழலே சக்தி.

3. வாழ்வு பெருக்கு மதியே சக்தி
மாநிலங் காக்கும் வலியே சக்தி
தாழ்வு தடுக்குஞ் சதிரே சக்தி
சஞ்சல நீக்குந் தவமே சக்தி
வீழ்வு தடுக்கும் விறலே சக்தி
விண்ணை யளக்கும் விரிவே சக்தி
ஊழ்வினை நீக்கும் உயர்வே சக்தி
உள்ளத் தொளிரும் விளக்கே சக்தி.



## 53. வைய முழுதும்.

கண்ணிகள்.

1. வைய முழுதும் படைத் தளிக்கின்ற
மஹா சக்தி தன்புகழ் வாழ்த்து கின்றோம்,
செய்யும் வினைக ளனைத்தி லுமே வெற்றி
சேர்ந்திட நல்லருள் செய்க வென்றே.

2. பூதங்க ளைந்தி லிருந் தெங்குங் கண்ணிற்
புலப்படும் சக்தியைப் போற்று கின்றோம்,
வேதங்கள் சொன்ன படிக்கு மனிதரை
மேன்மையுறச் செய்தல் வேண்டு மென்றே.

3. வேகம் கவர்ச்சி முதலிய பல்வினை
மே விடும் சக்தியை மேவுகின்றோம்,
ஏக நிலையி லிருக்கும் அமிர்தத்தை
யாங்க ளறிந்திட வேண்டு மென்றே.

4. உயிரெனத் தோன்றி யுணவு கொண்டே வளர்ந்
தோங்கிடும் சக்தியை ஓதுகின்றோம்,
பயிரினைக் காக்கும் மழையென எங்களைப்
பாலித்து நித்தம் வளர்க்க வென்றே.

5. சித்தத்திலே நின்று சேர்வ துணரும்
சிவசக்தி தன்புகழ் செப்புகின்றோம்,
இத்தரை மீதினில் இன்பங்கள் யாவும்
எமக்குத் தெரிந்திடல் வேண்டு மென்றே.

6. மாறுத லின்றிப் பராசக்தி தன் புகழ்
வைய மிசை நித்தம் பாடுகின்றோம்,
நூறு வயது புகழுடன் வாழ்ந்துயர்
நோக்கங்கள் பெற்றிட வேண்டு மென்றே.

7. ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி
ஓம் சக்தி யென்றுரை செய்திடுவோம்;
ஓம் சக்தி யென்பவர் உண்மை கண்டார், சுடர்
ஒண்மை கொண்டார், உயிர் வண்மை கொண்டார்.

---

## 54. சக்தி விளக்கம்.

1. ஆதிப் பரம்பொருளின் ஊக்கம்—அதை
அன்னை யெனப்பணிதல் ஆக்கம்;
சூதில்லை காணுமிந்த நாட்டீர்—மற்றத்
தொல்லை மதங்கள் செய்யுந் தூக்கம்.

2. மூலப் பழம்பொருளின் நாட்டம்—இந்த
மூன்று புவியுமதன் ஆட்டம்;
காலப் பெருங்களத்தின் மீதே—எங்கள்
காளி நடமுலகக் கூட்டம்.

3. காலை யிளவெயிலின் காட்சி—அவள்
கண்ணொளி காட்டுகின்ற மாட்சி;

நீல விசும்பினிடை யிரவிற்—சுடர்
நேமி யனைத்துமவ ளாட்சி.

4. நாரண னென்று பழவேதம்—சொல்லும்
நாயகன் சக்தி திருப் பாதம்;
சேரத் தவம்புரிந்து பெறுவார்—இங்கு
செல்வ மறிவு சிவபோதம்.

5. ஆதி சிவனுடைய சக்தி—எங்கள்
அன்னை யருள்பெறுதல் முக்தி;
மீதி யுயிரிருக்கும் போதே—அதை
வெல்லல் சுகத்தினுக்கு யுக்தி.

6. பண்டை விதியுடைய தேவி—வெள்ளை
பாரதி யன்னையருள் மேவி,
கண்ட பொருள் விளக்கும் நூல்கள்—பல
கற்றலில் லாதவனோர் பாவி.

7.. மூர்த்திகள் மூன்றுபொருளொன்று;—அந்த
மூலப் பொருள் ஒளியின் குன்று;
நேர்த்தி திகழுமந்த வொளியை—எந்த
நேரமும் போற்று சக்தி யென்று.

## 55. சக்திக்கு ஆத்ம ஸமர்ப்பணம்.

ராகம்—பூபாளம். தாளம்—சதுஸ்ர ஏகம்.

கையைச், சக்தி தனக்கு கருவி யாக்கு—அது
சாதனைகள் யாவினையுங் கூடும்—கையை
சக்தி தனக்கே கருவி யாக்கு—அது
சக்தி யுற்றுக் கல்லினையுஞ் சாடும். (1)

கண்ணைச், சக்தி தனக்கே கருவி யாக்கு—அது
சக்தி வழியினை யது காணும்—கண்ணைச்
சக்தி தனக்கே கருவி யாக்கு—அது
சக்தியமு நல்லருளும் பூணும். (2)

செவி, சக்தி தனக்கே கருவி யாக்கு—சிவ
சக்தி சொலு மொழியது கேட்கும்—செவி
சக்தி தனக்கே கருவியாக்கு—அது
சக்தி திருப் பாடலினை வேட்கும். (3)

வாய், சக்தி தனக்கே கருவி யாக்கு—சிவ
சக்தி புகழினை யது முழங்கும்—வாய்
சக்தி தனக்கே கருவியாக்கு—அது
சக்தி நெறி யாவினையும் வழங்கும். (4)

சிவ, சக்திதனை நாசி நித்த முகரும்—அதைச்
சக்தி தனக்கே கருவியாக்கு—சிவ
சக்தி திருச் சுவையினை நுகரும்—சிவ
சக்தி தனக்கே யெமது நாக்கு. (5)

மெய்யைச், சக்தி தனக்கே கருவி யாக்கு—சிவ
சக்தி தருந் திறனதி லேறும்—மெய்யைச்
சக்தி தனக்கே கருவியாக்கு—அது
சாதலற்ற வழியினைத் தேறும். (6)

கண்டம், சக்தி தனக்கே கருவி யாக்கு—அது
சந்ததமு நல்லமுதைப் பாடும்—கண்டம்
சக்தி தனக்கே கருவி யாக்கு—அது
சக்தி யுடனென்று முறவாடும். (7)

தோள், சக்தி தனக்கே கருவி யாக்கு—அது
தாரணியு மேலுலகுந் தாங்கும்—தோள்
சக்தி தனக்கே கருவி யாக்கு—அது
சக்திபெற்று மேருவென வோங்கும். (8)

நெஞ்சம், சக்தி தனக்கே கருவி யாக்கு—அது
சக்தியுற நித்தம் விரிவாகும்—நெஞ்சம்
சக்தி தனக்கே கருவி யாக்கு—அதைத்
தாக்கவரும் வாளொதுங்கிப் போகும். (9)

சிவ சக்தி தனக்கே யெமது வயிறு—அது
சாம்பரையு நல்லவுண வாக்கும்—சிவ
சக்தி தனக்கே யெமது வயிறு—அது
சக்திபெற வுடலினைக் காக்கும். (10)

இடை, சக்தி தனக்கே கருவி யாக்கு—நல்ல
சக்தியுள்ள சந்ததிகள் தோன்றும்—இடை
சக்தி தனக்கே கருவி யாக்கு—நின்றன்
சாதிமுற்று நல்லறத்தி லூன்றும். (11)

கால், சக்தி தனக்கே கருவி யாக்கு—அது
சாடியெழு கடலையுந் தாவும்—கால்
சக்தி தனக்கே கருவி யாக்கு—அது
சஞ்சல மில்லாம லெங்குமோங்கும். (12)

மனம், சக்தி தனக்கே கருவி யாக்கு—அது
சஞ்சலங்கள் தீர்ந்தொருமை கூடும்—மனம்
சக்தி தனக்கே கருவி யாக்கு—அது
சாத்துவிகத் தன்மையினைச் சூடும். (13)

மனம், சக்தி தனக்கே கருவி யாக்கு—அது
சக்தியற்ற சிந்தனைகள் தீரும்—மனம்
சக்தி தனக்கே கருவி யாக்கு—அதில்
சாரு நல்ல உறுதியுஞ் சேரும். (14)

மனம், சக்தி தனக்கே கருவி யாக்கு—அது
சக்தி சக்தி சக்தி யென்று பேசும்—மனம்
சக்தி தனக்கே கருவி யாக்கு—அதில்
சார்ந்திருக்கு நல்லுறவுந் தேசும். (15)

மனம், சக்தி தனக்கே கருவி யாக்கு—அது
சக்தி நுட்பம் யாவினையு நாடும்—மனம்
சக்தி தனக்கே கருவியாக்கு—அது
சக்தி சக்தி யென்று குதித்தாடும். (16)

மனம், சக்தி தனக்கே கருவி யாக்கு—அது
சக்தியினை யெத்திசையுஞ் சேர்க்கும்—மனம்
சக்தி தனக்கே கருவி யாக்கு—அது
தான் விரும்பில் மாமலையைப் பேர்க்கும்.

மனம், சக்தி தனக்கே கருவி யாக்கு—அது
சந்ததமுஞ் சக்தி தனைச் சூழும்—மனம்
சக்தி தனக்கே கருவி யாக்கு—அதில்
சாவு பெறுந் தீவினையும் ஊழும். (18)

மனம், சக்தி தனக்கே யுரிமை யாக்கு—எதைத்
தான் விரும்பினாலும் வந்து சேரும்—மனம்
சக்தி தனக்கே யுரிமை யாக்கு—உடல்
தன்னிலுயர் சக்தி வந்து நேரும். (19)

மனம், சக்தி தனக்கே கருவி யாக்கு—இந்தத்
தாரணியில் நூறுவய தாகும்—மனம்
சக்தி தனக்கே கருவி யாக்கு—உன்னைச்
சாரவந்த நோயழிந்து போகும். (20)

மனம், சக்தி தனக்கே கருவி யாக்கு—தோள்
சக்திபெற்றுநல்ல தொழில்செய்யும்—மனம்
சக்தி தனக்கே கருவி யாக்கு—எங்கும்
சக்தியருள் மாரிவந்து பெய்யும். (21)

மனம், சக்தி தனக்கே கருவி யாக்கு—சிவ
சக்தி நடையாவு நன்கு பழகும்—மனம்
சக்தி தனக்கே கருவி யாக்கு—முகம்
சார்ந்திருக்கு நல்லருளு மழகும். (22)

மனம், சக்தி தனக்கே கருவி யாக்கு—உயர்
சாத்திரங்கள்யாவு நன்குதெரியும்—மனம்
சக்தி தனக்கே கருவி யாக்கு—நல்ல
சத்திய விளக்கு நித்த மெரியும். (23)

சித்தம், சக்தி தனக்கே யுரிமை யாக்கு—நல்ல
தாளவகை சந்தவகை காட்டும்—சித்தம்
சக்தி தனக்கே யுரிமை யாக்கு—அதில்
சாரு நல்ல வார்த்தைகளும் பாட்டும். (24)

சித்தம், சக்தி தனக்கே யுரிமை யாக்கு—அது [சித்தம்
சக்தியை யெல்லோர்க்கு முணர்வுறுத்தும்—
சக்தி தனக்கே யுரிமையாக்கு—அது
சக்திபுகழ் திக்கனைத்து நிறுத்தும். (25)

சித்தம், சக்தி தனக்கே யுரிமை யாக்கு—அது
சக்தி சக்தியென்று குழலூதும்—சித்தம்
சக்தி தனக்கே யுரிமையாக்கு—அதில்
சார்வதில்லை அச்சமுடன் சூதும். (26)

சித்தம், சக்தி தனக்கே யுரிமை யாக்கு—அது
சக்தி யென்று வீணைதனில் பேசும்—சித்தம்
சக்தி தனக்கே யுரிமை யாக்கு—அது
சக்தி பரிமள மிங்கு வீசும். (27)

சித்தம், சக்தி தனக்கே யுரிமை யாக்கு—அது
சக்தி யென்று தாளமிட்டு முழக்கும்—சித்தம்
சக்தி தனக்கே யுரிமை யாக்கு—அது
சஞ்சலங்கள் யாவினையு மழிக்கும். (28)

சித்தம், சக்தி தனக்கே யுரிமை யாக்கு—அது
சக்தி வந்து கோட்டைகட்டிவாழும்—சித்தம்
சக்தி தனக்கே யுரிமை யாக்கு—அது
சக்தி யருட் சித்திரத்தி லாழும். (29)

மதி, சக்தி தனக்கே யுடைமை யாக்கு—அது
சங்கடங்கள் யாவினையு முடைக்கும்—மதி
சக்தி தனக்கே யுடைமை யாக்கு—அங்கு
சத்தியமு நல்லறமுங் கிடைக்கும். (30)

மதி, சக்தி தனக்கே யுடைமை யாக்கு—அது
சாரவருந் தீமைகளை விலக்கும்—மதி
சக்தி தனக்கே யுடைமை யாக்கு—அது
சஞ்சலப் பிசாசுகளைக் கலக்கும். (31)

மதி, சக்தி தனக்கே யுடைமை யாக்கு—அது
சக்தி செய்யும் விந்தைகளைத் தேடும்—மதி
சக்தி தனக்கே யுடைமை யாக்கு—அது
சக்தி யுறை விடங்களை நாடும். (32)

மதி, சக்தி தனக்கே யுடைமை யாக்கு—அது
தர்க்க மெனுங் காட்டிலச்ச நீங்கும்—மதி
சக்தி தனக்கே யுடைமை யாக்கு—அதில்
தள்ளி விடும் பொய்ந்நெறியுந் தீங்கும். (33)

மதி, சக்தி தனக்கே யுடைமை யாக்கு—அதில்
சஞ்சலத்தின் தீயவிருள் விலகும்—மதி
சக்தி தனக்கே யுடைமை யாக்கு—அதில்
சக்தி யொளி நித்தமு நின் றிலகும். (34)

மதி, சக்தி தனக்கே யுடைமை யாக்கு—அதில்
சார்வதில்லை ஐயமெனும் பாம்பு—மதி
சக்தி தனக்கே யுடைமை யாக்கு—அங்கு
தான் முளைக்கு முக்தி விதைக் காம்பு. (35)

மதி, சக்தி தனக்கே யடிமை யாக்கு—அது
தாரணியி லன்பு நிலை நாட்டும்—மதி
சக்தி தனக்கே யடிமை யாக்கு—அது
ஸர்வ சிவ சக்தியினைக் காட்டும். (36)

மதி, சக்தி தனக்கே யடிமை யாக்கு—அது
சக்தி திருவருளினைச் சேர்க்கும்—மதி
சக்தி தனக்கே யடிமை யாக்கு—அது
தாமதப் பொய்த் தீமைகளைப் போக்கும்.

மதி, சக்தி தனக்கே யடிமை யாக்கு—அது
சத்தியத்தின் வெல்கொடியை நாட்டும்—மதி
சக்தி தனக்கே யடிமை யாக்கு—அது
தாக்கவரும் பொய்ப்புலியை யோட்டும். (38)

மதி, சக்தி தனக்கே யடிமை யாக்கு—அது
சத்திய நல்லிரவியைக் காட்டும்—மதி
சக்தி தனக்கே யடிமை யாக்கு—அதில்
சாரவரும் புயல்களை வாட்டும். (39)

மதி, சக்தி தனக்கே யடிமை யாக்கு—அது
சக்தி விரதத்தை யென்றும் பூணும்—மதி
சக்தி விரதத்தை யென்றுங் காத்தால்—சிவ
சக்தி தரு மின்பமு நல் லூணும். (40)

மதி, சக்தி தனக்கே யடிமை யாக்கு—தெளி
தந்தமுதப் பொய்கையென வொளிரும்—மதி
சக்தி தனக்கே யடிமை யாக்கு—அது
சந்ததமு மின்பமுற மிளிரும். (41)

அகம், சக்தி தனக்கே யுடைமை யாக்கு—அது
தன்னை யொரு சக்தியென்று தேரும்—அகம்
சக்தி தனக்கே யுடைமை யாக்கு—அது
தாமதமு மாணவமும் தீரும். (42)

அகம், சக்தி தனக்கே யுடைமை யாக்கு—அது
தன்னையவள் கோயிலென்று காணும்—அகம்
சக்தி தனக்கே யுடைமை யாக்கு—அது
தன்னை யெண்ணித் துன்பமுற நாணும். (43)

அகம், சக்தி தனக்கே யுடைமை யாக்கு—அது
சக்தி யெனும் கடலிலொர் திவலை—அகம்
சக்தி தனக்கே யுடைமை யாக்கு—சிவ
சக்தி யுண்டு நமக்கில்லை கவலை. (44)

அகம், சக்தி தனக்கே யுடைமை யாக்கு—அதில்
சக்தி சிவ நாத நித்த மொலிக்கும்—அகம்
சக்தி தனக்கே யுடைமை யாக்கு—அது
சக்தி திருமேனி யொளி ஜ்வலிக்கும். (45)

சிவ, சக்தி யென்றும் வாழியென்று பாடு—சிவ
சக்தி சக்தி யென்று குதித்தாடு—சிவ
சக்தி யென்றும் வாழி யென்று பாடு—சிவ
சக்தி சக்தி யென்று விளையாடு. (46)

## 56. சக்தி திருப்புகழ்.

1. சக்தி சக்தி சக்தி சக்தீ சக்தீ
சக்தீ யென்றோது
சக்தி சக்தி சக்தீ யென்பார்—சாகா
ரென்றே நின்றோது.

2. சக்தி சக்தி யென்றே வாழ்தல் சால்பா
நம்மைச் சார்ந்திரே
சக்தி சக்தி யென்றீ ராயில்—சாகா
உண்மை சேர்ந்திரே.

3. சக்தி சக்தி என்றால் சக்தி—தானே
சேருங் கண்டீரே
சக்தி சக்தி என்றால் வெற்றி—தானே
நேருங் கண்டீரே.

4. சக்தி சக்தி யென்றே செய்தால்—தானே
செய்கை நேராகும்
சக்தி சக்தி யென்றால் அஃது—தானே
முக்தி வேராகும்.

5. சக்தி சக்தி சக்தீ சக்தீ சக்தீ
யென்றே ஆடோமோ?
சக்தி சக்தி சக்தீ யென்றே—தாளங்
கொட்டிப் பாடோமோ.

6. சக்தி சக்தி யென்றால் துன்பந்—தானே
தீருங் கண்டீரே.
சக்தி சக்தி யென்றா லின்பந்—தானே
சேருங் கண்டீரே.

7. சக்தி சக்தி யென்றால் செல்வம்—தானே
ஊறுங் கண்டீரோ?
சக்தி சக்தி யென்றால் கல்வி—தானே
தேறுங் கண்டீரோ?

8. சக்தி சக்தி சக்தீ சக்தீ சக்தீ
சக்தீ வாழி நீ.
சக்தி சக்தி சக்தீ சக்தீ சக்தீ
சக்தீ வாழி நீ.

9. சக்தி சக்தி வாழீ யென்றால்—சம்பத்
தெல்லா நேராகும்
சக்தி சக்தி யென்றால் சக்தி—தாச
னென்றே பேராகும்.

## 57. மஹாசக்தி பஞ்சகம்.

1. கரணமுந் தனுவு நினக்கெனத் தந்தேன்
காளி நீ காத்தருள் செய்யே
மரணமு மஞ்சேன் நோய்களை யஞ்சேன்
மாரவெம் பேயினை யஞ்சேன்.
இரணமுஞ் சுகமும் பழியுநற் புகழும்
யாவுமோர் பொருளெனக் கொள்ளேன்
சரணமென் றுனது பதமலர் பணிந்தேன்
தாயெனைக் காத்தலுன் கடனே.

2. எண்ணிலாப் பொருளும் எல்லையில் வெளியும்
யாவுமா நின்றனை போற்றி

மண்ணிலார் வந்து வாழ்த்தினுஞ் செறினும்
மயங்கிலேன், மனமென் னும் பெயர்கொள்
கண்ணிலாப் பேயை யெள்ளுவேன், இனியெக்
காலுமே அமைதியி லிருப்பேன்
தண்ணிலா முடியிற் புனைந்து நின் றிலகும்
தாயுனைச் சரண் புகுந் தேனுல்.

3. நீசருக் கினிதாந் தனத்தினு மாதர்
நினைப்பினு நெறியிலா மாக்கள்
மாசுறு பொய்ந்நட் பதனிலும் பன்னாள்
மயங்கினேன் அவையினி மதியேன்
தேசுறு நீல நிறத்தினுள் அறிவாய்ச்
சிந்தையிற் குலவிடு திறத்தாள்
வீசுறுங் காற்றி னெருப்பினில் வெளியில்
விளங்குவாள் தனைச்சரண் புகுந்தேன்.

4. ஐயமுந் திகைப்புந் தொலைந்தன ஆங்கே
அச்சமுந் தொலைந்தது சினமும்
பொய்யுமென் றினைய புன்மைக ளெல்லாம்
போயின வுறுதி நான் கண்டேன்
வையமிங் கனைத்து மாக்கியும் காத்தும்
மாய்த்துமே மகிழ்ந்திடு தாயைத்
துய்யவெண் ணிறத்தாள் தனை க்கரி யவளைத்
துணையெனத் தொடர்ந்தது கொண்டே.

5. தவத்தினை யெளிதாப் புரிந்தனள் யோகத்
தனிநிலை யொளிதெனப் புரிந்தாள்
சிவத்தினை யினிதாப் புரிந்தனள் மூடச்
சித்தமுந் தெளிவுறச் செய்தாள்

யவத்தினை வெறுப்ப அருளினள் நாளும்
பான்மை கொன் றவள்மயம் புரிந்தாள்
அவத்தினைக் களைந்தாள் அறிவென விளைந்தாள்
அநந்தமா வாழ்கவிங் கவளே.

## 58. மஹாசக்தி வாழ்த்து.

1. விண்டுரைக்க அறிய அரியதாய்
விரிந்த வான வெளியென நின்றனை,
அண்ட கோடிகள் வானி லமைத்தனை,
அவற்றி லெண்ணற்ற வேகஞ் சமைத்தனை,
மண்டலத்தை அணுவணு வாக்கினால்
வருவ தெத்தனை யத்தனை யோசனை
கொண்டதூர மவற்றிடை வைத்தனை
கோலமே நினைக் காளியென் றேத்துவேன்.

2. நாடு காக்கு மரசன் றனையந்த
நாட்டு ளோரர சென்றறிவார் எனிற்
பாடு தண்டைக் குழந்தை தனக்கிதம்
பண்ணு மப்ப னிவனென் றறிந்திடும்;
கோடி யண்ட மியக்கி யளிக்கு நின்
கோல மேழை குறித்திட லாகுமோ?
நாடி யிச்சிறு பூமியிற் காணுநின்
நலங்க ளேத்திட நல்லருள் செய்கவே.

3. பரிதி யென்னும் பொருளிடை யேய்ந்தனை,
பரவும் வெய்ய கதிரெனக் காய்ந்தனை,
கரிய மேகத் திரளெனச் செல்லுவை,
காலு மின்னென வந்துயிர் கொல்லுவை,

சொரியு நீரெனப் பல்லுயிர் போற்றுவை,
சூழும் வெள்ள மெனவுயிர் மாற்றுவை,
விரியு நீள் கட லென்ன நிறைந்தனை,
வெல்க காளி யெனதம்மை வெல்கவே.

4. வாயு வாகி வெளியை யளந்தனை,
வாழ்வெதற்கு முயிர்நிலை யாயினை,
தேயு வாகி யொளியருள் செய்குவை,
செத்தவற்றைக் கருப்பொரு ளாக்குவை,
பாயு மாயிரஞ் சத்திகளாகியே
பாரி லுள்ள தொழில்க ளியற்றுவை,
சாயும் பல்லுயிர் கொல்லுவை, நிற்பன
தம்மைக் காத்துச் சுகம்பல நல்குவை.

5. நிலத்தின் கிழ்பல் லுலோகங் களாயினை,
நீரின் கீழெண் ணிலாநிதி வைத்தனை,
தலத்தின் மீது மலையு நதிகளுஞ்
சாருங் காடுஞ் சுனைகளு மாயினை,
குலத்தி லெண்ணற்ற பூண்டு பயிரினம்
கூட்டி வைத்துப் பலநலந் துய்த்தனை,
புலத்தை யிட்டிங் குயிர்கள் செய்தா யன்னே,
போற்றி போற்றி, நினதருள் போற்றியே.

6. சித்த சாகரஞ் செய்தனை, ஆங்கதிற்
செய்த கர்மப் பயனெனப் பல்கினை,
தத்து கின்ற திரையுஞ் சுழிகளும்
தாக்கி யெற்றிடுங் காற்றுமுள்ளோட்டமுஞ்
சுத்த மோனப் பகுதியும் வெண்பனி
சூழ்ந்த பாகமுஞ் சுட்ட வெந் நீருமென்

ஞெருத்த நீர்கடல் போலப் பலவகை
யுள்ள மென்னுங் கடலி லமைத்தனே.

---

## 59. சிவ சக்தி புகழ்.

ராகம்—தன்யாசி. தாளம்—சதுஸ்ர ஏகம்.

1. ஓம், சக்தி சக்தி சக்தியென்று சொல்லு—கெட்ட
சஞ்சலங்கள் யாவினையுங் கொல்லு
சக்தி சக்தி சக்தி யென்று சொல்லி—அவள்
சந்நிதியிலே தொழுது நில்லு.

2. சக்தி மிசை பாடல் பல பாடு—ஓம்
சக்தி சக்தி யென்று தாளம் போடு
சக்தி தருஞ் செய்கை நிலந் தனிலே—சிவ
சக்தி வெறி கொண்டு களித்தாடு.

3. சக்தி தனையே சரணங் கொள்ளு—என்றும்
சாவினுக் கொரச்ச மில்லை தள்ளு
சக்தி புகழா மமுதை யள்ளு—மதி
தன்னிலினிப் பாகுமந்தக் கள்ளு.

4. சக்தி செய்யும் புதுமைகள் பேசு—நல்ல
சக்தி யற்ற பேடிகளை யேசு
சக்தி திருக் கோயிலுள்ள மாக்கி—அவள்
தந்திடு நற் குங்குமத்தைப் பூசு.

5. சக்தியினைச்சேர்ந்ததிந்தச்செய்கை-இதைச்
சார்ந்து நிற்ப தேநமக்கொ ருய்கை
சக்தியெனு மின்பமுள்ள பொய்கை—அதில்
தண்ணமுத மாரிநித்தம் பெய்கை.

6. ஓம், சக்தி சக்தி சக்தி யென்று நாட்டு—சிவ
சக்தி யருள் பூமி தனில் காட்டு
சக்தி பெற்ற நல்லநிலை நிற்பார்—புவிச்
சாதிக ளெல்லா மதனைக் கேட்டு.

7. சக்தி சக்தி சக்தி யென்று முழங்கு—அவள்
தந்திர மெல்லா முலகில் வழங்கு
சக்தி யருள் கூடிவிடு மாயின்—உயிர்
சந்ததமும் வாழுநல்ல கிழங்கு.

8. சக்தி செயுந் தொழில்களை யெண்ணு—சித்தஞ்
சக்தி யுள்ள தொழில் பல பண்ணு
சக்திதனை யேயிழந்து விட்டால்—இங்கு
சாவினையும் நோவினையும் உண்ணு.

9. சக்தியரு ளாலுலகி லேறு—ஒரு
சங்கடம் வந்தா லிரண்டு கூறு
சக்தி சில சோதனைகள் செய்தால்—அவள்
தண்ணரு ளென்றே மனது தேறு.

10. சக்தி துணை யென்று நம்பி வாழ்த்து—சிவ
சக்தி தனையே யகத்தி லாழ்த்து
சக்தி யுஞ் சிறப்புமிகப் பெறுவாய்—சிவ
சக்தியருள் வாழ்கவென்று வாழ்த்து.

## 60. ஊழிக் கூத்து.

1\. வெடிபடுமண்டத்திடிபலதாளம் போட—வெறும்
வெளியி லிரத்தக் களியொடு பூதம்பாடப்—
பாட்டின்
அடிபடுபொருளுன் அடிபடு மொலியிற் கூடக்—
தாடுங்காளீ, சாமுண்டீ; கங்காளீ! [களித்
அன்னை, அன்னை,
ஆடுங் கூத்தை நாடச் செய்தா யென்னை.

2\. ஐந்துறு பூதம் சிந்திப்போ யொன்றாகப்—பின்னர்
அதுவும் சக்திக் கதியில் மூழ்கிப்போக—அங்கே
முந்துறு மொளியிற்சிந்தை நழுவும் வேகத்—தோ
முடியா நடனம் புரிவாய், அடுதீ சொரிவாய், [டே
அன்னை, அன்னை,
ஆடுங் கூத்தை நாடச் செய்தா யென்னை.

3\. பாழாம் வெளியும் பதறிப்போய் மெய்குலையச்—
சலனம்
பயிலும் சக்திக் குலமும் வழிகள் கலைய—அங்கே
ஊழாம் பேய்தான் "ஓஹோ ஹோ" வென்
றலைய,—வெறித்
துறுமித் திரிவாய், செருவெங் கூத்தே புரிவாய்,
அன்னை, அன்னை,
ஆடுங் கூத்தை நாடச் செய்தா யென்னை.

4\. சக்திப் பேய்தான் தலையொடு தலைகள் முட்டிச்—
சட்டச்
சடசட சட்டென் றுடைபடு தாளங்கொட்டி—
அங்கே

எத்திக்கினிலும் நின் விழியனல் போயெட்டித்—
தானே

எரியுங் கோலங் கண்டே சாகும் காலம்
அன்னை, அன்னை,
ஆடுங் கூத்தை நாடச் செய்தா யென்னை.

5. காலத் தொடு நிர்மூலம் படுமூ வுலகும்—அங்கே
கடவுள்மோனத் தொளியே தனியாயிலகும்-சிவன்
கோலங்கண்டுன் கனல்செய் சினமும் விலகும்—
கையைக்

கொஞ்சித் தொடுவாய், ஆனந்தக் கூத்திடுவாய்;
அன்னை, அன்னை,
ஆடுங் கூத்தை நாடச் செய்தா யென்னை.

---

## 61. மஹாசக்தி.

1. சந்திர னொளியி லவளைக் கண்டேன்
சரண மென்று புகுந்து கொண்டேன்
இந்திரி யங்களை வென்று விட்டேன்
எனதெ னாசையைக் கொன்று விட்டேன்.

2. பயனென் றுமல் உழைக்கச் சொன்னாள்
பக்தி செய்து பிழைக்கச் சொன்னாள்
துயரி லாதெனைச் செய்து விட்டாள்
துன்ப மென்பதைக் கொய்து விட்டாள்.

3. மீன்கள் செய்யும் ஒளியைச் செய்தாள்
வீசி நிற்கும் வளியைச் செய்தாள்
வான்க ணுள்ள வெளியைச் செய்தாள்
வாழி நெஞ்சிற் களியைச் செய்தாள்.

---

போலிச் சுவடியை யெல்லாம்—இன்று
பொசுக்கிவிட்டாலெவர்க்கும்நன்மையுண்டென்பான்(8)

வயது முதிர்ந்து விடினும்—எந்தை
வாலிபக் களையென்று மாறுவதில்லை ;
துயரில்லை, மூப்புமில்லை,—என்றும்
சோர்வில்லை, நோயொன்று தொடுவதில்லை ;
பயமில்லை, பரிவொன்றில்லை,—எவர்
பக்கமுநின் றெதிர்ப்பக்கம் வாட்டுவதில்லை ;
நயமிகத் தெரிந்தவன் காண் ;—தனி
நடுநின்று விதிச்செயல் கண்டு மகிழ்வான். (9)

துன்பத்தில் நொந்து வருவோர்—தன்னைத்
தூவென் றிகழ்ந்து சொல்லி வன்பு கனிவான் ;
அன்பினைக் கைக்கொளென்பான் ;—துன்பம்
அத்தனையு மப்பொழுது தீர்ந்திடு மென்பான் ;
என்புடை பட்டபொழுதும்—நெஞ்சில்
ஏக்கமுறப் பொறுப்பவர் தம்மை யுகப்பான் ;
இன்பத்தை எண்ணுபவர்க்கே—என்றும்
இன்பமிகத் தருவதி லின்ப முடையான். (10)

---

## கண்ணன் - என் சேவகன்

கூலி மிகக் கேட்பார் கொடுத்ததெலாந் தாமறப்பார் ;
வேலை மிக வைத்திருந்தால் வீட்டிலே தங்கிடுவார் ;
'ஏனடா, நீ நேற்றைக் கிங்குவர வில்லை' யென்றால்
பானையிலே தேளிருந்து பல்லாற் கடித்த தென்பார் ;
வீட்டிலே பெண்டாட்டி மேற்பூதம் வந்ததென்பார் ;

பாட்டியார் செத்துவிட்ட பன்னிரண்டாநாளென்பார்;
ஓயாமற் பொய்யுரைப்பார் ; ஒன்றுரைக்க வேறு செய்
தாயாதியோடு தனி யிடத்தே பேசிடுவார் ; [வார் ;
உள் வீட்டுச் செய்தியெலாம் ஊரம் பலத்துரைப்பார் ;
எள் வீட்டி லில்லை யென்றால் எங்கு முரசறைவார்.
சேவகராற் பட்ட சிரம மிக வுண்டு, கண்டீர் ;
சேவகரில் லாவிடிலோ, செய்கை நடக்கவில்லை.
இங்கிதனால் யானும் இடர் மிகுந்து வாடுகையில்,
எங்கிருந்தோ வந்தான், 'இடைச்சாதி நான்' என்றான்;
" மாடு கன்று மேய்த்திடுவேன், மக்களைநான் காத்திடு
வீடு பெருக்கி விளக்கேற்றி வைத்திடுவேன்; [வேன்;
சொன்னபடிகேட்பேன்;துணிமணிகள் காத்திடுவேன்;
சின்னக் குழந்தைக்குச் சிங்காரப் பாட்டிசைத்தே
ஆட்டங்கள் காட்டி அழாதபடி பார்த்திடுவேன் ;
காட்டுவழி யானாலும், கள்ளர்பய மானாலும்,
இரவிற் பகலிலே யெந்நேர மானாலும்,
சிரமத்தைப் பார்ப்பதில்லை, தேவரீர் தம்முடனே
சுற்றுவேன், தங்களுக்கோர் துன்பமுறாமற் காப்பேன்;
கற்ற வித்தை யேதுமில்லை ; காட்டு மனிதன், ஐயே !
ஆன பொழுதுங் கோலடி குத்துப்போர் மற்போர்
நானறிவேன் ; சற்றும் நயவஞ்சனை புரியேன் "
என்று பலசொல்லி நின்றான். "ஏது பெயர் ?
சொல்" என்றேன்.

" ஒன்றுமில்லை ; கண்ணனென்பார் ஊரிலுள்ளோர்
என்னை " என்றான்.

கட்டுறுதியுள்ள வுடல், கண்ணிலே நல்ல குணம்,

ஒட்டுறவே நன்று வுரைத்திடுஞ்சொல்—ஈங்கிவற்றால்,
தக்கவனென் றுள்ளத்தே சார்ந்த மகிழ்ச்சியுடன்,
"மிக்கவுரை பல சொல்லி விருது பல சாற்றுகிறாய்;
கூலியென்ன கேட்கின்றாய்? கூறு" கென்றேன். "ஐய
தாலிகட்டும் பெண்டாட்டி சந்ததிக ளேதுமில்லை;[னே!
நானோர் தனியாள்; நரை திரைதோன் றாவிடினும்
ஆன வயதிற் களவில்லை; தேவரீர்
ஆதரித்தாற் போதும் அடியேனை; நெஞ்சிலுள்ள
காதல் பெரிதெனக்குக் காசு பெரிதில்லை" யென்றான்.
பண்டைக் காலத்துப் பயித்தியத்தி லொன்றெனவே
கண்டு, மிகவும் களிப்புடனே நானவனை
ஆளாகக் கொண்டு விட்டேன். அன்று முதற்கொண்டு,
நாளாக நாளாக, நம்மிடத்தே கண்ணனுக்குப்
பற்று மிகுந்து வரல் பார்க்கின்றேன்; கண்ணனால்
பெற்றுவரு நன்மையெலாம் பேசிமுடியாது.
கண்ணை யிமையிரண்டுங் காப்பதுபோல், என்குடும்பம்
வண்ணமுறக் காக்கின்றான். வாய்முணுத்தல் கண்டறி
வீதி பெருக்குகிறான்; வீடுசுத்த மாக்குகிறான்.[யேன்.
தாதியர் செய் குற்றமெலாந் தட்டி யடக்குகிறான்;
மக்களுக்கு வாத்தி, வளர்ப்புத்தாய், வைத்தியனாய்,
ஒக்க நயங் காட்டுகிறான்; ஒன்றுங் குறைவின்றிப்
பண்டமெலாஞ் சேர்த்துவைத்துப் பால் வாங்கி மோர்
பெண்டுகளைத் தாய்போற் பிரியமுற ஆதரித்து[வாங்கிப்
நண்பனாய், மந்திரியாய், நல்லா சிரியனுமாய்,
பண்பிலே தெய்வமாய்ப் பார்வையிலே சேவகனாய்,
எங்கிருந்தோ வந்தான், இடைச்சாதி யென்று
சொன்னான்.

இங்கிவனை யான்பெறவே என்ன தவஞ் செய்து
விட்டேன்!
கண்ணன் எனதகத்தே கால்வைத்த நாள்முதலாய்
எண்ணம் விசாரம் எதுவு மவன் பொறுப்பாய்ச்
செல்வம், இளமாண்பு, சீர், சிறப்பு, நற்கீர்த்தி,
கல்வி, அறிவு, கவிதை, சிவயோகம்,
தெளிவே வடிவாஞ் சிவஞானம், என்றும்
ஒளிசேர் நலமனைத்தும் ஓங்கி வருகின்றனகாண்!
கண்ணனைநான் ஆட்கொண்டேன்! கண்கொண்டேன்
கண்கொண்டேன்!
கண்ணனெனை யாட்கொள்ளக் காரணமு முள்ளனவே!

## கண்ணன் – என் அரசன்

பகைமை முற்றி முதிர்ந்திடு மட்டிலும்
பார்த்திருப்ப தல்லா லொன்றுஞ் செய்திடான்
நகைபுரிந்து பொறுத்துப் பொறுத்தையோ
நாட்கள் மாதங்க ளாண்டுகள் போக்குவான். (1)
கண்ணன் வென்று பகைமை யழிந்து நாம்
கண்ணிற் காண்ப தரிதெனத் தோன்றுமே;
எண்ணமிட் டெண்ணமிட்டுச் சலித்து நாம்
இழந்த நாட்கள் யுகமெனப் போகுமே. (2)
படைகள் சேர்த்தல் பரிசனம் சேர்த்திடல்
பணமுண் டாக்க லெதுவும் புரிந்திடான்;
'இடையன், வீரமிலாதவன், அஞ்சினோன்'
என்றவர் சொலும் ஏச்சிற்கு நாணிலான்; (3)

கொல்லப் பூத மனுப்பிடு மாமனே
கோனு யர்த்துல காண்டு களித்திட,
முல்லை மென்னகை மாதர்க்கும் பாட்டிற்கும்
மோக முற்றுப் பொழுதுகள் போக்குவான் ; (4)
வான நீர்க்கு வருந்தும் பயிரென
மாந்தர் மற்றிவண் போர்க்குத் தவிக்கவும்,
தானங் கீர்த்தனை தாளங்கள் கூத்துக்கள்
தனிமை வேய்ங்குழ லென்றிவை போற்றுவான்; (5)
காலினைக் கையினுற்பற்றிக் கொண்டு நாம்
கதி யெமக் கொன்று காட்டுவை யென்றிட்டால்,
நாலி லொன்று பலித்திடுங் காணென் பான் ;
நாமச் சொல்லின் பொருளெங் குணர்வதே? (6)
நாமவன் வலி நம்பி யிருக்கவும்,
நாண மின்றிப் பதுங்கி வளருவான் ;
தீமைதன்னை விலக்கவுஞ் செய்குவான் ;
சிறுமை கொண் டொளித்தோடவுஞ் செய்குவான்; (7)
தந்திரங்கள் பயிலவுஞ் செய்குவான் ;
சவுரியங்கள் பழகவுஞ் செய்குவான் ;
மந்திரத் திற னும்பல காட்டுவான் ;
வலிமை யின்றிச் சிறுமையில் வாழ்குவான் ; (8)
காலம் வந்துகை கூடுமப் போதிலோர்
கணத்தி லேபுதி தாக விளங்குவான் ;
ஆலகால விடத் தினைப்போலவே,
அகில முற்று மசைந்திடச் சீறுவான்; (9)
வேரும் வேரடி மண்ணு மிலாமலே
வெந்து போகப் பகைமை பொசுக்குவான் ;

பாரும் வானமு மாயிர மாண்டுகள்
பட்டதுன்பங் கணத்திடை மாற்று வான் ; (10)

சக்கரத்தை யெடுப்ப தொரு கணம் ;
தருமம் பாரில் தழைத்தல் மறுகணம் ;
இக்கணத்தி லிடைக்கண மொன்றுண்டோ ?
இதனுள்ளே பகை மாய்த்திட வல்லன் காண் ! (11)

கண்ண னெங்க ளரசன் புகழினைக்
கவிதை கொண்டெந்தக் காலமும் போற்றுவேன் ;
திண்ணை வாயில் பெருக்கவந் தேனெனைத்
தேசம் போற்றத் தன் மந்திரி யாக்கினான். (12)

நித்தச் சோறினுக் கேவல் செய வந்தேன் ;
நிகரிலாப் பெருஞ் செல்வ முதவினான்.
வித்தை நன்கு கல் லாதவன் என்னுளே
வேத நுட்பம் விளங்கிடச் செய்திட்டான். (13)

கண்ண னெம் பெரு மானருள் வாழ்கவே !
கலி யழிந்து புவித்தவம் வாழ்கவே !
அண்ண லின்னருள் நாடிய நாடுதான்
அவல நீங்கிப் புகழி லுயர்கவே ! (14)

---

## கண்ணன் - என் சீடன்

ஆசிரியப்பா

யானே யாகி என்னலாற் பிறவாய்
யானும் அவையுமாய் இரண்டினும் வேறாய்
யாதோ பொருளாம் மாயக் கண்ணன்,
என்னினு மறிவினிற் குறைந்தவன் போலவும்,
என்னைத் துணைக்கொண் டென்னுடை முயற்சியால்

என்னடை பழகலால் என் மொழி கேட்டலால்
மேம்பா டெய்த வேண்டினேன் போலவும்,
யான் சொலுங் கவிதை என்மதி யளவை
இவற்றினைப் பெருமை யிலங்கின வென்று
கருதுவான் போலவும், கண்ணக் கள்வன்
சீடனு வந்தென்னைச் சேர்ந்தனன், தெய்வமே!
பேதையேன் அவ்வலைப் பின்னலில் வீழ்ந்து
பட்டன தொல்லை பல பெரும் பாரதம்;
உளத்தினை வென்றிடேன்; உலகினை வெல்லவும்
தானகஞ் சுடாதேன் பிறர் தமைத் தானெனும்
சிறுமையி னகற்றிச் சிவத்திலே நிறுத்தவும்
தன்னுளே தெளிவும் சலிப்பிலா மகிழ்ச்சியும்
உற்றிடேன் இந்தச் சகத்திலே யுள்ள
மாந்தர்க் குற்ற துயரெலா மாற்றி
இன்பத் திருத்தவும் எண்ணிய பிழைக்கெனைத்
தண்டனை புரிந்திடத் தானுளங் கொண்டு,
மாயக் கண்ணன் வலிந்தெனைச் சார்ந்து,
புகழ்ச்சிகள் கூறியும், புலமையை வியந்தும்,
பலவகை யால் அகப் பற்றுறச் செய்தான்;
வெறும் வாய் மெல்லுங் கிழவிக் கிஃதோர்
அவலாய் மூண்டது; யானுமங் கவனை
உயர் நிலைப் படுத்தலில் ஊக்க மிக் கவனாய்,
" இன்னது செய்திடேல், இவரொடு பழகேல்,
இவ்வகை மொழிந்திடேல், இனையன விரும்பேல்,
இன்னது கற்றிடேல், இன்ன நூல் கற்பாய்,
இன்னவ ருறவு கொள், இன்னவை விரும்புவாய் "

எனப்பல தருமம் எடுத்தெடுத் தோதி,
ஓய்விலா தவனோ டுயிர் விட லானேன்.
கதையிலே கணவன் சொல்லினுக் கெல்லாம்
எதிர் செயும் மனைவி போல், இவனு நான் காட்டு
நெறியினுக் கெல்லாம் நேரெதிர் நெறியே
நடப்பா னாயினன். நானிலத் தவர்தம்
மதிப்பையும் புகழுறு வாழ்வையும் புகழையும்
தெய்வமாக் கொண்ட சிறு மதி யுடையேன்,
கண்ணனுஞ் சீடன் யான் காட்டிய வழியெலாம்
விலகியே நடக்கும் விநோதமிங் கன்றியும்,
உலகினர் வெறுப்புறும் ஒழுக்கமத் தனையும்
தலையாக்கொண்டு சார்பெலாம் பழிச்சொலும்
இகழுமிக் கவனாய், என் மனம் வருந்த
நடந்திடல் கண்டேன்; நாட்பட நாட்படக்
கண்ண னுந் தனது கழிபடு நடையில்
மிஞ்சுவா னாகி, வீதியிற் பெரியோர்
கிழவிய ரெல்லாங் கிறுக்க னென் றிவனை
இகழ்ச்சியோ டிரக்கமுற் றேளனம் புரியும்
நிலையும் வந்திட்டான். நெஞ்சிலே யெனக்குத்
தோன்றிய வருத்தஞ் சொல்லிடப் படாது.
முத்தனாக் கிடநான் முயன்றதோ ரிளைஞன்
பித்தனென் றுலகினர் பேசிய பேச்சென்
நெஞ்சினை யறுத்தது; நீதிகள் பலவும்
தந்திரம் பலவும் சாத்திரம் பலவும்
சொல்லி நான் கண்ணனைத் தொளைத்திடலாயினேன்.
தேவ நிலையிலே சேர்த்திடா விடினும்,

மானுடந் தவறி மடிவுறு வண்ணம்,
கண்ணனை நானுங் காத்திட விரும்பித்
தீயெனக் கொதித்துச் சின மொழி யுரைத்தும்,
சிரித்துரை கூறியும், செள்ளென விழுந்தும்,
கேலிகள் பேசிக் கிளறியும், இன்னும்
எத்தனை வகையிலோ என் வழிக் கவனைக்
கொணர்ந்திட முயன்றேன்; கொள்பய னொன்றில்லை:
கண்ணன் பித்தனாய்க் காட்டா ளாகி,
எவ்வகைத் தொழிலிலும் எண்ணமற் றவனாய்,
எவ்வகைப் பயனிலுங் கருத்திழந் தவனாய்,
குரங்காய்க் கரடியாய்க் கொம்புடைப் பிசாசாய்
யாதோ பொருளாய், எங்ஙனோ நின்றான்.
இதனால்,
அகந்தையு மமதையும் ஆயிரம் புண்ணுற,
யான் கடுஞ் சினமுற்று 'எவ்வகை யானும்
கண்ணனை நேருறக் கண்டே தீர்ப்பேன்'
எனப் பெருந்தாப மெய்தினே னாகி,
'எவ்வா றேனும் இவனை யோர் தொழிலில்
ஓரிடந் தன்னில் ஒருவழி வலிய
நிறுத்துவோ மாயின் நேருற் றிடுவான்'
என்றுளத் தெண்ணி, இசைந்திடுஞ் சமயங்
காத்திருந் திட்டேன், ஒரு நாட் கண்ணனைத்
தனியே எனது வீட்டினிற் கொண்டு,
"மகனே, என்பால் வரம்பிலா நேசமும்
அன்பு நீ யுடையை; அதனை யான் நம்பி,
நின்னிட மொன்று கேட்பேன்; நீ யது

செய்திடல் வேண்டும்; சேர்க்கையின் படியே
மாந்தர் தஞ் செயலெலாம் வகுப்புறல் கண்டாய்.
சாத்திர நாட்டமும், தருக்கமும், கவிதையில்
மெய்ப்பொரு ளாய்வதில் மிஞ்சிய விழைவும்
கொண்டோர் தமையே அருகினிற் கொண்டு,
பொருளினுக் கலையு நேரம் போக
மிஞ்சிய பொழுதெலாம் அவருடன் மேவி
இருந்திட லாகுமேல், எனக்குநன் றுண்டாம்;
பொழுதெலாம் என்னுடன் போக்கிட விரும்பும்
அறிவுடை மகனிங் குனையலால் அறிந்திடேன்.
ஆதலால்,
என்பயன் கருதி, எனக்கொரு துணையாய்
என்னுடன் சிலநாள் இருந்திட நின்னை
வேண்டி நிற்கின்றேன், வேண்டுதல் மறுத்தே
என்னை நீ துன்ப மெய்துவித் திடாமே,
இவ்வுரைக் கிணங்குவாய்" என்றேன். கண்ணனும்,
"அங்ஙனே புரிவேன். ஆயினின் னிடத்தே
தொழிலிலா தியாங்ஙனஞ் சோம்பரி லிருப்பது?
காரிய மொன்று காட்டுவை யாயின்,
இருப்பேன்" என்றான். இவனுடை இயல்பையும்
திறனையுங் கருதி, "என் செய்யுளை யெல்லாம்
நல்லதோர் பிரதியில் நாடொறும் எழுதிக்
கொடுத்திடுந் தொழிலினைக் கொள்ளுதி" என்றேன்.
நன்றெனக் கூறியோர் நாழிகை யிருந்தான்;
"செல்வேன்" என்றான்; சினத்தொடு நானும்
பழங்கதை யெழுதிய பகுதி யொன் றினையவன்

கையினிற் கொடுத்துக் "கவினுற இதனை
எழுதுக" என்றேன்; இணங்குவான் போன்றதைக்
கையிலே கொண்டு கணப் பொழு திருந்தான் ;
"செல்வேன்" என்றான். சினந்தீ யாகிநான்,
"ஏதடா, சொன்ன சொல் அழித்துரைக் கின்றாய் ?
பித்தனென் றுன்னை உலகினர் சொல்வது
பிழையிலை போலும்" என்றேன். அதற்கு
"நாளைவந் திவ்வினை நடத்துவேன்" என்றான்.
"இத்தொழி லிங்கே இப்பொழு தெடுத்துச்
செய்கின் றனையா ? செய்குவ தில்லையா ?
ஓருரை சொல்" என் றுறுமினேன். கண்ணனும்
"இல்லை" யென் றொரு சொல் இமைக்குமுன் கூறினன்.
வெடுக்கெனச் சினத்தீ வெள்ளமாப் பாய்ந்திடக்
கண் சிவந் திதழ்கள் துடித்திடக் கனன்று நான்
"சீச்சீ, பேயே, சிறிது போழ் தேனும்
இனியென் முகத்தி னெதிர் நின் றிடாதே.
என்று மிவ்வுலகில் என்னிடத் தினி நீ
போந்திடல் வேண்டா, போ, போ, போ" என்
றிடியுறச் சொன்னேன் ; கண்ணனும் எழுந்து
செல்குவ னாயினன். விழிநீர் சோர்ந்திட
"மகனே, போகுதி, வாழ்கநீ, நின்னைத்
தேவர் காத்திடுக ! நின்றனைச் செம்மை
செய்திடக் கருதி ஏதேதோ செய்தேன்.
தோற்று விட் டேனடா ! சூழ்ச்சிக ளழிந்தேன்.
மறித்தினி வாராய், செல்லுதி, வாழி நீ !"
எனத் துயர் நீங்கி, அமைதியோ டிசைத்தேன் ;

சென்றனன் கண்ணன். திரும்பியோர் கணத்தே
எங்கிருந் தோநல் லெழுது கோல் கொணர்ந்தான் ;
காட்டிய பகுதியைக் கவினுற வரைந்தான்.
"ஐயனே, நின் வழி யனைத்தையுங் கொள்ளுவேன்.
தொழில் பல புரிவேன். துன்பமிங் கென்றும்,
இனி நினக் கென்னால் எய்திடா" தெனப்பல
நல்ல சொல் லுரைத்து நகைத்தனன் மறைந்தான்.
மறைந்ததோர் கண்ணன் மறு கணத் தென்றன்
நெஞ்சிலே தோன்றி நிகழ்த்துவா னயினன் :
"மகனே, ஒன்றை யாக்குதல் மாற்றுதல்
அழித்திட லெல்லாம் நின் செய லன்று காண்;
தோற்றே னென நீ உரைத்திடும் பொழுதிலே
வென்றாய் ; உலகினில் வேண்டிய தொழிலெலாம்
ஆசையுந் தாபமும் அகற்றியே புரிந்து
வாழ்க நீ" என்றான். வாழ்க மற்றவனே !

## கண்ணன் - எனது சற்குரு

(புன்னாகவராளி - திஸ்ரஜாதி - ஏகதாளம்.
ரஸங்கள் : அத்புதம், பக்தி.)

சாத்திரங்கள் பல தேடினேன்—அங்கு
சங்கையில் லாதன சங்கையாம்—பழங்
கோத்திரங்கள் சொல்லுமூடர்தம்—பொய்மைக்
கூடையி லுண்மை கிடைக்குமோ ?—நெஞ்சில்
மாத்திர மெந்த வகையிலும்—சக
மாய முணர்ந்திடல் வேண்டுமே—என்னும்

ஆத்திர நின்ற திதனிடை—நித்தம்
ஆயிரந் தொல்லைகள் சூழ்ந்தன. (1)

நாடு முழுதிலுஞ் சுற்றி நான்—பல
நாட்க ளலைந்திடும் போதினில்,—நிறைந்
தோடும் யமுனைக் கரையிலே—தடி
யூன்றிச் சென் றோரோர் கிழவனார்;—ஒளி
கூடு முகமுந் தெளிவு தான்—குடி
கொண்ட விழியுஞ் சடைகளும்—வெள்ளைத்
தாடியுங் கண்டு வணங்கியே—பல
சங்கதி பேசி வருகையில், (2)

என்னுளத் தாசை யறிந்தவர்—மிக
இன்புற் றுரைத்திட லாயினர்—" தம்பி,
நின்னுளத் திற்குத் தகுந்தவன்,—சுடர்
நித்திய மோனத் திருப்பவன்,—உயர்
மன்னர் குலத்திற் பிறந்தவன்,—வட
மாமது ரைப்பதி யாள்கின்றான்;—கண்ணன்
தன்னைச் சரணென்று போவையேல்,—அவன்
சத்தியங் கூறுவன்" என்றனர். (3)

மாமது ரைப்பதி சென்று நான்—அங்கு
வாழ்கின்ற கண்ணனைப் போற்றியே;—என்றன்
நாமமு மூருங் கருத்துமே—சொல்லி
நன்மை தருகென வேண்டினன்;—அவன்
காமனைப் போன்ற வடிவமும்—இளங்
காளையர் நட்பும் பழக்கமும்—கெட்ட
பூமியைக் காக்குந் தொழிலிலே—எந்தப்
போதுஞ் செலுத்திடுஞ் சிந்தையும், (4

ஆடலும் பாடலும் கண்டு நான்—'முன்னர்
ஆற்றங் கரையினிற் கண்டதோர்—முனி
வேடந் தரித்த கிழவரைக்—கொல்ல
வேண்டு' மென் றுள்ளத்தி லெண்ணினேன்—'சிறு
நாடு புரந்திடு மன்னவன்—கண்ணான்
நாளுங் கவலையில் மூழ்கினோன்;—தவப்
பாடுபட் டோர்க்கும் விளங்கிடா—உண்மை
பார்த்திவ னெங்ஙனங் கூறுவான்?' (5)

என்று கருதி யிருந்திட்டேன்;—பின்னர்
என்னைத் தனியிடங் கொண்டுபோய்,—"நினை
நன்று மருவுக! மைந்தனே!—பர
ஞான முரைத்திடக் கேட்பை நீ;—நெஞ்சில்
ஒன்றுங் கவலையில் லாமலே—சிந்தை
ஊன்ற நிறுத்திக் களிப்புற்றே—தன்னை
வென்று மறந்திடும் போழ்தினில்—அங்கு
விண்ணை யளக்கு மறிவு தான்! (6)

சந்திரன் சோதி யுடையதாம்;—அது
சத்திய நித்திய வஸ்துவாம்;—அதைச்
சிந்திக்கும் போதினில் வந்துதான்—நினைச்
சேர்ந்து தழுவி யருள் செயும்;—அதன்
மந்திரத் தாலிவ் வுலகெலாம்—வந்த
மாயக் களிப் பெருங்கூத்துக்காண்;—'இதைச்
சந்ததம் பொய் யென் றுரைத்திடும்—மடச்
சாத்திரம் பொய்' யென்று தள்ளடா. (7)

"ஆதித் தனிப்பொரு ளாகுமோர்—கடல்
ஆருங் குமிழி உயிர்களாம்;—அந்தச்

சோதி யறி வென்னு ஞாயிறு—தன்னைச்
சூழ்ந்த கதிர்க ளுயிர்களாம்;—இங்கு
மீதிப் பொருள்க ளெவையுமே—அதன்
மேனியில் தோன்றிடும் வண்ணங்கள்;—வண்ண
நீதி யறிந்தின்ப மெய்தியே—ஒரு
நேர்மைத் தொழிலி லியங்குவார், (8)

“சித்தத்திலே சிவ நாடுவார்,—இங்கு
சேர்ந்து களித்துல காளுவார்,—நல்ல
மத்த மதவெங் களிறு போல்—நடை
வாய்ந்திறு மாந்து திரிகுவார்;—‘இங்கு
நித்த நிகழ்வ தனைத்துமே—எந்தை
நீண்ட திருவருளால் வரும்—இன்பம்
சுத்த சுகந்தனி யானந்தம்’—எனச்
சூழ்ந்து கவலைகள் தள்ளியே (9)

“சோதி யறிவில் விளங்கவும்—உயர்
சூழ்ச்சி மதியில் விளங்கவும்—அற
நீதி முறைவழு வாமலே—எந்த
நேரமும் பூமித் தொழில் செய்து—கலை
ஓதிப் பொருளியல் கண்டு தாம்—பிறர்
உற்றிடுந் தொல்லைகள் மாற்றியே—இன்ப
மோதி விழிக்கும் விழியினர்—பெண்மை
மோகத்தில், செல்வத்தில், கீர்த்தியில், (10)

“ஆடுதல், பாடுதல், சித்திரம்—கவி
யாதி யினைய கலைகளில்—உள்ளம்
ஈடுபட் டென்று நடப்பவர்—பிறர்

ஈன நிலைகண்டு துள்ளுவார்—அவர்
நாடும் பொருள்க ளனைத்தையும்—சில
நாளினி லெய்தப் பெறுகுவார்—அவர்
காடு புதரில் வளரினும்—தெய்வக்
காவன மென்றதைப் போற்றலாம். (11)

"ஞானியர் தம்மியல் கூறினேன்—அந்த
ஞானம் விரைவினி லெய்துவாய்"—எனத்
தேனி னினிய குரலிலே—கண்ணன்
செப்பவு முண்மை நிலைகண்டேன்—பண்டை
ஈன மனிதக் கனவெலாம்—எங்ஙன்
ஏகி மறைந்தது கண்டிலேன்;—அறி
வான தனிச்சுடர் நான் கண்டேன்!—அதன்
ஆட லுலகென நான் கண்டேன்! (12)

---

## கண்ணம்மா—என் குழந்தை

(பரா சக்தியைக் குழந்தையாகக் கண்டு சொல்லிய பாட்டு.)

ராகம்—பைரவி. தாளம்—ரூபகம்

ஸ ஸ ஸ — ஸா ஸா — பபப
தநீத — பதப — பா
பபப — பதப — பமா — கரிஸா
ரிகம — ரிகரி — ஸா

என்ற ஸ்வர வரிசைகளை மாதிரியாக வைத்துக் கொண்டு மனோபாவப் படி மாற்றிப் பாடுக.

1. சின்னஞ் சிறு கிளியே,—கண்ணம்மா!
செல்வக் களஞ்சியமே!
என்னைக் கலிதீர்த்தே—உலகில்
ஏற்றம் புரிய வந்தாய்!

2. பிள்ளைக் கனியமுதே,—கண்ணம்மா!
பேசும் பொற் சித்திரமே!
அள்ளி யணைத்திடவே—என் முன்னே
ஆடி வருந் தேனே!

3. ஓடி வருகையிலே,—கண்ணம்மா!
உள்ளங் குளிருதடீ;
ஆடித்திரிதல் கண்டால்—உன்னைப்போய்
ஆவி தழுவுதடீ.

4. உச்சி தனை முகர்ந்தால்—கருவம்
ஓங்கி வளருதடீ;
மெச்சி யுனை யூரார்—புகழ்ந்தால்
மேனி சிலிர்க்குதடீ.

5. கன்னத்தில் முத்தமிட்டால்—உள்ளந்தான்
கள் வெறி கொள்ளுதடீ;
உன்னைத் தழுவிடிலோ,—கண்ணம்மா!
உன்மத்த மாகுதடீ.

6. சற்றுன் முகஞ் சிவந்தால்—மனது
சஞ்சல மாகுதடீ;
நெற்றி சுருங்கக் கண்டால்—எனக்கு
நெஞ்சம் பதைக்குதடீ.

7. உன் கண்ணில் நீர் வழிந்தால்—என்னெஞ்சில்
உதிரங் கொட்டுதடீ;

என் கண்ணிற் பாவையன்றோ ?—கண்ணம்மா !
என்னுயிர் நின்ன தன்றோ ?

8. சொல்லு மழலையிலே,—கண்ணம்மா !
துன்பங்கள் தீர்த்திடுவாய் ;
முல்லைச் சிரிப்பாலே—எனது
மூர்க்கந் தவிர்த்திடுவாய்.

9. இன்பக் கதைக ளெல்லாம்—உன்னைப்போல்
ஏடுகள் சொல்வ துண்டோ ?
அன்பு தருவதிலே—உனை நேர்
ஆகுமோர் தெய்வ முண்டோ ?

10. மார்பி லணிவதற்கே—உன்னைப்போல்
வைர மணிக ளுண்டோ ?
சீர் பெற்று வாழ்வதற்கே—உன்னைப்போல்
செல்வம் பிறிது முண்டோ ?

---

## கண்ணன்—என் விளையாட்டுப் பிள்ளை

(கேதாரம் - கண்டஜாதி - ஏகதாளம்.
ரஸங்கள் : அற்புதம், சிருங்காரம்.)

தீராத விளையாட்டுப் பிள்ளை—கண்ணன்
தெருவிலே பெண்களுக் கோயாத தொல்லை. (தீராத)

1. தின்னப் பழங்கொண்டு தருவான் ;—பாதி
தின்கின்ற போதிலே தட்டிப் பறிப்பான் ;
என்னப்பன் என்னையன் என்றால்—அதனை
எச்சிற் படுத்திக் கடித்துக் கொடுப்பான். (தீ)

2. தேனொத்த பண்டங்கள் கொண்டு—என்ன
செய்தாலும் எட்டாத உயரத்தில் வைப்பான் ;

மாஞெத்த பெண்ணடி யென்பான்—சற்று
மனமகிழு நேரத்திலே கிள்ளி விடுவான். (தீ)

3. அழகுள்ள மலர் கொண்டு வந்தே—என்னை
அழ அழச் செய்து பின், "கண்ணை மூடிக்கொள்;
குழலிலே சூட்டுவேன்" என்பான்—என்னைக்
குருடாக்கி மலரினைத் தோழிக்கு வைப்பான். (தீ)

4. பின்னலைப் பின்னின் றிழுப்பான்;—தலை
பின்னே திரும்புமுன் னேசென்று மறைவான்;
வன்னப் புதுச்சேலை தனிலே—புழுதி
வாரிச் சொரிந்தே வருத்திக் குலைப்பான். (தீ)

5. புள்ளாங் குழல் கொண்டு வருவான்;—அமுது
பொங்கித் ததும்புநற் கீதம் படிப்பான்;
கள்ளால் மயங்குவது போலே—அதைக்
கண்மூடி வாய்திறந் தேகேட் டிருப்போம். (தீ)

6. அங்காந் திருக்கும்வாய் தனிலே—கண்ணன்
ஆறேழு கட்டெறும் பைப்போட்டு விடுவான்;
எங்காகிலும் பார்த்த துண்டோ?—கண்ணன்
எங்களைச் செய்கின்ற வேடிக்கை யொன்றோ? (தீ)

7. விளையாட வாவென் றழைப்பான்;—வீட்டில்
வேலையென் றாலதைக் கேளா திழுப்பான்;
இளையாரொ டாடிக் குதிப்பான்;—எம்மை
இடையிற் பிரிந்து போய் வீட்டிலே சொல்வான்.

8. அம்மைக்கு நல்லவன், கண்டீர்!—மூளி
அத்தைக்கு நல்லவன், தந்தைக்கு மஃதே;
எம்மைத் துயர்செய்யும் பெரியோர்—வீட்டில்
யாவர்க்கு நல்லவன் போலே நடப்பான். (தீ)

9. கோளுக்கு மிகவுஞ் சமர்த்தன் ;—பொய்மை
குத்திரம் பழி சொலக் கூசாச் சழக்கன் ;
ஆளுக் கிசைந்தபடி பேசி—தெருவில்
அத்தனை பெண்களையு மாகா தடிப்பான். (தீ)

## கண்ணன் - என் காதலன்

(செஞ்சுருட்டி - திஸ்ர ஏக தாளம். சிருங்கார ரஸம்.)

1. தூண்டிற் புழுவினைப்போல்—வெளியே
சுடர் விளக்கினைப் போல்,
நீண்ட பொழுதாக—எனது
நெஞ்சந் துடித்த தடீ.
கூண்டுக் கிளியினைப் போல்—தனிமை
கொண்டு மிகவு நொந்தேன் ;
வேண்டும் பொருளை யெல்லாம்—மனது
வெறுத்து விட்ட தடீ.

2. பாயின் மிசை நானும்—தனியே
படுத் திருக்கையிலே,
தாயினைக் கண்டாலும்,—ஸகியே,
சலிப்பு வந்ததடி.
வாயினில் வந்த தெல்லாம்,—ஸகியே,
வளர்த்துப் பேசிடுவீர் ;
நோயினைப் போலஞ்சி னேன்,—ஸகியே
நுங்க ளுறவை யெல்லாம்.

3. உணவு செல்லவில்லை ;—ஸகியே,
உறக்கங் கொள்ளவில்லை.

மணம் விரும்பவில்லை ;—ஸகியே,
மலர் பிடிக்கவில்லை ;
குண முறுதி யில்லை ;—எதிலும்
குழப்பம் வந்ததடீ ;
கணமு முள்ளத்திலே—சுகமே
காணக் கிடைத்ததில்லை.

4. பாலுங் கசந்ததடீ ;—ஸகியே,
படுக்கை நொந்த தடீ ;
கோலக் கிளி மொழியும்—செவியில்
குத்த லெடுத்ததடீ.
நாலு வயித்தியரும்—இனிமேல்
நம்புதற் கில்லை யென்றார் ;
பாலத்துச் சோசியனும்—கிரகம்
படுத்து மென்று விட்டான்.

5. கனவு கண்டதிலே—ஒரு நாள்
கண்ணுக்குத் தோன்றாமல்,
இனம் விளங்க வில்லை,—எவனோ
என்னகந் தொட்டு விட்டான்.
வினவக் கண் விழித்தேன் ;—ஸகியே,
மேனி மறைந்து விட்டான் ;
மனதில் மட்டிலுமே—புதிதோர்
மகிழ்ச்சி கண்டதடீ.

6. உச்சி குளிர்ந்ததடீ ;—ஸகியே,
உடம்பு நேராச்சு.
மச்சிலும் வீடுமெல்லாம்—முன்னைப்போல்
மனத்துக் கொத்ததடீ.

இச்சை பிறந்ததடீ—எதிலும்
இன்பம் விளைந்ததடீ.
அச்ச மொழிந்த தடீ;—சகியே,
அழகு வந்ததடீ.

7. எண்ணும் பொழுதி லெல்லாம்,—அவன்கை
இட்ட விடத்தினிலே
தண்ணென் றிருந்ததடீ;—புதிதோர்
சாந்தி பிறந்ததடீ;
எண்ணி யெண்ணிப் பார்த்தேன்;—அவன்தான்
யாரெனச் சிந்தை செய்தேன்;
கண்ணன் திருவுருவம்—அங்ஙனே
கண்ணின் முன் னின்றதடீ.

## கண்ணன் - என் காதலன்

### உறக்கமும் விழிப்பும்

(நாதநாமக்கிரியை - ஆதிதாளம்.
ரஸங்கள்: பீபத்ஸம், சிருங்காரம்.)

நேர மிருந்ததின்னும் நித்திரையின்றி,—உங்கள்
நினைப்புத் தெரியவில்லை, கூத்தடிக்கிறீர்;
சோர னுறங்கி விழு நள்ளிரவிலே—என்ன
தூளி படுகுதடி, இவ்விடத்திலே.
ஊரை யெழுப்பிவிட நிச்சயங் கொண்டீர்,—அன்னை
ஒருத்தி யுண் டென்பதையு மறந்து விட்டீர்;
சார மிருந்த தென்று வார்த்தை சொல்கிறீர்,—மிகச்
சலிப்புந் தருகுதடி சகிப் பெண்களே. (1)

நானும் பலதினங்கள் பொறுத்திருந்தேன்;—இது
நாளுக்கு நாளதிக மாகி விட்டதே;
கூன னொருவன் வந்திந் நாணி பின்னலைக்
கொண்டை மலர் சிதற நின்றிழுத்ததும்,
ஆனைமதம் பிடித்திவ்—வஞ்சியம்மை யின்
அருகினி லோட இவள் மூர்ச்சை யுற்றதும்,
பானையில் வெண்ணெய் முற்றும் தின்று விட்டதால்
பாங்கி யுரோகிணிக்கு நோவு கண்டதும், (2)
பத்தினியாளை யொரு பண்ணை வெளியில்
பக்துச் சிறுவர் வந்து முத்தமிட்டதும்,
நத்தி மகளினுக் கோர் சோதிடன் வந்து
நாற்ப தரசர் தம்மை வாக்களித்ததும்,
கொத்துக் கனல் விழியக் கோவினிப் பெண்ணைக்
கோங்கத்து மூளி கண்டு கொக்கரித்ததும்,
வித்தைப் பெயருடைய வீணியவளும்
மேற்குத்திசை மொழிகள் கற்று வந்ததும், (3)
எத்தனை பொய்களடி, என்ன கதைகள்!
என்னையுறக்க மின்றி இன்னல் செய்கிறீர்;
சத்தமிடுங் குழல்கள் வீணைக ளெல்லாம்
தாளங்க ளோடு கட்டி மூடிவைத்தங்கே,
மெத்த வெளிச்சமின்றி யொற்றை விளக்கை
மேற்குச் சுவரருகில் வைத்ததன் பின்னர்,
நித்திரை கொள்ள எனைத் தனியில் விட்டே
நீங்களெல் லோரு முங்கள் வீடு செல்லுவீர். (4)

பாங்கியர் போன பின்பு தனியிருந்து சொல்லுதல்

கண்க ளுறங்க வொரு காரணமுண்டோ,
கண்ணனை இன்றிரவு காண்பதன் முன்னே?

பெண்களெல்லோரு மவர் வீடு சென்றிட்டார்;
பிரிய மிருந்த கண்ணன் காத்திருக்கின்றான்;
வெண்கல வாணிகரின் வீதி முனையில்
வேலிப் புறத்தி லெனைக் காணடி யென்றான்;
கண்க ளுறங்க லெனுங் காரிய முண்டோ,
கண்ணனைக் கையிரண்டுங் கட்ட லின்றியே?

---

## கண்ணன் - என் காதலன்

### (காட்டிலே தேடுதல்.)

(ஹிந்துஸ்தானி தோடி - ஆதி தாளம்.
ரஸங்கள் : பயாநகம், அற்புதம்.)

திக்குத் தெரியாத காட்டில்—உனைத்
தேடித் தேடி இளைத்தேனே.

1. மிக்க நலமுடைய மரங்கள்,—பல
விந்தைச் சுவையுடைய கனிகள்,—எந்தப்
பக்கத்தையு மறைக்கும் வரைகள்,—அங்கு
பாடி நகர்ந்து வரு நதிகள்,—ஒரு (திக்)

2. நெஞ்சிற் கனல் மணக்கும் பூக்கள்,—எங்கும்
நீளக் கிடைக்கு மிலைக் கடல்கள்,—மதி
வஞ்சித் திடுமகழிச் சுனைகள்,—முட்கள்
மண்டித் துயர் கொடுக்கும் புதர்கள்,—ஒரு (திக்)

3. ஆசை பெற விழிக்கும் மான்கள்,—உள்ளம்
அஞ்சக் குரல் பழகும் புலிகள்,—நல்ல
நேசக் கவிதை சொல்லும் பறவை,—அங்கு
நீண்டே படுத்திருக்கும் பாம்பு,—ஒரு (திக்குத்)

4. தன்னிச்சை கொண்டலையும் சிங்கம்—அதன்
சத்தத்தினிற் கலங்கும் யானை—அதன்
முன்னின்றோடு மிள மான்கள்—இவை
முட்டா தயல் பதுங்குந் தவளை—ஒரு (திக்குத்)

5. கால்கை சோர்ந்து விழலானேன்—இரு
கண்ணுந் துயில்படர லானேன்—ஒரு
வேல்கைக் கொண்டு கொலை வேடன்—உள்ளம்
வெட்கங் கொண்டொழிய விழித்தான்—ஒரு(திக்)

6. "பெண்ணே, உனதழகைக் கண்டு—மனம்
பித்தங் கொள்ளு" தென்று நகைத்தான்—"அடி
கண்ணே, எனதிருகண் மணியே—உனைக்
கட்டித் தழுவ மனங் கொண்டேன்.

7. சோர்ந்தே படுத்திருக்க லாமோ?—நல்ல
துண்டக் கறி சமைத்துத் தின்போம்—சுவை
தேர்ந்தே கனிகள் கொண்டு தருவேன்—நல்ல
தேங்கள் ளுண்டினிது களிப் போம்."

8. என்றே கொடிய விழி வேடன்—உயிர்
இற்றுப் போகவிழித் துரைத்தான்—தனி
நின்றே இரு கரமுங் குவித்து—அந்த
நீசன் முன்ன ரிவை சொல்வேன் :—

9. "அண்ணா, உனதடியில் வீழ்வேன்—எனை
அஞ்சக் கொடுமை சொல்ல வேண்டா—பிறன்
கண்ணாலஞ் செய்துவிட்ட பெண்ணை—உன்றன்
கண்ணாற் பார்த்திடவுந் தகுமோ?"

10. "ஏடீ, சாத்திரங்கள் வேண்டேன்—நின
தின்பம் வேண்டுமடி, கனியே !—நின்றன்
மோடி கிறுக்குதடி தலையை,—நல்ல
மொந்தைப் பழைய கள்ளைப் போலே."

11. காதா லிந்த வுரை கேட்டேன்—'அட
கண்ணா !' வென்றலறி வீழ்ந்தேன்—மிகப்
போதாக வில்லை யிதற்குள்ளே—என்றன்
போதந் தெளிய நினைக் கண்டேன்.

12. கண்ணா, வேடனெங்கு போனான் ?—உனைக்
கண்டே யலறி விழுந்தானோ ?—மணி
வண்ணா ! என தபயக் குரலில்—எனை
வாழ்விக்க வந்த அருள் வாழி !

## கண்ணன் - என் காதலன்

### பாங்கியைத் தூது விடுத்தல்

(தங்கப்பாட்டு மெட்டு. ரஸங்கள் : சிருங்காரம், ரௌத்ரம்.)

கண்ணன் மனநிலையைத் தங்கமே தங்கம் [அடி தங்கமே
கண்டுவர வேணுமடி தங்கமே தங்கம் ; [தங்கம்
எண்ண முரைத்துவிடில் தங்கமே தங்கம்—பின்னர்
ஏதெனிலுஞ் செய்வமடி தங்கமே தங்கம். (1)

கன்னிகை யாயிருந்து தங்கமே தங்கம்—நாங்கள்
காலங் கழிப்பமடி தங்கமே நங்கம் ;
அன்னிய மன்னர் மக்கள் பூமியிலுண்டாம்—என்னும்
அதனையுஞ் சொல்லிடடி தங்கமே தங்கம். (2)

சொன்ன மொழி தவறு மன்னவனுக்கே—எங்கும்
தோழமை யில்லையடி தங்கமே தங்கம் ;
என்ன பிழைக ளிங்கு கண்டிருக்கின்றான் ?—அவை
யாவுந் தெளிவு பெறக் கேட்டு விடடீ. (3)

மையல் கொடுத்து விட்டுத் தங்கமே தங்கம்—தலை
மறைந்து திரிபவர்க்கு மானமு முண்டோ ?
பொய்யை யுருவமெனக் கொண்டவ னென்றே—கிழப்
பொன்னி யுரைத்ததுண்டு தங்கமே தங்கம். (4)

ஆற்றங் கரையதனில் முன்னமொரு நாள்—எனை
அழைத்துத் தனியிடத்திற் பேசிய தெல்லாம்
தூற்றி நகர் முரசு சாற்றுவ னென்றே
சொல்லி வருவையடி தங்கமே தங்கம். (5)

சோர மிழைத்திடையர் பெண்களுடனே—அவன்
சூழ்ச்சித் திறமை பல காட்டுவ தெல்லாம்
வீர மறக் குலத்து மாதரி டத்தே
வேண்டிய தில்லை யென்று சொல்லி விடடீ. (6)

பெண் ணென்று பூமிதனிற் பிறந்து விட்டால்—மிகப்
பீழை யிருக்குதடி தங்கமே தங்கம் ; [அதைப்
பண்ணென்று வேய்ங்குழலில் ஊதி வந்திட்டான்—
பற்றி மறக்குதில்லை பஞ்சை யுள்ளமே. (7)

நேர முழுதிலுமப் பாவிதன்னையே—உள்ளம்
நினைத்து மறுகுதடி தங்கமே தங்கம்.
தீர ஒரு சொலின்று கேட்டு வந்திட்டால்—பின்பு
தெய்வ மிருக்குதடி தங்கமே தங்கம். (8)

## கண்ணன் - என் காதலன் (2)

(ராகம் - பிலஹரி)

1. ஆசை முக மறந்து போச்சே—இதை
ஆரிடம் சொல்வேனடி தோழி?
நேச மறக்கவில்லை நெஞ்சம்—எனில்
நினைவு முகமறக்க லாமோ?

2. கண்ணில் தெரியு தொரு தோற்றம்—அதில்
கண்ண னழகு முழுதில்லை;
நண்ணு முக வடிவு காணில்—அந்த
நல்ல மலர்ச் சிரிப்பைக் காணோம்.

3. ஓய்வு மொழிதலு மில் லாமல்—அவன்
உறவை நினைத்திருக்கு முள்ளம்;
வாயு முரைப்பதுண்டு கண்டாய்—அந்த
மாயன் புகழினை யெப் போதும்.

4. கண்கள் புரிந்து விட்ட பாவம்—உயிர்க்
கண்ண னுரு மறக்க லாச்சு;
பெண்க ளினத்தி லிது போலே—ஒரு
பேதையை முன்பு கண்ட துண்டோ?

5. தேனை மறந்திருக்கும் வண்டும்—ஒளிச்
சிறப்பை மறந்துவிட்ட பூவும்
வானை மறந்திருக்கும் பயிரும்—இந்த
வைய முழுதுமில்லை தோழி.

6. கண்ணன் முக மறந்து போனால்—இந்தக்
கண்க ளிருந்து பயனுண்டோ?
வண்ணப் படமுமில்லை கண்டாய்—இனி
வாழும் வழி யென்னடி தோழி?

## கண்ணன் — என் காந்தன்

(வராளி. திஸ்ர ஏகதாளம். சிருங்கார ரஸம்.)

1. கனிகள் கொண்டு தரும்—கண்ணன்
கற்கண்டு போலினிதாய் ;
பனிசெய் சந்தனமும்—பின்னும்
பல் வகை யத்தர்களும்,
குனியும் வாள் முகத்தான்—கண்ணன்
குலவி நெற்றியிலே
இனிய பொட்டிடவே—வண்ண
மியன்ற சவ்வாதும்,

2. கொண்டை முடிப்பதற்கே—மணங்
கூடு தயிலங்களும்,
வண்டு விழியினுக்கே—கண்ணன்
மையுங் கொண்டு தரும் ;
தண்டைப் பதங்களுக்கே—செம்மை
சார்த்து செம் பஞ்சு தரும் ;
பெண்டிர் தமக் கெல்லாம்—கண்ணன்
பேசருந் தெய்வ மடீ !

3. குங்குமங் கொண்டு வரும்—கண்ணன்
குழைத்து மார் பெழுத ;
சங்கையிலாத பணம்—தந்தே
தழுவி மையல் செய்யும் ;
பங்கமொன் றில்லாமல்—முகம்
பார்த்திருந் தாற் போதும் ;
மங்கள மாகுமடீ—பின்னோர்
வருத்த மில்லை யடீ !

## கண்ணம்மா - என் காதலி

### காட்சி வியப்பு

(செஞ்சுருட்டி-ஏகதாளம். ரஸங்கள்: சிருங்காரம்; அற்புதம்.)

1. சுட்டும் விழிச்சுடர் தான்,—கண்ணம்மா!
சூரிய சந்திரரோ?
வட்டக் கரிய விழி,—கண்ணம்மா!
வானக் கருமை கொல்லோ?
பட்டுக் கருநீலப்—புடவை
பதித்த நல் வயிரம்
நட்ட நடு நிசியில்—தெரியும்
நக்ஷத் திரங்க ளடீ!

2. சோலை மல ரொளியோ—உனது
சுந்தரப் புன்னகை தான்?
நீலக் கட லலையே—உனது
நெஞ்சி லலைக ளடீ!
கோலக் குயி லோசை—உனது
குரலி னிமை யடீ!
வாலைக் குமரியடீ,—கண்ணம்மா!
மருவக் காதல் கொண்டேன்.

3. சாத்திரம் பேசுகிறாய்,—கண்ணம்மா!
சாத்திர மேதுக் கடீ!
ஆத்திரங் கொண்டவர்க்கே,—கண்ணம்மா!
சாத்திர முண் டோடீ?
மூத்தவர் சம்மதியில்—வதுவை
முறைகள் பின்பு செய்வோம்;
காத்திருப் பேனோடீ?—இது பார்,
கன்னத்து முத்த மொன்று!

## கண்ணம்மா - என் காதலி

### பின்னே வந்து நின்று கண் மறைத்தல்

(நாதநாமக்கிரியை - ஆதிதாளம். சிருங்கார ரஸம்.)

1. மாலைப் பொழுதி லொரு மேடைமிசையே
வானையுங் கடலையு நோக்கி யிருந்தேன்;
மூலைக் கடலினை யவ் வான வளையம்
முத்த மிட் டேதழுவி முகிழ்த்தல் கண்டேன்;
நீல நெருக்கிடையில் நெஞ்சு செலுத்தி,
நேரங் கழிவதிலு நினைப் பின்றியே
சாலப் பலபல நற் பகற் கனவில்
தன்னை மறந்த லயந் தன்னி லிருந்தேன்.

2. ஆங்கப் பொழுதிலென் பின்புறத்திலே,
ஆள்வந்து நின்றெனது கண் மறைக்கவே,
பாங்கினிற் கை யிரண்டுந் தீண்டியறிந்தேன்,
பட்டுடை வீசுகமழ் தன்னி லறிந்தேன்,
ஓங்கி வருமுவகை யூற்றி லறிந்தேன்;
ஒட்டு மிரண்டுளத்தின் தட்டி லறிந்தேன்;
'வாங்கி விடடி கையை யேடி கண்ணம்மா,
மாய மெவரிடத்தில்?'' என்று மொழிந்தேன்.

3. சிரித்த ஒலியி லவள் கை விலக்கியே, [றேன்;
திருமித் தழுவி, "என்ன செய்தி சொல்'' லென்
"நெரித்த திரைக்கடலில் என்ன கண்டிட்டாய்?
நீல விசும்பினிடை என்ன கண்டிட்டாய்?
திரித்த நுரையினிடை என்ன கண்டிட்டாய்?
சின்னக் குமிழிகளில் என்ன கண்டிட்டாய்?

பிரித்துப் பிரித்து நிதமேக மளந்தே,
பெற்ற நலங்க ளென்ன? பேசுதி" என்றாள்.

4. "நெரித்த திரைக்கடலில் நின்முகங் கண்டேன்;
நீல விசும்பினிடை நின்முகங் கண்டேன்;
திரித்த நுரையினிடை நின்முகங் கண்டேன்;
சின்னக் குமிழிகளில் நின்முகங் கண்டேன்;
பிரித்துப் பிரித்துநித மேக மளந்தே,
பெற்றதுன் முகமன்றிப் பிறிதொன்றில்லை;
சிரித்த ஒலியினிலுன் கை விலக்கியே,
திருமித் தழுவியதில் நின்முகங் கண்டேன்."

---

## கண்ணம்மா - என் காதலி

### முகத்திரை களைதல்

(நாதநாமக்கிரியை - ஆதி தாளம். சிருங்கார ரஸம்.)

தில்லித் துருக்கர் செய்த வழக்கமடி—பெண்கள்
திரையிட்டு முகமலர் மறைத்து வைத்தல்;
வல்லி யிடை யினையும் ஓங்கி முன்னிற்கும்—இந்த
மார்பையு மூடுவது சாத்திரங் கண்டாய்;
வல்லி யிடை யினையும் மார்பி ரண்டையும்—துணி
மறைத்ததனா லழகு மறைந்த தில்லை;
சொல்லித் தெரிவதில்லை, மன்மதக்கலை—முகச்
சோதி மறைத்துமொரு காதலிங்குண்டோ? (1)
ஆரியர் முன்னெறிகள் மேன்மை யென்கிறாய்?—பண்
ஆரியப் பெண்களுக்குத் திரைக ளுண்டோ? [டை
ஓரிரு முறைகண்டு பழகியபின்—வெறும்
ஒப்புக்குக் காட்டுவதிந் நாண மென்னடி?

யாரிருந் தென்னை யிங்கு தடுத்திடுவார்—வலு
வாக முகத்திரையை யகற்றி விட்டால்?
காரிய மில்லையடி வீண் பசப்பிலே—கனி
கண்டவன் தோலுரிக்கக் காத்திருப்பனோ? (2)

## கண்ணம்மா - என் காதலி

### நாணிக் கண் புதைத்தல்

(நாதநாமக்கிரியை-ஆதிதாளம். சிருங்கார ரஸம்.)

மன்னர் குலத்தினிடைப் பிறந்தவளை—இவன்
மருவ நிகழ்ந்ததென்று நாண முற்றதோ?
சின்னஞ் சிறுகுழந்தை யென்ற கருத்தோ—இங்கு
செய்யத் தகாத செய்கை செய்த வருண்டோ?
வன்ன முகத்திரையைக் களைந்திடென்றேன்—நின்றன்
மதங்கண்டு துகிலினை வலிதுரிந்தேன்.
என்ன கருத்திலடி கண் புதைக்கிறாய்?—எனக்
கெண்ணப் படுவதில்லை யேடி கண்ணம்மா! (1)

கன்னி வயதிலுனைக் கண்டதில்லையோ?—கன்னங்
கன்றிச் சிவக்க முத்த மிட்டதில்லையோ?
அன்னியமாக நம்முள் எண்ணுவதில்லை,—இரண்
டாவியுமொன் றாகுமெனக் கொண்டதில்லையோ?
பன்னிப் பலவுரைகள் சொல்லுவதென்னே?—துகில்
பறித்தவன் கைபறிக்கப் பயங்கொள்வதோ?
என்னைப் புறமெனவுங் கருதுவதோ? கண்கள் -
இரண்டினி லொன்றை யொன்று கண்டு வெள்குமோ?

நாட்டினிற் பெண்களுக்கு நாயகர் சொல்லும்—சுவை
நைந்த பழங்கதைகள் நானுரைப்பதோ?
பாட்டுஞ் சுதியு மொன்று கலந்திடுங்கால்—தம்முட்
பன்னி யுபசரணை பேசுவதுண்டோ?
நீட்டுங் கதிர்களொடு நிலவு வந்தே—விண்ணை
நின்று புகழ்ந்து விட்டுப் பின் மருவுமோ?
மூட்டும் விறகினை யச் சோதி கவ்வுங்கால்—அவை
முன்னுப சார வகை மொழிந்திடுமோ? (3)

சாத்திரக் காரரிடம் கேட்டு வந்திட்டேன்;—அவர்
சாத்திரஞ் சொல்லியதை நினக்குரைப்பேன்;
நேற்று முன்னாளில் வந்த உறவன்றடீ;—மிக
நெடும்பண்டைக் கால முதல் சேர்ந்து வந்ததாம்.
போற்றுமி ராமனென முன்புதித்தனை;—அங்கு
பொன் மிதிலைக் கரசன் பூமடந்தை நான்;
ஊற்றமுதென்ன வொரு வேய்ங்குழல் கொண்டோன்-
[கண்ணன்
உருவ நினக்கமையப் பார்த்தனங்கு நான்; (4

முன்னை மிகப்பழமை யிரணியனும்—எந்தை
மூர்க்கந் தவிர்க்க வந்த நரசிங்கன், [ஒளிப்
பின்னையொர் புத்தனென நான் வளர்த்திட்டேன்—
பெண்மை அசோதரையென் றுன்னை யெய்தினேன்.
சொன்னவர் சாத்திரத்தில் மிக வல்லர்காண்;—அவர்
சொல்லிற் பழுதிருக்கக் காரண மில்லை;
இன்னுங் கடைசி வரை ஒட்டிருக்குமாம்;—இதில்
ஏதுக்கு நாண முற்றுக் கண் புதைப்பதே? (5)

## கண்ணம்மா—என் காதலி

### குறிப்பிடம் தவறியது

(செஞ்சுருட்டி - ஆதிதாளம். சிருங்கார ரஸம்.)

1. தீர்த்தக் கரையினிலே—தெற்கு மூலையில்
செண்பகத் தோட்டத்திலே,
பார்த்திருந்தால் வருவேன்—வெண்ணிலாவிலே
பாங்கியோ டென்று சொன்னாய்.
வார்த்தை தவறிவிட்டாய்—அடி கண்ணம்மா!
மார்பு துடிக்குதடீ!
பார்த்த விடத்திலெல்லாம்—உன்னைப்போலவே
பாவை தெரியுதடீ!

2. மேனி கொதிக்குதடீ—தலை சுற்றியே
வேதனை செய்குதடீ!
வானி லிடத்தை யெல்லாம்—இந்த வெண்ணிலா
வந்து தழுவுது பார்.
மோனத் திருக்குதடீ—இந்த வையகம்
மூழ்கித் துயிலினிலே
நானொருவன் மட்டிலும்—பிரி வென்பதோர்
நரகத் துழலுவதோ?

3. கடுமை யுடையதடீ—எந்த நேரமும்
காவலுன் மாளிகையில்;
அடிமை புகுந்த பின்னும்—எண்ணும்போதுநான்
அங்கு வருவதற் கில்லை;
கொடுமை பொறுக்க வில்லை—கட்டுங் காவலும்
கூடிக் கிடக்குதங்கே;
நடுமை யரசி யவள்—எதற் காகவோ
நாணிக் குலைந்திடுவாள்.

4. கூடிப் பிரியாமலே—ஓரி ராவெலாம்
கொஞ்சிக் குலவி யங்கே
ஆடி விளை யாடியே,—உன்றன் மேனியை
ஆயிரங் கோடி முறை

நாடித் தழுவி மனக்—குறை தீர்ந்து நான்
நல்ல களி யெய்தியே
பாடிப் பரவசமாய்—நிற்கவே தவம்
பண்ணிய தில்லை யடி!

---

## கண்ணம்மா - என் காதலி

### யோகம்

பாயு மொளி நீ யெனக்கு, பார்க்கும் விழி நானுனக்கு;
தோயு மது நீ யெனக்கு, தும்பியடி நானுனக்கு;
வாயுரைக்க வருகுதில்லை, வாழி நின்றன் மேன்மை
தூய சுடர் வானொளியே! சூறையமுதே! [யெல்லாம்;
கண்ணம்மா! (1)

வீணையடி நீ யெனக்கு, மேவும் விரல் நானுனக்கு;
பூணும் வட நீ யெனக்கு, புது வயிர நானுனக்கு;
காணுமிடந் தோறு நின்றன் கண்ணி னொளி வீசுதடீ!
மாணுடைய பேரரசே! வாழ்வு நிலையே!
கண்ணம்மா! (2)

வான மழை நீ யெனக்கு, வண்ண மயில் நானுனக்கு;
பான மடி நீ யெனக்கு, பாண்டமடி நானுனக்கு;
ஞான வொளி வீசுதடி, நங்கை நின்றன் சோதிமுகம்;
ஊனமறு நல்லழகே! ஊறு சுவையே!
கண்ணம்மா! (3)

வெண்ணிலவு நீ யெனக்கு, மேவு கடல் நானுனக்கு;
பண்ணு சுதி நீ யெனக்கு, பாட்டினிமை நானுனக்கு;
எண்ணி யெண்ணிப் பார்த்திடிலோர் எண்ணமிலை
[நின்சுவைக்கே;
கண்ணின் மணி போன்றவளே! கட்டியமுதே!
கண்ணம்மா! (4)

வீசு கமழ் நீ யெனக்கு, விரியு மலர் நானுனக்கு;
பேசுபொருள் நீ யெனக்கு, பேணுமொழி நானுனக்கு;

நேசமுள்ள வான்சுடரே! நின்னழகை யேதுரைப்பேன்?
ஆசை மதுவே, கனியே, அள்ளுசுவையே!
கண்ணம்மா! (5)

காதலடி நீ யெனக்கு, காந்தமடி நானுனக்கு
வேதமடி நீ யெனக்கு, வித்தையடி நானுனக்கு;
போதமுற்ற போதினிலே பொங்கிவருந் தீஞ்சுவையே!
நாதவடி வானவளே! நல்லவுயிரே கண்ணம்மா! (6)

நல்லவுயிர் நீ யெனக்கு, நாடியடி நானுனக்கு;
செல்வமடி நீ யெனக்கு, சேம நிதி நானுனக்கு;
எல்லையற்ற பேரழகே! எங்கு நிறை பொற்சுடரே!
முல்லை நிகர் புன்னகையாய்! மோதுமின்பமே!
கண்ணம்மா! (7)

தாரையடி நீ யெனக்கு, தண்மதிய நானுனக்கு;
வீரமடி நீ யெனக்கு, வெற்றியடி நானுனக்கு;
தாரணியில் வானுலகில் சார்ந்திருக்கு மின்பமெல்லாம்
ஓருருவமாய்ச் சமைந்தாய்! உள்ளமுதமே!
கண்ணம்மா! (8)

---

## கண்ணன் - என் ஆண்டான்

புன்னாகவராளி-மிஸ்ர ஏகதாளம். ரஸங்கள்: அத்புதம், கருணை

1. தஞ்ச முலகினில் எங்கணு மின்றித்
தவித்துத் தடுமாறி
பஞ்சைப் பறைய னடிமை புகுந்தேன்,
பார முனக் காண்டே;
ஆண்டே—பாரமுனக் காண்டே.

2. துன்ப நோயு மிடிமையுந் தீர்த்துச்
சுகமரு ளல் வேண்டும்;
அன்புட னின்புகழ் பாடிக்குதித்து நின்
ஆணை வழி நடப்பேன்.
ஆண்டே—ஆணைவழி நடப்பேன்.

3. சேரி முழுதும் பறையடித்தே யருட்
சீர்த்திகள் பாடிடுவேன் ;
பேரிகை கொட்டித் திசைகளதிரநின்
பெயர் முழக்கிடுவேன்
ஆண்டே—பெயர் முழக்கிடுவேன்.

4. பண்ணைப் பறையர் தங் கூட்டத்திலே யிவன்
பாக்கிய நோக்கி விட்டான்
கண்ணை னடிமை யிவனெனுங் கீர்த்தியில்
காதலுற் றிங்கு வந்தேன் ;
ஆண்டே—காதலுற் றிங்கு வந்தேன்.

5. காடு கழனிகள் காத்திடுவேன், நின்றன்
காலிகள் மேய்த்திடுவேன் ;
பாடுபடச் சொல்லிப் பார்த்ததன் பின்னரென்
பக்குவஞ் சொல்லாண்டே !
ஆண்டே—பக்குவஞ் சொல்லாண்டே.

6. தோட்டங்கள் கொத்திச் செடி வளர்க்கச்
சோதனை போடாண்டே ; [சொல்லிச்
காட்டு மழைக்குறி தப்பிச்சொன்னு லெனைக்
கட்டியடி யாண்டே ;
ஆண்டே—கட்டியடி யாண்டே.

7. பெண்டு குழந்தைகள் கஞ்சி குடிந்துய்ப்
பிழைத்திட வேண்டுமையே !
அண்டை யயலுக்கென் னுலுப காரங்கள்
ஆகிட வேண்டுமையே !
உபகாரங்கள்—ஆகிட வேண்டுமையே !

8. மானத்தைக் காக்கவோர் நாலு முழத்துணி
வாங்கித் தரவேணும் ;
தானத்துக்குச் சில வேட்டிகள் வாங்கித்
தரவும் கடனுண்டே,
சில வேட்டி—தரவுங் கடனுண்டே.

9. ஒன்பது வாயிற் குடிலினைச் சுற்றி
   யொரு சில பேய்கள் வந்தே
துன்பப் படுத்துது மந்திரஞ் செய்து
   தொலைத்திட வேண்டுமையே!
   பகையாவுந்—தொலைத்திட வேண்டுமையே!
10. பேயும் பிசாசுந் திருடரு மென்றன்
   பெயரினைக் கேட்டளவில்,
வாயுங் கையுங்கட்டி அஞ்சி நடக்க
   வழிசெய்ய வேண்டுமையே!
   தொல்லைதீரும்-வழிசெய்ய வேண்டுமையே!

---

## கண்ணம்மா—எனது குலதெய்வம்

(ராகம்—புன்னாக வராளி.)

பல்லவி.

நின்னைச் சரணடைந்தேன்—கண்ணம்மா!
நின்னைச் சரணடைந்தேன்!

சரணங்கள்.

1. பொன்னை உயர்வைப் புகழை விரும்பிடும்
என்னைக் கவலைகள் தின்னத் தகாதென்று (நின்னை)
2. மிடிமையு மச்சமு மேவியென் னெஞ்சிற்
குடிமை புகுந்தன, கொன்றவை போக்கென்று (நின்)
3. தன் செய லெண்ணித் தவிப்பது தீர்ந்திங்கு
நின் செயல் செய்து நிறைவுபெறும் வணம் (நின்)
4. துன்ப மினியில்லை, சோர்வில்லை, தோற்பில்லை,
அன்பு நெறியில் அறங்கள் வளர்த்திட (நின்)
5. நல்லது தீயது நாமறியோமன்னை!
நல்லது நாட்டுக! தீமையை யோட்டுக! (நின்)

# புதிய ஆத்திசூடி



## காப்பு

### பரம்பொருள் வாழ்த்து

ஆத்திசூடி யிளம்பிறை யணிந்து
மோனத்திருக்கு முழுவெண் மேனியான்
கருநிறங்கொண்டு பாற்கடல்மிசைக்கிடப்போன்
மகமது நபிக்கு மறையருள் புரிந்தோன்
ஏசுவின் தந்தை யெனப்பல மதத்தினர்
உருவகத் தாலே உணர்ந்துண ராது
பலவகை யாகப் பரவிடும் பரம்பொருள்
ஒன்றே ; அதனியல் ஒளியுறு மறிவாம் ;
அதனிலை கண்டார் அல்லலை அகற்றினார் ;
அதனருள் வாழ்த்தி அமரவாழ் வெய்துவோம்.

## நூல்

1. அச்சந் தவிர்.
2. ஆண்மை தவறேல்.
3. இளைத்தல் இகழ்ச்சி.
4. ஈகை திறன்.
5. உடலினை உறுதிசெய்.

6. ஊண்மிக விரும்பு.
7. எண்ணுவ துயர்வு.
8. ஏறுபோல் நட.
9. ஐம்பொறி ஆட்சிகொள்.
10. ஒற்றுமை வலிமையாம்.
11. ஓய்த லொழி.
12. ஔடதங் குறை.
13. கற்ற தொழுகு.
14. கால மழியேல்.
15. கிளைபல தாங்கேல்.
16. கீழோர்க் கஞ்சேல்.
17. குன்றென நிமிர்ந்துநில்.
18. கூடித் தொழில்செய்.
19. கெடுப்பது சோர்வு.
20. கேட்டிலுந் துணிந்துநில்.
21. கைத்தொழில் போற்று.
22. கொடுமையை யெதிர்த்துநில்.
23. கோல்கைக் கொண்டுவாழ்.
24. கவ்வியதை விடேல்.
25. சரித்திரத் தேர்ச்சிகொள்.
26. சாவதற் கஞ்சேல்.
27. சிதையா நெஞ்சுகொள்.
28. சீறுவோர்ச் சீறு.
29. சுமையினுக் கிளைத்திடேல்.
30. சூரரைப் போற்று.
31. செய்வது துணிந்து செய்.

32. சேர்க்கை அழியேல்.
33. சைகையிற் பொருளுணர்.
34. சொல்வது தெளிந்துசொல்.
35. சோதிடந் தனையிகழ்.
36. சௌரியந் தவறேல்.
37. ஞமலிபோல் வாழேல்.
38. ஞாயிறு போற்று.
39. ஞிமிறென இன்புறு.
40. ஞெகிழ்வ தருளின்.
41. ஞேயங் காத்தல்செய்.
42. தன்மை யிழவேல்.
43. தாழ்ந்து நடவேல்.
44. திருவினை வென்றுவாழ்.
45. தீயோர்க் கஞ்சேல்.
46. துன்ப மறந்திடு.
47. தூற்றுத லொழி.
48. தெய்வம் நீ யென்றுணர்.
49. தேசத்தைக் காத்தல் செய்
50. தையலை உயர்வு செய்.
51. தொன்மைக் கஞ்சேல்.
52. தோல்வியிற் கலங்கேல்.
53. தவத்தினை நிதம் புரி.
54. நன்று கருது.
55. நாளெல்லாம் வினைசெய்.
56. நினைப்பது முடியும்.
57. நீதிநூல் பயில்.

58. நுனியளவு செல்.
59. நூலினைப் பகுத்துணர்.
60. நெற்றி சுருக்கிடேல்.
61. நேர்படப் பேசு.
62. நையப் புடை.
63. நொந்தது சாகும்.
64. நோற்பது கைவிடேல்.
65. பணத்தினைப் பெருக்கு.
66. பாட்டினில் அன்புசெய்.
67. பிணத்தினைப் போற்றேல்.
68. பீழைக் கிடங்கொடேல்.
69. புதியன விரும்பு.
70. பூமி யிழந்திடேல்.
71. பெரிதினும் பெரிது கேள்.
72. பேய்களுக் கஞ்சேல்.
73. பொய்மை யிகழ்.
74. போர்த்தொழில் பழகு.
75. மந்திரம் வலிமை.
76. மானம் போற்று.
77. மிடிமையில் அழிந்திடேல்.
78. மீளுமா றுணர்ந்துகொள்.
79. முனையிலே முகத்துநில்.
80. மூப்பினுக் கிடங்கொடேல்.
81. மெல்லத் தெரிந்து சொல்.
82. மேழி போற்று.
83. மொய்ம்புறத் தவஞ்செய்.

84. மோனம் போற்று.
85. மௌட்டியந் தனைக் கொல்.
86. யவனர்போல் முயற்சிகொள்.
87. யாரையும் மதித்து வாழ்.
88. யௌவனங் காத்தல் செய்.
89. ரஸத்திலே தேர்ச்சிகொள்.
90. ராஜஸம் பயில்.
91. ரீதி தவறேல்.
92. ருசிபல வென்றுணர்.
93. ரூபஞ் செம்மைசெய்.
94. ரேகையிற் கனிகொள்.
95. ரோதனந் தவிர்.
96. ரௌத்திரம் பழகு.
97. லவம் பல வெள்ளமாம்.
98. லாகவம் பயிற்சிசெய்.
99. லீலை யிவ் வுலகு.
100. (உ)லுத்தரை யிகழ்.
101. (உ)லோகநூல் கற்றுணர்.
102. லௌகிக மாற்று.
103. வருவதை மகிழ்ந்துண்.
104. வானநூற் பயிற்சிகொள்.
105. விதையினைத் தெரிந்திடு.
106. வீரியம் பெருக்கு.
107. வெடிப்புறப் பேசு.
108. வேதம் புதுமைசெய்.
109. வையத் தலைமைகொள்.
110. வௌவுதல் நீக்கு.

# முரசு

வெற்றி யெட்டுத் திக்கு மெட்டக்
கொட்டு முரசே
வேதமென்றும் வாழ்க வென்று
கொட்டு முரசே
நெற்றி யொற்றைக் கண்ணனோடே
நிர்த்தனஞ் செய்தாள்
நித்த சக்தி வாழ்க வென்று
கொட்டு முரசே.

1. ஊருக்கு நல்லது சொல்வேன்—எனக்
குண்மை தெரிந்தது சொல்வேன்;
சீருக்கெல்லாம் முதலாகும்—ஒரு
தெய்வம் துணை செய்ய வேண்டும்.

2. வேத மறிந்தவன் பார்ப்பான்,—பல
வித்தை தெரிந்தவன் பார்ப்பான்.
நீதி நிலை தவறாமல்—தண்ட
நேமங்கள் செய்பவன் நாய்க்கன்.

3. பண்டங்கள் விற்பவன் செட்டி,—பிறர்
பட்டினி தீர்ப்பவன் செட்டி.
தொண்டரென் றோர்வகுப்பில்லை,—தொழில்
சோம்பலைப் போ லிழி வில்லை.

4. நாலு வகுப்புமிங் கொன்றே ;—இந்த
நான்கினி லொன்று குறைந்தால்,
வேலை தவறிச் சிதைந்தே—செத்து
வீழ்ந்திடு மானிடச் சாதி.

5. ஒற்றைக் குடும்பந் தனிலே—பொருள்
ஓங்க வளர்ப்பவன் தந்தை ;
மற்றைக் கருமங்கள் செய்தே—மனை
வாழ்ந்திடச் செய்பவ ளன்னை ;

6. ஏவல்கள் செய்பவர் மக்கள் ;—இவர்
யாவரு மோர் குல மன்றோ ?
மேவி யனைவரு மொன்றாய்—நல்ல
வீடு நடத்துதல் கண்டோம்.

7. சாதிப் பிரிவுகள் சொல்லி—அதில்
தாழ்வென்றும் மேலென்றும் கொள்வார்
நீதிப் பிரிவுகள் செய்வார்—அங்கு
நித்தமும் சண்டைகள் செய்வார்.

8. சாதிக் கொடுமைகள் வேண்டாம்,—அன்பு
தன்னிற் செழித்திடும் வையம் ;
ஆதரவுற்றிங்கு வாழ்வோம் ;—தொழில்
ஆயிரம் மாண்புறச் செய்வோம்.

9. பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான்—புவி
பேணி வளர்த்திடு மீசன் ;
மண்ணுக்குள்ளே சில மூடர்—நல்ல
மாத ரறிவைக் கெடுத்தார்.

10. கண்க ளிரண்டினி லொன்றைக்—குத்திக்
காட்சி கெடுத்திட லாமோ ?
பெண்க ளறிவை வளர்த்தால்—வையம்
பேதைமை யற்றிடுங் காணீர்.

11. தெய்வம் பல பல சொல்லிப்—பகைத்
தீயை வளர்ப்பவர் மூடர் ;
உய்வ தனைத்திலு மொன்றாய்—எங்கும்
ஓர் பொரு ளானது தெய்வம்.

12. தீயினைக் கும்பிடும் பார்ப்பார்,—நித்தந்
திக்கை வணங்குந் துருக்கர்,
கோயிற் சிலுவையின் முன்னே—நின்று
கும்பிடும் யேசு மதத்தார்—

13. யாரும் பணிந்திடும் தெய்வம்;—பொருள்
யாவினும் நின்றிடும் தெய்வம்,
பாருக்குள்ளே தெய்வ மொன்று ;—இதில்
பற்பல சண்டைகள் வேண்டாம்.

14. வெள்ளை நிறத்தொரு பூனை—எங்கள்
வீட்டில் வளருது கண்டீர் ;
பிள்ளைகள் பெற்றதப் பூனை ;—அவை
பேருக் கொரு நிறமாகும் ;

15. சாம்பல் நிறமொரு குட்டி,—கருஞ்
சாந்து நிறமொரு குட்டி,
பாம்பு நிறமொரு குட்டி,—வெள்ளைப்
பாலி னிறமொரு குட்டி.

16. எந்த நிறமிருந்தாலும்—அவை
யாவும் ஒரேதர மன்றோ ?
இந்த நிறம் சிறிதென்றும்—இஃ
தேற்ற மென்றுஞ் சொல்லலாமோ ?

17. வண்ணங்கள் வேற்றுமைப் பட்டால்—அதில்
மானுடர் வேற்றுமையில்லை.
எண்ணங்கள் செய்கைக ளெல்லாம்—இங்கு
யாவர்க்கு மொன்றெனல் காணீர்.

18. நிகரென்று கொட்டு முரசே—இந்த
நீணிலம் வாழ்ப ரெல்லாம் ;
தகரென்று கொட்டு முரசே,—பொய்மைச்
சாதி வகுப்பினை யெல்லாம்.

19. அன்பென்று கொட்டு முரசே,—அதில்
ஆக்க முண்டா மென்று கொட்டு ;
துன்பங்கள் யாவுமே போகும்—வெறுஞ்
சூதுப் பிரிவுகள் போனல்.

20. அன்பென்று கொட்டு முரசே,—மக்கள்
அத்தனை பேரும் நிகராம் ;
இன்பங்கள் யாவும் பெருகும்—இங்கு
யாவரு மொன்றென்று கொண்டால்.

21. உடன்பிறந்தார்களைப் போலே—இவ்
வுலகில் மனித ரெல்லாரும் ;
இடம் பெரிதுண்டு வையத்தில்—இதில்
ஏதுக்குச் சண்டைகள் செய்வீர் ?

22. மரத்தினை நட்டவன் தண்ணீர்—நன்கு
வார்த்ததை யோங்கிடச் செய்வான் ;
சிரத்தை யுடையது தெய்வம்,—இங்கு
சேர்ந்த வுணவெல்லை யில்லை.

23. வயிற்றுக்குச் சோறுண்டு கண்டீர்—இங்கு
வாழு மனிதரெல் லோர்க்கும் ;
பயிற்றி யுழுதுண்டு வாழ்வீர் !—பிறர்
பங்கைத் திருடுதல் வேண்டாம்.

24. உடன் பிறந்தவர்களைப் போலே—இவ்
வுலகில் மனிதரெல் லாரும் ;
திடங் கொண்டவர் மெலிந்தோரை—இங்கு
தின்று பிழைத்திட லாமோ ?

25. வலிமையுடையது தெய்வம்—நம்மை
வாழ்ந்திடச் செய்வது தெய்வம் ;
மெலிவு கண்டாலுங் குழந்தை—தன்னை
வீழ்த்தி மிதித்திட லாமோ ?

26. தம்பி சற்றே மெலிவானால்—அண்ணன்
தானடிமை கொள்ள லாமோ ?
செம்புக்குங் கொம்புக்கு மஞ்சி—மக்கள்
சிற்றடிமைப் படலாமோ ?

27. அன்பென்று கொட்டு முரசே,—அதில்
யார்க்கும் விடுதலை யுண்டு ;
பின்பு மனிதர்க ளெல்லாம்—கல்வி
பெற்றுப் பதம் பெற்று வாழ்வார்.

28. அறிவை வளர்த்திட வேண்டும்—மக்கள்
அத்தனை பேருக்கு மொன்றாய் ;
சிறியரை மேம்படச் செய்தால்—பின்பு
தெய்வ மெல்லோரையும் வாழ்த்தும்.

29. பாருக்குள்ளே சமத்தன்மை—தொடர்
பற்றுஞ் சகோதரத் தன்மை
யாருக்குந் தீமை செய்யாது—புவி
யெங்கும் விடுதலை செய்யும்.

30. வயிற்றுக்குச் சோறிட வேண்டும்—இங்கு
வாழு மனிதருக் கெல்லாம் ;
பயிற்றிப் பல கல்வி தந்து—இந்தப்
பாரை உயர்த்திட வேண்டும்.

31. ஒன்றென்று கொட்டு முரசே—அன்பில்
ஓங்கென்று கொட்டு முரசே
நன்றென்று கொட்டு முரசே—இந்த
நானில மாந்தருக் கெல்லாம்.

# பாப்பாப் பாட்டு



1. ஓடி விளையாடு பாப்பா,—நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா,
கூடி விளையாடு பாப்பா,—ஒரு
குழந்தையை வையாதே பாப்பா.

2. சின்னஞ் சிறு குருவி போலே—நீ
திரிந்து பறந்து வா பாப்பா,
வன்னப் பறவைகளைக் கண்டு—நீ
மனதில் மகிழ்ச்சி கொள்ளு பாப்பா.

3. கொத்தித் திரியு மந்தக் கோழி—அதைக்
கூட்டி விளையாடு பாப்பா,
எத்தித் திருடுமந்தக் காக்காய்—அதற்
கிரக்கப் படவேணும் பாப்பா.

4. பாலைப் பொழிந்து தரும், பாப்பா,—அந்தப்
பசு மிக நல்லதடி பாப்பா;
வாலைக் குழைத்து வரும் நாய் தான்—அது
மனிதர்க்குத் தோழ னடி பாப்பா.

5. வண்டி யிழுக்கும் நல்ல குதிரை,—நெல்லு
வயலில் உழுது வரும் மாடு,
அண்டிப் பிழைக்கும் நம்மை ஆடு,—இவை
ஆதரிக்க வேணு மடி பாப்பா.

6. காலை யெழுந்த வுடன் படிப்பு—பின்பு
கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு
மாலை முழுதும் விளையாட்டு—என்று
வழக்கப் படுத்திக் கொள்ளு பாப்பா.

7. பொய் சொல்லக்கூடாது பாப்பா—என்றும்
புறஞ் சொல்ல லாகாது பாப்பா,
தெய்வ நமக்குத் துணை பாப்பா—ஒரு
தீங்கு வர மாட்டாது பாப்பா.

8. பாதகஞ் செய்பவரைக் கண்டால்—நாம்
பயங் கொள்ள லாகாது பாப்பா,
மோதி மிதித்து விடு பாப்பா—அவர்
முகத்தில் உமிழ்ந்து விடு பாப்பா.

9. துன்பம் நெருங்கி வந்த போதும்—நாம்
சோர்ந்துவிட லாகாது பாப்பா,
அன்பு மிகுந்த தெய்வமுண்டு—துன்பம்
அத்தனையும் போக்கி விடும் பாப்பா.

10. சோம்பல் மிகக்கெடுதி பாப்பா,—தாய்
சொன்ன சொல்லைத் தட்டாதே பாப்பா,
தேம்பி யழுங் குழந்தை நொண்டி,—நீ
திடங்கொண்டு போராடு பாப்பா.

11. தமிழ்த் திரு நாடு தன்னைப் பெற்ற—எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா,
அமிழ்தில் இனியதடி பாப்பா,—நம்
ஆன்றோர்கள் தேசமடி பாப்பா.

12. சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே,—அதைத்
தொழுது படித்திடடி பாப்பா!
செல்வம் நிறைந்த ஹிந்துஸ்தானம்—அதைத்
தினமும் புகழ்ந்திடடி பாப்பா.

13. வடக்கில் இமயமலை பாப்பா,—தெற்கில்
வாழுங் குமரி முனை பாப்பா,
கிடக்கும் பெரிய கடல் கண்டாய்—இதன்
கிழக்கிலும் மேற்கிலும் பாப்பா.

14. வேதமுடைய திந்த நாடு,—நல்ல
வீரர் பிறந்த திந்த நாடு,
சேத மில்லாத ஹிந்துஸ்தானம்—இதைத்
தெய்வ மென்று கும்பிடடி பாப்பா.

15. சாதிகள் இல்லையடி பாப்பா;—குலத்
தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்;
நீதி, உயர்ந்த மதி, கல்வி—அன்பு
நிறைய உடையவர்கள் மேலோர்.

16. உயிர்களிடத்தில் அன்பு வேணும்;—தெய்வம்
உண்மை யென்று தானறிதல் வேணும்;
வயிர முடைய நெஞ்சு வேணும்;—இது
வாழும் முறைமையடி பாப்பா.

# பாரதி அறுபத்தாறு



## முதற் காண்டம்

### கடவுள் வாழ்த்து—பராசக்தி துதி

*எனக்கு முன்னே சித்தர் பல ரிருந்தா ரப்பா*
*யானும் வந்தே னொரு சித்த னிந்த நாட்டில் ;*
*மனத்தினிலே நின் றிதனை யெழுதுகின்றாள்*
*மனோன்மணி யென் மாசக்தி வையத் தேவி ;*
*தினத்தினிலே புதிதாகப் பூத்து நிற்கும்*
*செய்ய மணித் தாமரை நேர் முகத்தாள் காதல்*
*வனத்தினிலே தன்னை யொரு மலரைப்போலும்*
*வண்டினைப் போ லெனையு முரு மாற்றிவிட்டாள்.* (1)

*தீராத கால மெலாந் தானு நிற்பாள்,*
*தெவிட்டாத இன் னமுதின் செவ்விதழ்ச்சி,*
*நீராகக் கனலாக வானாக் காற்றா*
*நிலமாக வடி வெடுத்தாள், நிலத்தின் மீது*
*போராக நோ யாக மரண மாகப்*
*போந்திதனை யழித்திடுவாள் ; புணர்ச்சி கொண்டால்*
*நேராக மோன மஹா னந்த வாழ்வை*
*நிலத்தின் மிசை யளித் தமரத் தன்மை யீவாள்.* (2)

மாகாளி பராசக்தி உமையா ளன்னை
வைரவி கங்காளி மனோன்மணி மாமாயி,
பாகார்ந்த தேமொழியாள், படருஞ் செந்தீ
பாய்ந் திடுமோர் விழி யுடையாள், பரமசக்தி,
ஆகார மளித்திடு வாள், அறிவு தந்தாள்,
ஆதி பரா சக்தியென தமிழ்தப் பொய்கை,
சோகாடவிக் கு ளெனைப் புக வொட்டாமல்
தூய்ய செழுந் தேன்போலே கவிதை சொல்வாள். (3)

## மரணத்தை வெல்லும் வழி

பொன் னார்ந்த திருவடியைப் போற்றி யிங்கு
புகலுவேன் யா னறியு முண்மை யெல்லாம்;
முன்னோர்க ளெவ்வுயிருங் கடவு ளென்றார்,
முடிவாக அவ் வுரையை நான் மேற் கொண்டேன் ;
அன்னோர்க ளுரைத்த தன்றிச் செய்கை யில்லை.
அத்வைத நிலை கண்டால் மரண முண்டோ ?
முன்னோர்க ளுரைத்த பல சித்த ரெல்லாம்
முடிந்திட்டார், மடிந்திட்டார், மண்ணாய்விட்டார். (4)

பொந்திலே யுள்ளா ராம், வனத்தி லெங்கோ
புதர்களிலே யிருப்பா ராம், பொதியை மீதே
சந்திலே சவுத்தியிலே நிழலைப் போலே
சற்றே யங்கங்கே தென் படுகின்றா ராம்,
நொந்த புண்ணைக் குத்துவதிற் பய னொன் றில்லை ;
நோவாலே மடிந் திட்டான் புத்தன் ; கண்டீர்
அந்தணனாம் சங்க ராசார்யன் மாண்டான் ;
அதற் கடுத்த விராமா நுஜனும் போனான் ; (5)

சிலுவையி லே அடி யுண்டு யேசு செத்தான் ;
தீய தொரு கணையா லே கண்ணன் மாண்டான் ;
பலர் புகழு மிராமனு மே யாற்றில் வீழ்ந்தான் :
பார் மீது நான் சாகா திருப்பேன், காண்பீர் !
மலிவு கண்டீ ரிவ் வுண்மை, பொய் கூறேன் யான்,
மடிந்தாலும் பொய் கூறேன் மானுடர்க் கே,
நலிவு மில்லை, சாவுமில்லை, கேளீர், கேளீர்.
நாணத்தைக் கவலையினைச் சினத்தைப் பொய்யை (6)

## அஸுரர்களின் பெயர்

அச்சத்தை வேட்கை தனை அழித்து விட்டால்
அப் போது சாவு மங்கே அழிந்து போகும் ;
மிச்சத்தைப் பின்சொல்வேன், சினத்தை முன்னே
வென்றிடு வீர், மேதினியில் மரண மில்லை ;
துச்ச மெனப் பிறர் பொருளைக் கருதலாலே,
சூழ்ந்த தெலாங் கடவுளெனச் சுருதி சொல்லும்
நிச்சய மா ஞானத்தை மறத்தலா லே,
நேர்வ தே மானுடர்க்குச் சினத் தீ நெஞ்சில். (7)

## சினத்தின் கேடு

சினங் கொள்வார் தமைத் தாமே தீயாற் சுட்டுச்
செத் திடுவா ரொப் பாவார் ; சினங் கொள்வார் தாம்
மனங் கொண்டு தங் கழுத்தைத் தாமே வெய்ய
வாள் கொண்டு கிழித்திடுவார் மானுவா ராம்.
தினங்கோடி முறை மனிதர் சினத்தில் வீழ்வார்,
சினம்பிறர்மேற் றாங்கொண்டு கவலையாகச்
செய்ததெணித் துயர்க்கடலில் வீழ்ந்து சாவார். (8)

மாகாளி பராசக்தி துணையே வேண்டும் ;
வையகத்தி லெதற்கு மினிக்கவலை வேண்டா ;
சாகாம லிருப்பது நஞ் சதுரா லன்று;
சக்தி யருளா லன்றோ பிறந்தோம் பார் மேல் ?
பாகான தமிழினிலே பொருளைச் சொல்வேன்,
பாரீர் நீர் கேளீரோ, படைத்தோன் காப்பான்
வேகாத மனங் கொண்டு களித்து வாழ்வீர்
மேதினியி லேது வந்தா லெமக்கென் னென்றே. (9)

தேம்பாமை

" வடகோடிங் குயர்ந்தென்னே, சாய்ந்தாலென்னே,
வான் பிறைக்குத் தென்கோடு" பார்மீதிங்கே,
விட முண்டுஞ் சாகாம லிருக்கக் கற்றால்,
வேறெது தான் யாதாயி னெமக் கிங்கென்னே ?
திடங் கொண்டு வாழ்ந்திடுவோம், தேம்பல்வேண்டா;
தேம்புவதிற் பயனில்லை, தேம்பித் தேம்பி
இடருற்று மடிந்தவர்கள் கோடி கோடி
எதற்கு மினி அஞ்சாதீர் புவியிலுள்ளீர். (10)

பொறுமையின் பெருமை

திருத் தணிகை மலைமேலே குமாரதேவன்
திருக்கொலு வீற்றிருக்கு மதன் பொருளைக்கேளீர் !
திருத் தணிகை யென்பதிங்கு பொறுமையின் பேர்,
செந்தமிழ் கண்டீர், பகுதி: ' தணி ' யெனுஞ்சொல்,
பொருத்த முறுந் தணிகையினாற் புலமை சேரும்,
பொறுத்தவரே பூமியினை ஆள்வா ரென்னும்
அருத்த மிக்க பழமொழியுந் தமிழி லுண்டாம்,
அவனியிலே பொறையுடையான் அவனே தேவன்.(11)

பொறுமையினை அறக்கடவுள் புதல்வனென்னும்
யுதிட்டிரனு நெடுநாளிப் புவிமேற் காத்தான்,
இறுதியிலே பொறுமை நெறி தவறி விட்டான்,
ஆதலாற் போர்புரிந்தா னிளையா ரோடே
பொறுமையின்றிப் போர்செய்து பரதநாட்டைப்
போர்க் களத்தே அழித்து விட்டுப் புவியின்மீது
வறுமை யையுங் கலியினையும் நிறுத்தி விட்டு
மலைமீது சென்றான் பின் வானஞ் சென்றான். (12)

ஆனாலும் புவியின் மிசை உயிர்க ளெல்லாம்
அநியாய மரண மெய்தல் கொடுமை யன்றோ?
தேனான உயிரை விட்டுச் சாக லாமோ?
செத்திடற்குக் காரணந் தான் யாதென்பீரேல்,
கோனாகிச் சாத்திரத்தை யாளு மாண்பார்
ஜகதீச சந்த்ர வஸூ கூறுகின்றான்:
(ஞானானு பவத்தி லிது முடிவாங் கண்டீர்)
"நாடியிலே அதிர்ச்சியினால் மரண" மென்றான். (13)

கோபத்தால் நாடியிலே அதிர்ச்சி யுண்டாம்;
கொடுங் கோபம் பேரதிர்ச்சி; சிறிய கோபம்
ஆபத்தா மதிர்ச்சியிலே சிறிய தாகும்;
அச்சத்தால் நாடியெலா மவிந்துபோகும்;
தாபத்தால் நாடியெல்லாம் சிதைந்து போகும்;
கவலையினால் நாடியெலாந் தழலாய்வேகும்;
கோபத்தை வென்றிடலே பிறவற்றைத் தான்
கொல்வதற்குவழியென நான் குறித்திட்டேனே. (14)

## கடவுள் எங்கே இருக்கிறார்?

"சொல்லடா ஹரி யென்ற கடவுளெங்கே?
சொல்"லென்று ஹிரணியன் தா னுறுமிக் கேட்க,

நல்லதொரு மகன் சொல்வான்:—" தூணிலுள்ளான்,
நாராயணன் துரும்பி லுள்ளான் " என்றான்.
வல்ல பெருங் கடவுளிலா வணுவொன்றில்லை,
மஹாசக்தி யில்லாத வஸ்து வில்லை,
அல்ல லில்லை, அல்ல லில்லை, அல்ல லில்லை ;
அனைத்துமே தெய்வ மென்றா லல்ல லுண்டோ? (15)

கேளப்பா சீடனே, கழுதை யொன்றைக்
"கீழான" பன்றியினைத் தேளைக் கண்டு
தாளைப்பார்த் திருகரமுஞ் சிரமேற் கூப்பிச்
சங்கர, சங்கர வென்று பணிதல் வேண்டும் ;
கூளத்தை மலத்தினையும் வணங்கல் வேண்டும் ;
கூடிநின்ற பொருளனைத்தின் கூட்டந் தெய்வம்.
மீளத்தா னிதைத் தெளிவா விரித்துச் சொல்வேன் :
விண்மட்டுங் கடவுளன்று மண்ணு மஃதே. (16)

சுத்த அறிவே சிவமென் றுரைத்தார் மேலோர் ;
சுத்த மண்ணும் சிவமென்றே யுரைக்கும் வேதம் ;
வித்தகனுங் குரு சிவமென் றுரைத்தார் மேலோர் ;
வித்தை யிலாப்புலையனு மஃதென்னும் வேதம்.
பித்தரே அனைத்துயிருங் கடவுளென்று
பேசுவது மெய்யானாற் பெண்டிரென்றும்
நித்தநும தருகினிலே குழந்தை யென்றும்
நிற்பனவுந் தெய்வமன்றோ, நிகழ்த்து வீரே. (17)

உயிர்களெலாந் தெய்வ மன்றிப் பிற வொன்றில்லை ;
ஊர்வனவும் பறப்பனவு நேரே தெய்வம் ;
பயிலுமுயிர் வகை மட்டு மன்றி யிங்கு
பார்க்கின்ற பொருளெல்லாந் தெய்வங் கண்டீர் ;

'சேற்றி லுழலும் புழுவிற்கும்,—புவிச்
செல்வ முடைய வரசர்க்கும்,—பிச்சை
ஏற் றுடல் காத் திடு மேழைக்கும்,—உயிர்
எத்தனை யுண் டவை யாவிற்கும்,—நித்தம்
ஆற்றுதற் குள்ள கடமை தான்—முன் வந்
தவ் வக் கணந் தொறு நிற்கு மால்;—அது
தோற்றும் பொழுதிற் புரிகுவார்—பல
சூழ்ந்து கடமை யழிப்ப ரோ? (141)

'யாவருக் கும் பொது வாயினும்—சிறப்
பென்ப ரரசர் குலத்திற் கே—உயர்
தேவரை யொப்ப முன்னோர் தமைத்—தங்கள்
சிந்தையிற் கொண்டு பணிகுதல்;—தந்தை
ஏவலை மைந்தர் புரிதற் கே—வில்
விராமன் கதையை யுங் காட்டினேன்;—புவிக்
காவலர் தம்மிற் சிறந்த தீர்—இன்று
கர்மம் பிழைத் திடுவீர் கொலோ?' (142)

## நால்வரும் ஸம்மதித்தல்

### வேறு

என் றினைய நீதி பல தரும ராசன்
எடுத் துரைப்ப, இளைஞர்களுந் தங் கை கூப்பிக்
'குன் றினிலே யேற்றி வைத்த விளக்கைப் போலக்
குவலயத்திற் கறங் காட்டத் தோன்றினாய் நீ!
வென்றி பெறுந் திரு வடியாய், நினது சொல்லை
மீறி யொரு செய லுண்டோ? ஆண்டா னாணை

நாசத்தை யழித்து விட்டான்; யமனைக் கொன்றான்;
ஞான கங்கை தனை முடிமீ தேந்தி நின்றான்,
ஆசையெனும் கொடிக்கொருதாழ் மரமேபோன்றான்,
ஆதியவன் சுடர்பாதம் புகழ்கின்றேனே. (21)

வாயினாற் சொல்லிடவு மடங்கா தப்பா;
வரிசையுட னெழுதிவைக்க வகையுமில்லை.
ஞாயிற்றைச் சங்கிலியா லளக்கலாமோ?
ஞான குரு புகழினை நாம் வகுக்கலாமோ?
ஆயிர நூ லெழுதிடினு முடிவுறாதாம்;
ஐயனவன் பெருமையை நான் சுருக்கிச்சொல்வேன்;
காய கற்பஞ் செய்து விட்டா னவன் வாழ்நாளைக்
கணக் கிட்டு வயதுரைப்பார் யாரு மில்லை. (22)

குரு தர்சனம்

அன்றொரு நாட் புதுவை நகர் தனிலே கீர்த்தி
அடைக்கலஞ் சே ரீசுவரன் தர்மராஜா
என்ற பெயர் வீதியிலோர் சிறியவீட்டில்,
ராஜாரா மையனென்ற நாகைப் பார்ப்பான்
முன்றனது பிதா தமிழி லுப நிடத்தை
மொழி பெயர்த்து வைத்ததனைத் திருத்தச் சொல்லி
என்றனை வேண்டிக் கொள்ள, யான் சென் றாங்கண்
இருக்கையிலே யங்கு வந்தான் குள்ளச்சாமி. (23)

அப்போது நான் குள்ளச் சாமி கையை
அன்புடனே பற்றி யிது பேச லுற்றேன்:
" அப்பனே, தேசிகனே, ஞானி யென்பார்
அவனியிலே சிலர் நின்னைப் பித்த னென்பார்;

செப்புறு நல் லஷ்டாங்க யோக சித்தி
சேர்ந்தவனென் றுனைப் புகழ்வார் சிலரென்முன்னே ;
ஒப்பனைகள் காட்டாம லுண்மை சொல்வாய்,
உத்தமனே, எனக்கு நினை உணர்த்துவாயே. (24)

" யாவனீ ? நினக்குள்ள திறமை யென்னே ?
யாதுணர்வாய் ? கந்தை சுற்றித் திரிவ தென்னே ?
தேவனைப் போல் விழிப்பதென்னே ? சிறியாரோடும்
தெருவிலே நாய்களோடும் விளையாட்டென்னே ?
பாவனையிற் பித்தரைப்போ லலைவ தென்னே ?
பரமசிவன் போலுருவம் படைத்த தென்னே ?
ஆவலற்று நின்ற தென்னே ? அறிந்த தெல்லாம்,
ஆரியனே, எனக்குணர்த்தவேண்டு" மென்றேன். (25)

பற்றியகை திருகி யந்தக் குள்ளச் சாமி
பரிந் தோடப் பார்த்தான் ; யான் விடவே யில்லை.
சுற்று முற்றும் பார்த்துப் பின் முறுவல் பூத்தான் ;
தூய திருக் கமல பதத் துணையைப் பார்த்தேன் ;
குற்ற மற்ற தேசிகனுந் திமிறிக் கொண்டு
குதித் தோடி யவ்வீட்டுக் கொல்லை சேர்ந்தான் ;
மற்றவன் பின் யானோடி விரைந்து சென்று
வானவனைக் கொல்லையிலே மறித்துக் கொண்டேன்.

## உபதேசம்

பக்கத்து வீடிடிந்து சுவர்கள் வீழ்ந்த
பாழ் மனை யொன் றிருந்த தங்கே ; பரமயோகி
ஒக்கத் தன் னருள் விழியா லென்னை நோக்கி
ஒரு குட்டிச் சுவர் காட்டிப் பரிதி காட்டி

அக்கணமே கிணற்றுள தன் விம்பங் காட்டி [என்றேன்.
" அறிதிகொலோ ?" எனக் கேட்டான் "அறிந்தேன்"
மிக்க மகிழ் கொண்டவனுஞ் சென்றான் ; யானும்
வேதாந்த மரத்திலொரு வேரைக் கண்டேன். (27)

தேசிகன் கை காட்டி யெனக் குரைத்த செய்தி
செந்தமிழி னுலகத்தார்க் குணர்த்து கின்றேன் :
" வாசியை நீ கும்பகத்தால் வலியக் கட்டி,
மண்போலே சுவர் போலே, வாழ்தல் வேண்டும் ;
தேசுடைய பரிதி யுருக் கிணற்றி னுள்ளே
தெரிவது போ லுனக்குள்ளே சிவனைக் காண்பாய் ;
பேசுவதிற் பயனில்லை, அனுபவத் தாற்
பேரின்ப மெய்துவதே ஞான " மென்றான். (28)

கையிலொரு நூலிருந்தால் விரிக்கச் சொல்வேன்,
கருத்தை யதிற் காட்டுவேன் ; வானைக் காட்டி,
மையிலகு விழியாளின் காத லொன்றே
வையகத்தில் வாழு நெறி யென்று காட்டி,
ஐய மெனக் குணர்த்தியன பலவா ஞானம்,
அதற்கவன் காட்டிய குறிப்போ அநந்த மாகும்,
பொய்ய றியா ஞான குரு சிதம்ப ரேசன்
பூமி விநாயகன் குள்ளச் சாமி யங்கே. (29)

மற்றொரு நாட் பழங் கந்தை யழுக்கு மூட்டை
வள முறவே கட்டியவன் முதுகின் மீது
கற்றவர்கள் பணிந் தேத்துங் கமலப் பாதக் '
கருணைமுனி சுமந்துகொண்டென் னெதிரே வந்தான் ;

சற்று நகை புரிந்தவன் பாற் கேட்க லானேன் :
" தம்பிரானே, யிந்தத் தகைமை யென்னே ?
முற்று மிது பித்தருடைச் செய்கை யன்றே ? [றேன்,.
மூட்டை சுமந்திடுவ தென்னே ? மொழிவாய் " என்

புன்னகை பூத் தாரி யதும் புகலு கின்றான் :
" புறத்தே நான் சுமக்கின்றேன் ; அகத்தினுள்ளே,
இன்னதொரு பழங் குப்பை சுமக்கிறாய் நீ "
என்றுரைத்து விரைந்தவனு மேகிவிட்டான். [டேன் ;
மன்னவன் சொற் பொருளினை யான் கண்டு கொண்
மனத்தி னுள்ளே பழம் பொய்கள் வளர்ப்பதாலே
இன்னலுற்று மாந்தரெலா மடிவார் வீணே,
இருதயத்தில் விடுதலையை இசைத்தல் வேண்டும். (31)

சென்றதினி மீளாது ; மூடரே, நீர்
எப்போதுஞ் சென்றதையே சிந்தைசெய்து
கொன்றழிக்குங் கவலை யெனுங் குழியில் வீழ்ந்து
குமை யாதிர் ; சென்றதனைக் குறித்தல் வேண்டா ;
இன்று புதிதாய்ப் பிறந்தோ மென்று நெஞ்சில்
எண்ணமதைத் திண்ணமுற இசைத்துக் கொண்டு
தின்று விளையாடி யின் புற்றிருந்து வாழ்வீர் ;
அஃதின்றிச் சென்றதையே மீட்டு மீட்டும் (32)

மேன்மேலு நினைந் தழுதல் வேண்டா, அந்தோ !
மேதை யில்லா மானுடரே, மேலு மேலும்
மேன் மேலும் புதியகாற் றெம்முள்வந்து
மேன் மேலும் புதிய வுயிர் விளைத்தல் கண்டீர்,

ஆன்மா வென்றே கருமத் தொடர்பை யெண்ணி
அறிவு மயக்கங் கொண்டு கெடுகின்றீரே!
மான் மாறும் விழியுடையாள் சக்தி தேவி
வசப்பட்டுத் தனை மறந்து வாழ்தல் வேண்டும். (33)

சென்ற வினைப் பயன்க ளெனைத் தீண்டமாட்டா;
" ஸ்ரீதரன் யான் சிவ குமாரன் யானன்றோ?
நன்றிந்தக் கணம் புதிதாப் பிறந்து விட்டேன்,
நான் புதியன், நான் கடவுள், நலிவிலாதோன்"
என்றிந்த வுலகின் மிசை வானோர்போலே
இயன்றிடுவார் சித்த ரென்பார்; பரம தர்மக்
குன்றின் மிசை யொரு பாய்ச்சலாகப் பாய்ந்து,
குறிப் பற்றார் கெடற்றார் குலைத லற்றார். (34)

குறி யனந்த முடையோராய்க் கோடி செய்தும்
குவலயத்தில் வினைக் கடிமைப் படாதாராகி
வெறியுடையோன் உமையாளை யிடத்திலேற்றோன்
வேத குரு பரம சிவன் வித்தை பெற்றுச்
செறிவுடைய பழ வினையா மிருளைச் செற்றுத்
தீயினைப் போல் மண்மீது திரிவார் மேலோர்,
அறிவுடைய சீடா, நீ குறிப்பை நீக்கி
அநந்தமாந் தொழில் செய்தா லமர னாவாய். (35)

கேளப்பா, மேற் சொன்ன உண்மை யெல்லாம்
கேடற்ற மதி யுடையான் குள்ளச் சாமி
நாளும் பல் காட்டாலும் குறிப்பினாலும்
நலமுடைய மொழியாலும் விளக்கித் தந்தான்;

தோளைப் பார்த்துக் களித்தல் போலே யன்னுன்
துணை யடிகள் பார்த்து மனங் களிப்பேன் யானே.
வாளைப் பார்த் தின்பமுறு மன்னர் போற்று
மலர்த் தாளான் மாங்கொட்டைச் சாமி வாழ்க! (36)

## கோவிந்த ஸ்வாமி புகழ்

மாங்கொட்டைச் சாமி புகழ் சிறிது சொன்னேம்;
வண்மை திகழ் கோவிந்த ஞானி, பார்மேல்
யாங் கற்ற கல்வி யெலாம் பலிக்கச் செய்தான்,
எம் பெருமான் பெருமையை யிங்கிசைக்கக் கேளீர்!
தீங் கற்ற குண முடையான், புதுவை யூரார்
செய்த பெருந் தவத்தாலே யுதித்த தேவன்,
பாங் குற்ற மாங் கொட்டைச் சாமி போலே
பயிலு மதி வர்ணுசிரமத்தே நிற்போன். (37)

அன்பிஞல் முக்தியென்ருன் புத்த னந் நாள்;
அதனை யிந்நாட் கோவிந்த ஸாமி செய்தான்;
துன்ப முறு முயிர்க் கெல்லாந் தாயைப் போலே
சுரக்கு மரு ளுடைய பிரான் துணிந்த யோகி;
அன்பினுக்குக் கடலையுந் தான் விழுங்க வல்லான்,
அன்பினையே தெய்வ மென்பானன்பே யாவான்;
மன் பதைகள் யாவு மிங்கே தெய்வ மென்ற
மதியுடையான், கவலை யெனு மயக்கந் தீர்ந்தான்; (38)

பொன்னடியா லென் மனையைப் புனித மாக்கப்
போந் தா னிம் முனி யொரு நாள்; இறந்த வெந்தை
தன்னுருவங் காட்டினுன்; பின்ன ரென்னைத்
தரணிமிசைப் பெற்றவளின் வடிவ முற்ருன்;

அன்னவன் மா யோகி யென்றும் பரமஞானத்
தனுபூதி யுடைய னென்று மறிந்து கொண்டேன்;
அன்னவனைக் குரு வென நான் சரணடைந்தேன்;
மரண பய நீங்கினேன்; வலிமை பெற்றேன். (39)

யாழ்ப்பாணத்து சுவாமியின் புகழ்

கோவிந்த ஸாமி புகழ் சிறிது சொன்னேன்;
குவலயத்தின் விழி போன்ற யாழ்ப்பாணத்தான்,
தேவி பத மறவாத தீர ஞானி,
சிதம்பரத்து நடராஜ மூர்த்தி யாவான்,
பாவியரைக் கரை யேற்று ஞானத் தோணி
பரம பத வாயிலெனும் பார்வை யாளன்;
காவி வளர் தடங்களிலே மீன்கள் பாயுங்
கழனிகள் சூழ் புதுவையிலே யவனைக் கண்டேன். (40)

தங்கத்தாற் பதுமை செய்து மிரத லிங்கஞ்
சமைத்து மவற் றினி லீசன் றாளைப் போற்றுந்
துங்கமுறு பக்தர் பலர் புவி மீதுள்ளார்;
தோழரே, யெந்நாளு மெனக்குப் பார்மேல்
மங்களஞ் சேர் திரு விழியா லருளைப் பெய்யும்
வானவர் கோன், யாழ்ப்பாணத் தீசன் றன்னைச்
சங்கர னென் றெப்போது முன்னே கொண்டு
சரணடைந்தா லது கண்டீர் சர்வ சித்தி. (41)

குவளைக் கண்ணன் புகழ்

யாழ்ப்பாணத் தையனை யென் னிடங் கொணர்ந்தான்,
இணையடியை நந்தி பிரான் முதுகில் வைத்துக்

காழ்ப்பான கயிலை மிசை வாழ்வான், பார்மேற்
கனத்த புகழ்க் குவளையூர்க் கண்ணனென்பான் ;
பார்ப்பாரக் குலத்தினிலே பிறந்தான் கண்ணன் ;
பறையரையும் மறவரையு நிகராக் கொண்டான் ;
தீர்ப்பான சுருதி வழி தன்னிற் சேர்ந்தான்.
சிவனடியார் இவன்மீது கருணை கொண்டார். (42)

மஹத்தான முனிவரெலாங் கண்ணன் தோழர் ;
வானவரெல்லாங் கண்ண னடியா ராவார் ;
மிகத் தானு முயர்ந்த துணிவுடைய நெஞ்சின்
வீரர் பிரான் குவளையூர்க் கண்ணனென்பான்.
ஜகத்தினி லோரு வமை யிலா யாழ்ப்பாணத்து
ஸாமி தனை யிவனென்றன் மனைக் கொணர்ந்தான்.
அகத்தினிலே யவன் பாத மலரைப் பூண்டேன் ;
" அன்றே யப்போதே வீடதுவே வீடு." (43)

பாங்கான குருக்களை நாம் போற்றிக் கொண்டோம் ;
பாரினிலே பயந் தெளிந்தோம் ; பாச மற்றோம் ;
நீங்காத சிவ சக்தி யருளைப் பெற்றோம் ;
நிலத்தின் மிசை யமர நிலையுற்றோ மப்பா.
தாங்காமல் வையகத்தை யழிக்கும் வேந்தர்,
தாரணியிற் பலருள்ளார், தருக்கி வீழ்வார் ;
ஏங்காம லஞ்சாம லிடர் செய்யாமல்
என்று மருள் ஞானியரே யெமக்கு வேந்தர். (44)

## பெண் விடுதலை

பெண்ணுக்கு விடுதலை யென் றிங்கோர் நீதி
பிறப்பித்தேன் ; அதற்குரிய பெற்றி கேளீர் !

மண்ணுக்குள் ளெவ்வுயிருந் தெய்வ மென்றால்,
மனையாளுந் தெய்வ மன்றோ? மதி கெட்டீரே!
விண்ணுக்குப் பறப்பது போற் கதைகள் சொல்வீர்,
விடுதலை யென்பீர், கருணை வெள்ள மென்பீர்,
பெண்ணுக்கு விடுதலை நீ ரில்லை யென்றால்
பின்னிந்த வுலகினிலே வாழ்க்கை யில்லை. (45)

தாய் மாண்பு

பெண்டாட்டி தனை யடிமைப் படுத்த வேண்டிப்
பெண்குலத்தை முழுதடிமைப் படுத்தலாமோ?
கண்டார்க்கு நகைப் பென்னு முலக வாழ்க்கை
காதலெனுங் கதையினுடைக் குழப்பமன்றோ?
உண்டாக்கிப் பாலூட்டி வளர்த்த தாயை
உமையவ ளென் றறியீரோ? உணர்ச்சி கெட்டீர்!
பண்டாய்ச்சி ஔவை:—"அன்னையும் பிதாவும்"
பாரிடை "முன்னறி தெய்வ" மென்று ளன்றோ? (46)

தாய்க்குமே லிங்கேயோர் தெய்வ முண்டோ?
தாய் பெண்ணே யல்லளோ? தமக்கை, தங்கை
வாய்க்கும் பெண் மகவெல்லாம் பெண்ணே யன்றோ?
மனைவி யொருத்தியை யடிமைப் படுத்தவேண்டித்
தாய்க்குலத்தை முழுதடிமைப் படுத்தலாமோ?
தாயைப் போலே பிள்ளை யென்று முன்னோர்
வாக்குள தன்றோ? பெண்மை யடிமை யுற்றால்
மக்களெலா மடிமை யுறல் வியப்பொன்றாமோ? (47)

வீட்டிலுள்ள பழக்கமே நாட்டி லுண்டாம்
வீட்டினிலே தனக்கடிமை பிற ரா மென்பான்;

நாட்டினிலே
நாடோறு முயன்றிடுவா னலிந்து சாவான்;
காட்டிலுள்ள பறவைகள் போல் வாழ்வோமப்பா;
காதலிங்கே யுண்டாயிற் கவலை யில்லை;
பாட்டினிலே காதலை நான் பாட வேண்டிப்
பரம சிவன் பாதமலர் பணிகின்றேனே. (48)

## காதலின் புகழ்

காதலினால் மானுடர்க்குக் கலவி யுண்டாம்
கலவியிலே மானுடர்க்குக் கவலை தீரும்;
காதலினால் மானுடர்க்குக் கவிதை யுண்டாம்;
கான முண்டாம்; சிற்ப முதற் கலைகளுண்டாம்;
ஆதலினாற் காதல் செய்வீர், உலகத் தீரே!
அஃதன்றோ இவ்வுலகத் தலைமை யின்பம்;
காதலினாற் சாகாம லிருத்தல் கூடும்;
கவலை போம், அதனாலே மரணம் பொய்யாம். (49)

ஆதி சக்தி தனை யுடம்பில் அரனுங் கோத்தான்;
அயன் வாணிதனை நாவில் அமர்த்திக் கொண்டான்;
சோதி மணி முகத்தினளைச் செல்வ மெல்லாஞ்
சுரந் தருளும் விழியாளைத் திருவை மார்பில்
மாதவனு மேந்தினன்; வானோர்க் கேனும்
மாதரின்பம் போற் பிரிதோ ரின்பமுண்டோ?
காதல் செயு மனைவியே சக்தி கண்டீர்.
கடவுணிலை அவளாலே யெய்த வேண்டும். (50)

கொங்கைகளே சிவலிங்க மென்று கூறிக்
கோக் கவிஞன் காளிதாஸனும் பூஜித்தான்;

மங்கைதனைக் காட்டினிலு முடன் கொண்டேகி
மற்றவட்கா மதி மயங்கிப் பொன் மான் பின்னே
சிங்க நிகர் வீரர் பிரான் தெளிவின் மிக்க
ஸ்ரீராமனுஞ் சென்று பல துன்ப முற்றான்;
இங்கு புவி மிசைக் காவியங்க ளெல்லாம்
இலக்கிய மெல்லாங் காதற் புகழ்ச்சி யன்றோ? (51)

நாடகத்திற் காவியத்திற் காதலென்றால்
நாட்டினர் தாம் வியப் பெய்தி நன்றாமென்பார்;
ஊடகத்தே வீட்டினுள்ளே கிணற்றோரத்தே
ஊரினிலே காதலென்றால் உறுமுகின்றார்;
பாடைகட்டி யதைக் கொல்ல வழி செய்கின்றார்;
பாரினிலே காதலெனும் பயிரை மாய்க்க
மூடரெலாம் பொறாமையினால் விதிகள் செய்து
முறை தவறி யிடரெய்திக் கெடுகின்றாரே. (52)

காதலிலே யின்பமெய்திக் களித்து நின்றால்
கனமான மன்னவர் போ ரெண்ணுவாரோ?
மாதருடன் மனமொன்றி மயங்கிவிட்டால்
மந்திரிமார் போர்த் தொழிலை மனங்கொள்வாரோ?
பாதி நடுக் கலவியிலே காதல் பேசிப்
பகலெல்லா மிர வெல்லாங் குருவிபோலே
காதலிலே மாதருடன் களித்து வாழ்ந்தால்
படைத்தலைவர் போர்த்தொழிலைக் கருதுவாரோ? (53)

### விடுதலைக் காதல்

காதலிலே விடுதலை யென்றாங்கோர் கொள்கை
கடுகி வளர்ந்திடு மென்பார் யூரோப்பாவில்;

மாதரெலாந் தம்முடைய விருப்பின் வண்ணம்
மனிதருடன் வாழ்ந்திடலா மென்பார் அன்னோர்;
பேதமின்றி மிருகங்கள் கலத்தல் போலே
பிரியம் வந்தாற் கலந்தன்பு பிரிந்து விட்டால்
வேதனை யொன்றில்லாதே பிரிந்து சென்று
வேறொருவன் றனைக் கூடவேண்டு மென்பார். (54)

வீரமிலா மனிதர் சொலும் வார்த்தை கண்டீர்!
விடுதலையாங் காதலெனிற் பொய்மைக் காதல்!
சோரரைப் போ லாண்மக்கள் புவியின் மீது
சுவை மிக்க பெண்மை நல முண்ணுகின்றார்.
காரணந்தான் யாதெனிலோ; ஆண்களெல்லாம்
களவின்பம் விரும்புகின்றார்; கற்பே மேலென்
றீரமின்றி யெப்போது முபதேசங்கள்
எடுத்தெடுத்துப் பெண்களிட மியம்புவாரே! (55)

ஆணெல்லாங் கற்பை விட்டுத் தவறு செய்தால்
அப்போது பெண்மையுங் கற்பழிந் திடாதோ?
நாணற்ற வார்த்தை யன்றோ? வீட்டைச் சுட்டால்
நலமான கூரையுந்தா னெரிந்தி டாதோ?
பேணுமொரு காதலினை வேண்டி யன்றோ
பெண் மக்கள் கற்பு நிலை பிறழுகின்றார்?
காணுகின்ற காட்சியெலா மறைத்து வைத்துக்
கற்புக் கற்பென்றுலகோர் கதைக்கின்றாரே? (56)

### ஸர்வ மத ஸம ரஸம்

### கோவிந்த ஸ்வாமியுடன் ஸம்பாஷணை

மீளவு மங் கொரு பகலில் வந்தா னென்றன்
மனை யிடத்தே கோவிந்த வீரஞானி,

ஆள வந்தான் பூமியினே, யவனி வேந்தர்
அனைவருக்கு மேலானேன், அன்பு வேந்தன் ;
நாளைப் பார்த்தொளிர்தரு நன் மலரைப் போலே
நம்பிரான் வரவுகண்டு மன மலர்ந்தேன் ;
வேளையிலே நமது தொழில் முடித்துக் கொள்வோம் ;
வெயிலுள்ள போதினிலே யுலர்த்திக்கொள்வோம்; (57)
காற்றுள்ள போதே நாந் தூற்றிக் கொள்வோம் ;
கனமான குருவை யெதிர் கண்ட போதே
மாற்றான அஹந்தையினைத் துடைத்துக்கொள்வோம்;
மலமான மறதியினை மடித்துக் கொள்வோம் ;
கூற்றான அரக்கருயிர் முடித்துக் கொள்வோம் ;
கொலைவான யானைதனை யடித்துக் கொள்வோம் ;
பேற்றாலே குரு வந்தான் ; இவன் பால் ஞானப் [ளே
பேற்றை யெல்லாம் பெறுவோம் யாம்'' என்றெனுள்
சிந்தித்து:—"மெய்ப் பொருளை யுணர்த்தாயையே !
தேய்வென்ற மரணத்தைத் தேய்க்கும் வண்ணம்
வந்தித்து நினைக் கேட்டேன் கூறாய்'' என்றேன்.
வானவனுங் கோவிந்த ஸாமி சொல்வான்:—
"அந்த மிலா மாதேவன் கயிலை வேந்தன்
அரவிந்த சரணங்கள் முடிமேற் கொள்வோம் ;
பந்தமில்லை ; பந்தமில்லை ; பந்தமில்லை ;
பயமில்லை; பயமில்லை ; பயமே யில்லை. (59)
" அதுவே நீயென்பது முன் வேத வோத்தாம் ;
அதுவென்று லெதுவென நானறையக் கேளாய் !
அதுவென்றால் முன்னிற்கும் பொருளினமம் ;
அவனியிலே பொருளெல்லா மதுவாம்;—நீயும்

அதுவன்றிப் பிறிதில்லை; ஆதலாலே,
அவனியின் மீதெது வரினு மசைவுறாமல்
மதுவுண்ட மலர்மாலை யிராமன் தாளை
மனத்தினிலே நிறுத்தி யிங்கு வாழ்வாய், சீடா. (60)

" பாரான உடம்பினிலே மயிர்களைப் போற்
பலப்பலவாம் பூண்டு வரு மியற்கையாலே;
நேராக மானுடர் தாம் பிறரைக் கொல்ல
நினையாமல் வாழ்ந்திட்டா லுழுதல் வேண்டா;
காரான நிலத்தைப் போய்த் திருத்த வேண்டா;
கால்வாய்கள் பாய்ச்சுவதிற் கலகம் வேண்டா;
சீரான மழை பெய்யும்; தெய்வமுண்டு;
சிவன் செத்தாலன்றி மண்மேற் செழுமையுண்டு. (61)

" ஆதலால் மானிடர்கள் களவை விட்டால்
அனைவருக்கு முழைப்பின்றி யுணவுண்டாகும்;
பேதமிட்டுக் கலகமிட்டு வேலிகட்டிப்
பின் னதற்குக் காவலென்று பேருமிட்டு
தீதமில்லாக் கள்வர் நெறி யாயிற்றப்பா!
நினைக்குங் கா லிது கொடிய நிகழ்ச்சியன்றோ?
பாதமலர் காட்டி நினை யன்னை காத்தாள்
பாரிலினித் தரும நீ பகருவாயே. (62)

" ஒரு மொழியே பலமொழிக்கு மிடங் கொடுக்கும்;
ஒரு மொழியே மலமொழிக்கு மொழிக்கு மென்ற
ஒரு மொழியைக் கருத்தினிலே நிறுத்தும் வண்ணம்
ஒரு மொழி "ஓம் நமச்சிவாய" வென்பர்;
"ஹரி ஹரி" யென்றிடினு மஃதே; "ராம ராம"
"சிவ சிவ"; வென்றிட்டாலு மஃதே யாகும்;

தெரிவுறவே "ஓம் சக்தி" யென்று மேலோர்
ஜெபம் புரிவதப் பொருளின் பெயரே யாகும். (63)

"சாரமுள்ள பொருளினை நான் சொல்லி விட்டேன்;
சஞ்சலங்க ளினி வேண்டா, சரதந் தெய்வம்;
ஈரமிலா நெஞ்சுடையார் சிவனைக் காணார்;
எப்போது மருளை மனத் திசைத்துக் கொள்வாய்;
வீரமிலா நெஞ்சுடையார் சிவனைக் காணார்;
எப்போதும் வீரமிக்க வினைகள் செய்வாய்;
பேருயர்ந்த ஏஹோவா அல்லா நாமம்
பேணுமவர் பதமலரும் பேணல் வேண்டும். (64)

"பூமியிலே, கண்ட மைந்து, மதங்கள் கோடி!
புத்த மதம், சமண மதம், பார்ஸி மார்க்கம்
சாமி யென யேசு பதம் போற்று மார்க்கம்,
ஸநாதன மாம் ஹிந்து மதம், இஸ்லாம், யூதம்,
நாம முயர் சீனத்துத் "தாவு" மார்க்கம்,
நல்ல "கண்பூசி" மத முதலாப் பார்மேல்
யாமறிந்த மதங்கள் பல வுளவா மன்றே;
யாவினுக்கு முட் புதைந்த கருத்திங் கொன்றே. (65)

"பூமியிலே வழங்கி வரு மதத்துக் கெல்லாம்
பொருளினை நாமிங் கெடுத்துப் புகலக் கேளாய்;
சாமி நீ; சாமி நீ; கடவுள் நீயே;
தத்வமஸி; தத்வமஸி; நீயே யஃதாம்;
பூமியிலே நீ கடவு ளில்லை யென்று
புகல்வது நின் மனத்துள்ளே புகுந்த மாயை;
சாமி நீ அம் மாயை தன்னை நீக்கி
ஸதாகாலம் 'சிவோஹ' மென்று ஸாதிப்பாயே." (66)

# குயில்

காலை யிளம்பரிதி வீசுங் கதிர்களிலே
நீலக் கடலோர் நெருப்பெதிரே சேர்மணிபோல்
மோகனமாஞ் சோதி பொருந்தி முறைதவறா
வேகத் திரைகளினால் வேதப் பொருள் பாடி
வந்து தழுவும் வளஞ்சார் கரையுடைய
செந்தமிழ்த் தென்புதுவை யென்னுந் திருநகரின்
மேற்கே, சிறுதொலையில் மேவுமொரு மாஞ்சோலை ;
நாற்கோணத் துள்ள பல நத்தத்து வேடர்களும்
வந்து பறவை சுட வாய்ந்த பெருஞ்சோலை ;—
அந்த மாஞ்சோலை யதனிலோர் காலையிலே,
வேடர் வாராத விருந்துத் திருநாளில்,
பேடைக் குயிலொன்று பெட்புற வோர் வான்கிளையில்
வீற்றிருந்தே, ஆண்குயில்கள் மேனி புளகமுற,
ஆற்ற லழிவுபெற, உள்ளத் தனல் பெருக,
சோலைப் பறவையெலாஞ் சூழ்ந்து பரவசமாய்க்
காலைக் கடனிற் கருத்தின்றிக் கேட்டிருக்க,
இன்னமுதைக் காற்றினிடை எங்குங் கலந்ததுபோல்,
மின்னற் சுவைதான் மெலிதாய் மிக வினிதாய்
வந்து பரவுதல் போல், வானத்து மோகினியாள்
இந்தவுரு வெய்தித் தன் ஏற்றம் விளக்குதல்போல்,
இன்னிசைத் தீம்பாட லிசைத்திருக்கும் விந்தைதனை—
முன்னிக் கவிதைவெறி மூண்டே நனவழியப்
பட்டப் பகலிலே பாவலர்க்குத் தோன்றுவதாம்

நெட்டைக் கனவி னிகழ்ச்சியிலே—கண்டேன் யான்.
கன்னிக் குயிலன்று காவிடத்தே, பாடியதோர்
இன்னிசைப் பாட்டினிலே யானும் பரவசமாய்,
“ மனிதவுரு நீங்கிக் குயிலுருவம் வாராதோ ?
இனிதிக் குயிற்பேட்டை யென்றும் பிரியாமல்,
காதலித்துக் கூடிக் களியுடனே வாழோமோ ?
நாதக் கனலினிலே நம்முயிரைப் போக்கோமோ ?”
என்று பலவெண்ணி யேக்கமுறப் பாடிற்றால்.
அன்று நான் கேட்ட தமரர் தாங் கேட்பாரோ ?
குக்குக்கு வென்று குயில் பாடும் பாட்டினிலே
தொக்க பொருளெல்லாந் தோன்றிய தென்சிந்தைக்கே;
அந்தப் பொருளை அவனிக் குரைத்திடுவேன் ;
விந்தைக் குரலுக்கு, மேதினியீர், என்செய்கேன் !

## குயிலின் பாட்டு *

காதல், காதல், காதல்;
காதல் போயிற் காதல் போயிற்
சாதல், சாதல், சாதல். (காதல்)

---

* ராகம்—சங்கராபரணம். ஏகதாளம்.
ஸ்வரம் :

“ ஸகா—ரிமா—காரீ
பாபாபாபா—மாமாமாமா
ரீகா—ரிகமா—மாமா ”

[சந்த பேதங்களுக்குத் தக்கபடி மாற்றிக்கொள்க.]

1. அருளே யாகல் லொளியே ;
ஒளி போமாயின், ஒளிபோமாயின்,
இருளே, இருளே, இருளே. (காதல்)

2. இன்பம், இன்பம், இன்பம் ;
இன்பத் திற்கோ ரெல்லை காணில்,
துன்பம், துன்பம், துன்பம். (காதல்)

3. நாதம், நாதம், நாதம் ;
நாதத் தேயோர் நலிவுண்டாயின்,
சேதம், சேதம், சேதம். (காதல்)

4. தாளம், தாளம், தாளம் ;
தாளத் திற்கோர் தடையுண்டாயின்,
கூளம், கூளம், கூளம். (காதல்)

5. பண்ணே, பண்ணே, பண்ணே ;
பண்ணிற் கேயோர் பழுதுண்டாயின்,
மண்ணே, மண்ணே, மண்ணே. (காதல்)

6. புகழே, புகழே, புகழே ;
புகழுக் கேயோர் புரையுண்டாயின்,
இகழே, இகழே, இகழே. (காதல்)

7. உறுதி, உறுதி, உறுதி ;
உறுதிக் கேயோர் உடைவுண்டாயின்,
இறுதி, இறுதி, இறுதி. (காதல்)

8. கூடல், கூடல், கூடல் ;
கூடிப் பின்னே குமரன் போயில்,
வாடல், வாடல், வாடல். (காதல்)

9. குழலே, குழலே, குழலே;
குழலிற் சீறல் கூடுங்காலை,
விழலே, விழலே, விழலே. (காதல்)

குயிலின் காதற் கதை

மோகனப் பாட்டு முடிவுபெறப் பாரெங்கும்
ஏக மவுன மியன்றதுகாண்; மற்றதிலோர்
இன்ப வெறியுந் துயரும் இணைந்தனவால்.
பின்பு நான் பார்க்கப் பெடைக்குயிலஃதொன்றல்லால்
மற்றப் பறவை மறைந்தெங்கோ போகவுமிவ்
வொற்றைக் குயில் சோகமுற்றுத் தலைகுனிந்து
வாடுவது கண்டேன். மரத்தருகே போய்நின்று,
"பேடே, திரவியமே, பேரின்பப் பாட்டுடையாய்,
ஏழுலகு மின்பத்தீ யேற்றுந் திறனுடையாய்,
பீழையுனக் கெய்தியதென்? பேசாய்," எனக் கேட்-
டேன்.
மாயக் குயிலதுதான் மானுடவர் பேச்சினிலோர்
மாயச் சொல் கூற மனந்தீயுற நின்றேன்.
"காதலை வேண்டிக் கரைகின்றேன், இல்லையெனில்
சாதலை வேண்டித் தவிக்கின்றேன்" என்றதுவால்.
"வானத்துப் புள்ளெல்லா மையலுறப் பாடுகிறாய்,
ஞானத்திற் புட்களிலு நன்கு சிறந்துள்ளாய்,
காதலர் நீயெய்துகிலாக் காரணந்தான் யா"தென்றேன்.
வேதனையு நாணு மிகுந்த குரலினிலே
கானக் குயிலிக் கதை சொல்ல லாயிற்று:—
"மானக் குலைவும் வருத்தமுநான் பார்க்காமல்,
உண்மை முழுதும் உரைத்திடுவேன், மேற்குலத்தீர்!

பெண்மைக்கிரங்கிப் பிழைபொறுத்தல் கேட்கின்றேன்.
அறிவும் வடிவுங் குறுகி, அவனியிலே
சிறியதொரு புள்ளாய்ச் சிறியேன் பிறந்திடினும்,
தேவர் கருணையிலோ, தெய்வச் சினத்தாலோ,
யாவர் மொழியும் எளிதுணரும் பேறுபெற்றேன்;
மானுடவர் நெஞ்ச வழக்கெல்லாந் தேர்ந்திட்டேன்;
கானப் பறவை கலகலெனு மோசையிலும்,
காற்று மரங்களிடைக் காட்டு மிசைகளிலும்,
ஆற்றுநீ ரோசை அருவி யொலியினிலும்,
நீலப் பெருங்கடலெந் நேரமுமே தானிசைக்கும்
ஓலத் திடையே யுதிக்கு மிசையினிலும்,
மானுடப் பெண்கள் வளருமொரு காதலினால்
ஊனுருகப் பாடுவதி லூறிடுந் தேன் வாரியிலும்,
ஏற்றநீர்ப் பாட்டி னிசையினிலும், நெல்லிடிக்குங்
கோற்றொடியார் குக்குவெனக் கொஞ்சு மொலியினிலும்,
சுண்ணமிடிப் பார்தஞ் சுவைமிகுந்த பண்களிலும்,
பண்ணை மடவார் பழகுபல பாட்டினிலும்,
வட்டமிட்டுப் பெண்கள் வளைக்கரங்கள் தாமொலிக்கக்
கொட்டி யிசைத்திடுமோர் கூட்டமுதப் பாட்டினிலும்,
வேயின் குழலோடு வீணைமுதலா மனிதர்
வாயினிலுங் கையாலும் வாசிக்கும் பல்கருவி [கும்
நாட்டினிலுங் காட்டினிலும் நாளெல்லாம் நன்றொலிக்-
பாட்டினிலும், நெஞ்சைப் பறிகொடுத்தேன் பாவி-
நாவுமொழிய நடுக்கமுறும் வார்த்தைகளைப் [யேன்.
பாவிமனந் தானிறுகப் பற்றிநிற்ப தென்னேயோ!
நெஞ்சத்தே தைக்க நெடுநோக்கு நோக்கிடுவீர்,
மஞ்சரே, என்றன் மனநிகழ்ச்சி காணீரோ?

காதலை வேண்டிக் கரைகின்றேன், இல்லையெனில்
சாதலை வேண்டித் தவிக்கின்றேன்" என்றதுவே.
சின்னக் குயிலிதனைச் செப்பியவப் போழ்தினிலே,
என்னைப் புதியதோர் இன்பச் சுரங்கவர,
உள்ளத் திடையு முயிரிடையு மாங்கந்தப்
பிள்ளைக் குயிலினதோர் பேச்சன்றி வேறற்றேன்;
‘காதலோ காதலினிக் காதல் கிடைத்திலதேல்
சாதலோ சாதல்’எனச் சாற்றுமொரு பல்லவியென்
உள்ளமாம் வீணைதனில், உள்ள வீடத்தனையும்
விள்ள வொலிப்பதலால் வேறோ ரொலியில்லை.
சித்த மயங்கித் திகைப்பொடுநா னின்றிடவும்,
அத்தருணத் தேபறவை யத்தனையுந் தாந்திரும்பிச்
சோலைக் கிளையிலெலாந் தோன்றி யொலித்தனவால்.
நீலக் குயிலு நெடிதுயிர்த்தாங் கிஃதுரைக்கும்:
"காதல் வழிதான் கரடுமுர டாமென்பர்.
சோதித் திருவிழியீர்! துன்பக் கடலினிலே
நல்லுறுதி கொண்டதோர் நாவாய்போல் வந்திட்டீர்;
அல்லலற நும்மோ டளவளவாய் நான்பெறுமிவ்
வின்பத் தினுக்கும் இடையூறு மூண்டதுவே!
அன்பொடு நீரிங்கே அடுத்தநான் காநாளில்
வந்தருளல் வேண்டும். மறவாதீர், மேற்குலத்தீர்!
சிந்தை பறிகொண்டு செல்கின்றீர்! வாரீரேல்,
ஆவி தரியேன். அறிந்திடுவீர், நான்கா நாள்.
பாவியிந்த நான்குநாள் பத்துயுகமாக் கழிப்பேன்;
சென்று வருவீர், என் சிந்தைகொடு போகின்றீர்,
சென்று வருவீர்," எனத் தேறாப் பெருந்துயரங்
கொண்டு சிறுகுயிலுங் கூறி மறைந்ததுகாண்.

## காதலோ காதல்

கண்டதொரு காட்சி கனவு நனவென் றறியேன்,
எண்ணுதலுஞ் செய்யேன், இருபதுபேய் கொண்ட-
கண்ணும் முகமுங் களியேறிக் காமனார் [வன்போல்
அம்பு நுனிக ளகத்தே யமிழ்ந்திருக்க,
கொம்புக் குயிலுருவங் கோடி பல கோடியாய்
ஒன்றே யதுவாய் உலகமெலாந் தோற்றமுற,
சென்றே மனைபோந்து சித்தந் தனதின்றி,
நாளொன்று போவதற்கு நான்பட்ட பாடனைத்துந்
தாளம் படுமோ? தறி படுமோ? யார் படுவார்?
நாளொன்று போயினது. நானு மெனதுயிரும்,
நீளச் சிலை கொண்டு நின்றதொரு மன்மதனும்,
மாயக் குயிலுமதன் மாமாயத் தீம்பாட்டும்,
சாயைபோ லிந்திரமா சாலம் போல் வையமுமா
மிஞ்சி நின்றோம். ஆங்கு, மறுநாள் விடிந்தவுடன்,
(வஞ்சனை நான் கூறவில்லை) மன்மதனார் விந்தையால்,
புத்தி மனஞ் சித்தம் புலனொன் றறியாமல், [யென,
வித்தைசெயுஞ் சூத்திரத்தின் மேவுமொரு பொம்மை
காலிரண்டுங் கொண்டு கடுகவுநான் சோலையிலே
நீலிதனைக் காணவந்தேன். நீண்ட வழியினிலே
நின்றபொருள் கண்ட நினைவில்லை. சோலையிடைச் [ரால்
சென்றுநான் பார்க்கையிலே, செஞ்ஞாயிற் றொண்கதி-
பச்சைமர மெல்லாம் பளபளென, என்னுளத்தின்
இச்சை யுணர்ந்தனபோல் ஈண்டும் பறவையெலாம்
வேறெங்கோ போயிருப்ப, வெம்மைக் கொடுங்காதல்
மீற வெனைத் தான்புரிந்த விந்தைச் சிறுகுயிலைக்

காணநான் வேண்டிக் கரைகடந்த வேட்கையுடன்
கோணமெலாஞ் சுற்றிமரக் கொம்பையெலா நோக்கி
வந்தேன்.

## குயிலும் குரங்கும்

மற்றைநாட் கண்ட மரத்தே குயிலில்லை.
சுற்றுமுற்றும் பார்த்துத் துடித்து வருகையிலே,—
வஞ்சனையே! பெண்மையே! மன்மதனும் பொய்த்
தேவே!
நெஞ்சகமே! தொல்விதியி னீதியே! பாழுலகே!—
கண்ணாலேநான்கண்ட காட்சிதனை யென்னுரைப்பேன்!
பெண்ணா லறிவிழக்கும் பித்தரெலாங் கேண்மினோ!
காதலினைப் போற்றுங் கவிஞரெலாங் கேண்மினோ!
மாதரெலாங் கேண்மினோ! வல்விதியே கேளாய் நீ!
மாயக் குயிலோர் மரக்கிளையில் வீற்றிருந்தே
பாயும் விழிநீர் பதைக்குஞ் சிறியவுடல்
விம்மிப் பரிந்துசொலும் வெந்துயர்ச்சொல் கொண்-
டதுவாய்,
அம்மவோ! மற்றாங்கோ ராண்குரங்கு தன்னுடனே
ஏதேதோ கூறி யிரங்கு நிலைகண்டேன்.
தீதேது? நன்றேது? செய்கைத் தெளிவேது?
அந்தக் கணமே அதையுங் குரங்கினையும்
சிந்தக் கருதி உடைவாளிற் கைசேர்த்தேன்.
கொன்றுவிடு முன்னே, குயிலுரைக்கும் வார்த்தைகளை
நின்றுசற்றே கேட்பதற்கென் நெஞ்சம் விரும்பிடவும்,
ஆங்கவற்றின் கண்ணில் அகப்படா வாறருகே
ஓங்கு மரத்தின்பால் ஒளிந்துநின்று கேட்கையிலே

பேடைக் குயிலிதனைப் பேசியது:—

"வானரரே,
ஈடறியா மேன்மையழ கேய்ந்தவரே, பெண்மை தான்
எப்பிறப்புக் கொண்டாலும், ஏந்தலே, நின்னழகைத்
தப்புமோ? மையல் தடுக்குந் தரமாமோ?
மண்ணி லுயிர்க் கெல்லாந் தலைவரென மானிடரே
எண்ணிநின்றார் தம்மை; எனிலொருகால், ஊர்வகுத்தல்,
கோயில், அரசு, குடிவகுப்புப் போன்ற சில
வாயிலிலே, அந்த மனித ருயர்வெனலாம்.
மேனி யழகினிலும், விண்டுரைக்கும் வார்த்தையிலும்,
கூனி யிருக்குங் கொலுநேர்த்தி தன்னிலுமே,
வானரர்தஞ் சாதிக்கு மாந்தர்நிக ராவாரோ?
ஆன வரையு மவர்முயன்று பார்த்தாலும்,
பட்டுமயிர் மூடப் படாத தமதுடலை
எட்டுடையால் மூடி யெதிருமக்கு வந்தாலும்,
மீசையையும் தாடியையும் விந்தைசெய்து வானரர்தம்
ஆசை முகத்தினைப்போ லாக்க முயன்றிடினும்
ஆடிக் குதிக்கும் அழகிலுமை நேர்வதற்கே
கூடிக் குதித்துக் குதித்தாலும், கோபுரத்தில்
ஏறத் தெரியாமல் ஏணிவைத்துச் சென்றாலும்,
வேறெத்தைச் செய்தாலும், வேகமுறப் பாய்வதிலே
வானரர் போலாவரோ? வாலுக்குப் போவதெங்கே?
ஈனமுறுங் கச்சை யிதற்கு நிகராமோ?
பாகையிலே வாலிருக்கப் பார்த்ததுண்டு, கந்தைபோல்
வேகமுறத் தாவுகையில் வீசி யெழுவதற்கே
தெய்வங் கொடுத்த திருவாலைப் போலாமோ?

சைவசுத்தபோசனமும், சாதுரியப் பார்வைகளும்—
வானரர்போற்சாதியொன் றுமண் ணுலகின்மீதுளதோ?
வானரர் தம்முள்ளே மணிபோ லுமையடைந்தேன்.
பிச்சைப் பறவைப் பிறப்பிலே தோன்றிடினும்,
நிச்சயமா முன்புரிந்த நோன்பு தவங்களினால்
தேவரீர்காதல்பெறுஞ்சீர்த்திகொண்டேன். தம்மிடத்தே
ஆவலுற்றுப் பாடுகின்றேன். ஆரியரே, கேட்டருள்வீர்.''
(வானரப் பேச்சினிலே மைக்குயிலி பேசியதை
யானறிந்து கொண்டுவிட்டேன், யாதோ வொரு-
நீசக் குயிலு நெருப்புச் சுவைக்குரலில் [திறத்தால்.)
ஆசை ததும்பி அமுதூறப் பாடியதே :—

காதல், காதல், காதல் ;
காதல் போயிற் காதல் போயிற்
சாதல், சாதல், சாதல்.

முதலியன(2-ம் பக்கம் பார்க்க)

காட்டில் விலங்கறியும், கைக்குழந்தை தானறியும்,
பாட்டின் சுவையதனைப் பாம்பறியு மென்றுரைப்பார்.
வற்றற் குரங்கு மதிமயங்கிக் கள்ளினிலே
முற்றும் வெறிபோல் முழுவெறிகொண் டாங்கனே,
தாவிக் குதிப்பதுவுந் தாளங்கள் போடுவதும்,
"ஆவி யுருகுதடீ, ஆஹாஹா!" என்பதுவும்,
கண்ணைச் சிமிட்டுவதும், காலாலுங் கையாலும்
மண்ணைப் பிறண்டியெங்கும் வாரியிறைப்பதுவும்,
"ஆசைக் குயிலே, அரும் பொருளே, தெய்வதமே,
பேச முடியாப் பெருங்காதல் கொண்டுவிட்டேன்.
காதலில்லை யானாற் கணத்திலே சாதலென்றாய் ;

காதலினாற் சாகுங் கதியினிலே என்னைவைத்தாய்,
எப்பொழுது நின்னை இனிப்பிரிவ தாற்றகிலேன்,
இப்பொழுதே நின்னைமுத்த மிட்டுக் களியுறுவேன்,"
என்று பல பேசுவது மென்றனுயிரைப் புண்செயவே,
கொன்றுவிட வெண்ணிக் குரங்கின்மேல் வீசினேன்
கைவாளையாங்கே; கனவோ? நனவுகொலோ?
தெய்வ வலியோ? சிறுகுரங்கென் வாளுக்குத்
தப்பி, முகஞ்சுளித்துத் தாவி யொளித்திடவும்,
ஒப்பிலா மாயத் தொருகுயிலுந் தான்மறைய,
சோலைப் பறவை தொகைதொகையாத் தாமொலிக்க,
மேலைச் செயலறியா வெள்ளறிவிற் பேதையேன்
கட்டிக் கடுமாறிச் சார்பனைத்துந் தேடியுமே
குட்டிப் பிசாசக் குயிலையெங்குங் காணவில்லை.

## இருளும் ஒளியும்

வான நடுவிலே மாட்சியுற ஞாயிறுதான் [தான்.
மோனவொளி சூழ்ந்திடவு மொய்ம்பிற் கொலுவிருந்-
மெய் யெல்லாஞ் சோர்வு விழியில் மயக்கமுற,
உய்யும் வழியுணரா துள்ளம் பதைபதைக்க,
நாணுந் துயரு நலிவுறுத்த, நான்மீண்டு [டேன்.
பேணுமனை வந்தேன்; பிரக்ஞைபோய் வீழ்ந்துவிட்-
மாலையிலே மூர்ச்சைநிலை மாறித் தெளிவடைந்தேன்;
நாலு புறமுமெனை நண்பர் வந்து சூழ்ந்துநின்றார்.
"ஏனடா மூர்ச்சையுற்றாய்? எங்கு சென்றாய், ஏது
செய்தாய்?
வானம் வெளிறுமுன்னே வைகறையி லேதனித்துச்
சென்றனை யென்கிறார்செய்தியென்னே? ஊணின்றி

நின்ற தென்னே ?" என்று நெரித்துவிட்டார் கேள்வி-
இன்னார்க் கிதுசொல்வ தென்று தெரியாமல், [களை.
" என்னாற் பலவுரைத்த லிப்பொழுது கூடாதாம்.
நாளைவருவீரேல் நடந்ததெலாஞ் சொல்வேன். இவ்
வேளை யெனைத் தனியே விட்டகல்வீர்," என்றுரைத்-
தேன்.

நண்பரெல்லாஞ் சென்றுவிட்டார். நைந்து நின்ற
தாயார்தாம்

உண்பதற்குப் பண்ட முதவி நல்ல பால்கொணர்ந்தார்.
சற்றுவிடாய் தீர்ந்து தனியே படுத்திருந்தேன் ;
முற்று மறந்து முழுத்துயிலி லாழ்ந்து விட்டேன்.
பண்டு நடந்ததனைப் பாடுகின்ற விப்பொழுதும்,
மண்டு துயரெனது மார்பையெலாங் கவ்வுவதே.
ஓடித் தவறி யுடைவனவாஞ் சொற்களெலாம் ;
கூடி மதியிற் குவிந்திடுமாஞ் செய்தியெலாம்.
நாசக் கதைதனை நடுவே நிறுத்திவிட்டுப்
பேசு மிடைப்பொருளின் பின்னே மதிபோக்கிக்
கற்பனையும் வர்ணனையுங் காட்டிக் கதைவளர்க்கும்
விற்பனர் தஞ் செய்கை விதமுந் தெரிகிலன்யான்.
மேலைக் கதையுரைக்க வெள்கிக் குலையுமனம்.
காலைக் கதிரழகின் கற்பனைகள் பாடுகிறேன்.
தங்கமுருக்கித் தழல்குறைத்துத் தேனாக்கி
எங்கும் பரப்பியதோ ரிங்கிதமோ ? வான்வெளியைச்
சோதி கவர்ந்து சுடர்மயமாம் விந்தையினை
ஓதிப் புகழ்வார் உவமை யொன்று காண்பாரோ ?
கண்ணையினி தென்றுரைப்பர்; கண்ணுக்குக் கண்ணாகி

விண்ணை யளக்குமொளி மேம்படுமோ ரின்பமன்றோ?
மூலத் தனிப்பொருளை மோனத்தே சிந்தைசெயும்
மேலவரு மஃதோர் விரியுமொளி யென்பாரேல்,
நல்லொளிக்கு வேறுபொருள் ஞாலமிசை யொப்-
புல்லை நகையுறுத்திப், பூவை வியப்பாக்கி, [புளதோ?
மண்ணைத் தெளிவாக்கி, நீரில் மலர்ச்சி தந்து,
விண்ணை வெளியாக்கி, விந்தைசெயுஞ் சோதியினைக்
காலைப்பொழுதினிலே கண்விழித்து நான்தொழுதேன்.
நாலு புறத்துமுயிர் நாதங்க ளோங்கிடவும்,
இன்பக் களியி லியங்கும் புவிகண்டேன்.
துன்பக் கதையின் தொடருரைப்பேன், கேளீரோ!

## குயிலும் மாடும்

காலைத் துயிலெழுந்து, காலிரண்டு முன்போலே
சோலைக் கிழுத்திட, நான் சொந்தவுணர் வில்லாமே
சோலையினில் வந்துநின்று, சுற்றுமுற்றுந் தேடினேன்.
கோலப் பறவைகளின் கூட்டமெல்லாங் காணவில்லை.
மூலையிலோர் மாமரத்தின் மோட்டுக் கிளையினிலே
நீலக் குயிலிருந்து நீண்டகதை சொல்லுவதும்,
கீழே யிருந்தோர் கிழக்காளை மாடதனை
ஆழ மதியுடனே ஆவலுறக் கேட்பதுவும், [லனல்
கண்டேன், வெகுண்டேன், கலக்கமுற்றேன்; நெஞ்சி-
கொண்டேன், குமைந்தேன், குமுறினேன், மெய்
வெயர்த்தேன்;
கொல்லவாள் வீசல் குறித்தேன். 'இப்பொய்ப் பறவை
சொல்லுமொழி கேட்டதன்பின் கொல்லுதலே
சூழ்ச்சி'யென

முன்போல் மறைந்துநின்றேன் ; மோகப் பழங்கதை-
யைப்
பொன்போற் குரலும் புதுமின்போல் வார்த்தைகளுங்
கொண்டு, குயிலாங்கே கூறுவதாம் :—
"நந்தியே,
பெண்டிர் மனத்தைப் பிடித்திழுக்கும் காந்தமே,
காமனே மாடாகக் காட்சிதரு மூர்த்தியே,
பூமியிலே மாடுபோற் பொற்புடைய சாதியுண்டோ ?
மானிடருந் தம்முள் வலிமிகுந்த மைந்தர்தமை
மேனியுறுங் காளையென்று மேம்பா டுறப் புகழ்வார்.
காளையர்த முள்ளே கனமிகுந்தீர், ஆரியரே !
நீளமுகமும், நிமிர்ந்திருக்குங் கொம்புகளும்,
பஞ்சுப் பொதிபோற் படர்ந்த திருவடிவும்,
மிஞ்சு புறச்சுமையும், வீரத் திருவாலும்,
வானத் திடிபோல 'மா'வென் றுறுமுவதும்,
ஈனப் பறவை முதுகின்மிசை யேறிவிட்டால்
வாலைக் குழைத்து வளைத்தடிக்கு நேர்மையும், பல்
கால நான் கண்டு கடுமோக மெய்திவிட்டேன்.
பார வடிவும் பயிலு முடல்வலியும்
தீர நடையும் சிறப்புமே யில்லாத
சல்லித் துளிப்பறவைச் சாதியிலே நான் பிறந்தேன்.
அல்லும் பகலுநித மற்ப வயிற்றினுக்கே
காடெல்லாஞ் சுற்றிவந்து, காற்றிலே யெற்றுண்டு,
மூட மனிதர் முடைவயிற்றுக் கோருணவாம்
சின்னக் குயிலின் சிறுகுலத்திலே தோன்றி
என்னபயன் பெற்றேன் ? எனைப்போலோர் பாவி
யுண்டோ ?

சேற்றிலே தாமரையும் சிழுடைய மீன்வயிற்றிற்
போற்றுமொளி முத்தும் புறப்படுதல் கேட்டிலிரோ ?
நீசப் பிறப்பொருவர் நெஞ்சிலே தோன்றிவரும்
ஆசை தடுக்கவல்ல தாகுமோ ? காமனுக்கே
சாதி பிறப்புத் தராதரங்கள் தோன்றிடுமோ ?
வாதித்துப் பேச்சை வளர்த்தோர் பயனுமில்லை.
மூட மதியாலோ, முன்னைத் தவற்றாலோ,
ஆடவர்தமுள்ளே அடியாளுனைத் தெரிந்தேன்.
மாறுடராம் பேய்கள் வயிற்றுக்குச் சோறிடவுந்
கூனர்தமை யூர்களிலே கொண்டு விடுவதற்கும்
தெய்வமென நீருதவி செய்தபின்னர், மேனிவிடாய்
எய்தி யிருக்கு மிடையினிலே, பாவியேன்
வந்துமது காதில் மதுரவிசை பாடுவேன் ;
வந்து முதுகில் ஒதுங்கிப் படுத்திருப்பேன்,
வாலிலடி பட்டு மனமகிழ்வேன். 'மா'வென்றே
ஒலிடுநும் பேரொலியோ டொன்றுபடக் கத்துவேன் ;
மேனியிலே யுண்ணிகளை மேவாது கொன்றிடுவேன்.
கானிடையே சுற்றிக் கழனியெலா மேய்ந்து, நீர்
மிக்கவுணா வுண்டுவாய் மென்றசைதான் போடுகையில்,
பக்கத்திருந்து பல கதைகள் சொல்லிடுவேன்.
காளை யெருதரே, காட்டிலுயர் வீரரே,
தாளைச் சரணடைந்தேன். தையலெனைக்காத்தருள்வீர்.
காதலுற்று வாடுகின்றேன். காதலுற்ற செய்தியினை
மாத ருரைத்தல் வழக்கமில்லை யென்றறிவேன்.
ஆனாலு மென்போ லபூர்வமாங் காதல்கொண்டால்,
தானா வுரைத்தலன்றிச் சாரும் வழியுளதோ ?

ஒத்த குலத்தவர்பால் உண்டாகும் வெட்கமெலாம்
இத்தரையில் மேலோர்முன் ஏழையர்க்கு நாண
முண்டோ ?
தேவர் முன்னே யன்புரைக்கச் சிந்தை வெட்கங்
கொள்வதுண்டோ ?
காவலர்க்குத் தங்குறைகள் காட்டாரோ கீழடியார் ?
ஆசைதான் வெட்க மறியுமோ ?" என்றுபல
நேசவுரை கூறி, நெடிதுயிர்த்துப் பொய்க்குயிலி
பண்டுபோ லேதனது பாழடைந்த பொய்ப்பாட்டை
எண்டிசையு மின்பக் களியேறப் பாடியதே.

காதல், காதல், காதல் ;
காதல் போயிற் காதல் போயிற்
சாதல், சாதல், சாதல்.

முதலியன (2-ம் பக்கம் பார்க்க.)

பாட்டு முடியுமவரை பாரறியேன், விண்ணறியேன் ;
கோட்டுப் பெருமரங்கள் கூடிநின்ற காவறியேன் ;
தன்னை யறியேன், தனைப்போ லெருதறியேன் ;
பொன்னை நிகர்த்தகுரல் பொங்கிவரு மின்ப மொன்றே
கண்டேன். படைப்புக் கடவுளே, நான்முகனே,
பண்டேயுலகு படைத்தனை நீ யென்கின்றார்.
நீரைப் படைத்து நிலத்தைத் திரட்டிவைத்தாய்,
தீரைப் பழைய நெருப்பிற் குளிர்வித்தாய்,
காற்றைமுன்னே யூதினாய், காணரிய வானவெளி
தோற்றுவித்தாய், நின்றன் தொழில் வலிமை
யாரறிவார் ?

உள்ளந்தான் கவ்வ வொருசிறிதுங் கூடாத
கொள்ளைப் பெரியவுருக்கொண்ட பலகோடி
வட்ட வுருளைகள்போல் வானத்தி லண்டங்கள்
எட்ட நிரப்பி யவை யெப்போதும் ஓட்டுகின்றாய்;
எல்லா மறைவில் இருப்பதற்கே சக்திகளை,
பொல்லாப் பிரமா, புகுத்துவிட்டாய், அம்மாவோ!
காலம் படைத்தாய், கடப்பதிலாத் திக்கமைத்தாய்;
ஞாலம் பலவினிலு நாடோறுந் தாம்பிறந்து
தோன்றி மறையுந் தொடர்பாப் பலவனந்தம்;
சாலமிகப் பெரிய சாதனைகா ணிஃதெல்லாம்!
தாலமிசை நின்றன் சமர்த்துரைக்க வல்லார் யார்?
ஆனாலு நின்றன் அதிசயங்கள் யாவினுமே,
கானமுதம் படைத்த காட்சிமிக விந்தையடா!
காட்டு நெடு வானங் கடலெல்லாம் விந்தையெனில்,
பாட்டினைப்போ லாச்சரியம் பாரின்மிசை யில்லையடா!
பூதங்க ளொத்துப் புதுமைதரல் விந்தையெனில்,
நாதங்கள் சேரு நயத்தினுக்கு நேராமோ?
ஆசைதருங் கோடி யதிசயங்கள் கண்டதிலே,
ஓசைதரு மின்பம் உவமையிலா வின்பமன்றோ?
செத்தைக்குயில்புரிந்த தெய்வீகத் தீம் பாட்டெனுமோர்
வித்தை முடிந்தவுடன், மீட்டுமறி வெய்திநான்
கையில் வாளெடுத்துக் காளையின்மேல் வீசினேன்.
மெய்யிற் படுமுன் விரைந்ததுதான் ஓடிவிட,
வன்னக் குயில் மறைய, மற்றைப் பறவையெலாம்
முன்னைப்போற் கொம்பு முனைகளிலே வந்தொலிக்க,
நாணமிலாக் காதல்கொண்ட நானுஞ் சிறுகுயிலை

விணிலே தேடியபின், வீடுவந்து சேர்ந்துவிட்டேன்.
எண்ணியெண்ணிப் பார்த்தேன் எதுவும் விளங்கவில்லை;
—கண்ணிலே நீர்ததும்பக் கானக் குயிலெனக்கே
காதற் கதையுரைத்து நெஞ்சங் கரைத்ததையும்,
பேதைநா னங்கு பெரியமயல் கொண்டதையும்,
இன்பக் கதையி னிடையே தடையாகப்
புன்பறவை யெல்லாம் புகுந்த வியப்பினையும்,
ஒன்றைப் பொருள் செய்யா வுள்ளத்தைக் காமவனல்
தின்றெனது சித்தந் திகைப்புறவே செய்ததையும்,
சொற்றைக் குரங்கும் தொழுமாடும் வந்தெனக்கு
முற்றும் வயிரிகளா மூண்ட கொடுமையையும்,
இத்தனை கோலத்தினுக்கு யான்வேட்கை தீராமல்
பித்தம் பிடித்த பெரிய கொடுமையையும்— [வில்லை;
எண்ணியெண்ணிப் பார்த்தேன், எதுவும் விளங்க-
கண்ணிரண்டு மூடக் கடுந்துயிலி லாழ்ந்துவிட்டேன்.

## நான்கா நாள்

நான்காநாள். என்னை நயவஞ்சனை புரிந்து
வான்காதல் காட்டி மயக்கிச் சதிசெய்த
பொய்ம்மைக் குயிலென்னைப் போந்திடவே கூறியநாள்.
மெய்ம்மை யறிவிழந்தேன். வீட்டிலே மாடமிசை
சித்தத் திகைப்புற்றோர் செய்கை யறியாமல்,
எத்துக் குயிலென்னை எய்துவித்த தாழ்ச்சியெலாம்
மீட்டு நினைந்தங்கு வீற்றிருக்கும் போழ்தினிலே,
காட்டுத் திசையினிலென் கண்ணிரண்டு நாடியவால்.
வானத்தே யாங்கோர் கரும்பறவை வந்திடவும்

யானதனைக் கண்டே, 'இது நமது பொய்க்குயிலோ?'
என்று திகைத்தேன்; இருந்தொலைக்கே நின்றதனால்
நன்று வடிவந் துலங்கவில்லை; நாடுமனம்
ஆங்கதனை விட்டுப் பிரிவதற்கு மாகவில்லை.
ஓங்குந் திகைப்பி லுயர்மாடம் விட்டுநான்
வீதியிலே வந்து நின்றேன். மேற்றிசையி லவ்வுருவம்
சோதிக் கடலிலே தோன்று கரும் புள்ளியெனக்
காணுதலும், சற்றே கடுகி யருகேபோய், [வோம்
'நாணமிலாப் பொய்க் குயிலோ' வென்பதனை நன்கறி-
என்று கருத்துடனே யான்விரைந்து சென்றிடுங்கால்,
நின்ற பறவையுந்தான் நேராகப் போயினதால். [லும்;
யானின்றால் தானிற்கும், யான்சென்றால் தான் செல்
மேனி நன்கு தோன்ற அருகினிலே மேவாது;
வானி லதுதான் வழிகாட்டிச் சென்றிடவும்,
யானிலக்கே சென்றேன். இறுதியிலே முன்புநாம்
கூடியுள்ள மாஞ்சோலை தன்னைக் குறுகியந்த
ஊறிலாப் புள்ளு மதனுள்ளே மறைந்ததுவால்.
மாஞ்சோலைக் குள்ளே மதியிலிநான் சென்றாங்கே,
ஆஞ்சோதி வெள்ளம் அலையுமொரு கொம்பரின்மேல்
சின்னக் கருங்குயிலி செவ்வனே வீற்றிருந்து,
பொன்னங் குழலின் புதிய வொலிதனிலே
பண்டைப் பொய்க்காதற் பழம்பாட்டைத் தான்பாடிக்
கொண்டிருத்தல் கண்டேன், குமைந்தேன்; எதிரே-
"நீசக் குயிலே, நிலையறியாப் பொய்ம்மையே, [போய்,
ஆசைக் குரங்கினையும் அன்பா யெருதினையும்
எண்ணிநீ பாடும் இழிந்த புலைப்பாட்டை

நண்ணியிங்கு கேட்க நடத்திவந்தாய் போதுமெனே, "
என்று சினம்பெருகி ஏதேதோ சொல்லுரைத்தேன்.
கொன்றுவிட நெஞ்சிற் குறித்தேன் ; மறுபடியும்
நெஞ்ச மிளகி நிறுத்திவிட்டேன். ஈங்கிதற்குள்,
வஞ்சக் குயிலி மனத்தை யிரும்பாக்கிக்
கண்ணிலே பொய்ந் நீர் கடகடெனத் தானூற்றப்
பண்ணிசைபோ லின்குரலாற் பாவியது கூறிடுமால் :
" ஐயனே, என்னுயிரின் ஆசையே, ஏழையெனை
வையமிசை வைக்கத் திருவுளமோ? மற்றெனையே
கொன்றுவிடச் சித்தமோ? கூறீ ரொருமொழியில்!
அன்றிற் சிறுபறவை ஆண்பிரிய வாழாது. [வுளதோ?
ஞாயிறுதான் வெம்மைசெயில், நாண்மலர்க்கு வாழ்-
தாயிருந்து கொன்றால், சரண்மதலைக் கொன்றுளதோ?
தேவர் சினந்துவிட்டால், சிற்றுயிர்க ளென்னாகும்?
ஆவற் பொருளே, அரசே, என் னாரியரே, [வேன்;
சிந்தையினீ ரென்மேற் சினங்கொண்டால் மாய்ந்திடு-
வெந்தழலில் வீழ்வேன், விலங்குகளின் வாய்ப்படுவேன்.
குற்றநீ ரென்மேற் கொணர்ந்ததனை யானறிவேன்.
குற்றநமைக் கூறுகிலேன், குற்றமிலேன் யானம்ம!
புன்மைக் குரங்கைப் பொதிமாட்டை நான்கண்டு
மென்மையுறக் காதல் விளையாடினே னென்றீர் ;
என் சொல்கேன்! எங்ஙனுய்வேன்! ஏதுசெய்கேன்!
ஐயனே,
நின்சொல் மறுக்க நெறியில்லை ; ஆயினும்
என்மேற் பிழையில்லை ; யாரிதனை நம்பிடுவார்?—
நின்மேற் சுமைமுழுது நேராகப் போட்டுவிட்டேன்,

வெவ்விதியே! நீ யென்னை மேம்பாடுறச் செய்து
செவ்விதினிங் கென்னை யென்றன் வேந்தனொடு சேர்த்
திடினும்,
அல்லாதென் வார்த்தை யவர்சிறிது நம்பாமே
புல்லாக வெண்ணிப் புறக்கணித்துப் போய்விட, நான்
அக்கணத்தே தீயில் அழிந்துவிழ நேரிடினும்,
எக்கதிக்கும் ஆளாவேன்; என்செய்வேன்? வெவ்
விதியே!

## குயில் தனது பூர்வ ஜன்மக் கதை யுரைத்தல்

"தேவனே! என்னருமைச் செல்வமே! என்னுயிரே!
போவதன் முன்னொன்று புகல்வதனைக் கேட்டருள்வீர்!
முன்னமொரு நாள் முடிநீள் பொதியமலை
தன்னருகே நானுந் தனியேயோர் சோலைதனில்
மாங்கிளையி லேதோ மனதிலெண்ணி வீற்றிருந்தேன்.
ஆங்குவந்தா ரோர்முனிவர். ஆரோ பெரியரென்று
பாதத்தில் வீழ்ந்து பரவினேன்; ஐயரெனை
ஆதரித்து வாழ்த்தி யருளினார். மற்றதன்பின்,
'வேத முனிவரே, மேதினியிற் கீழ்ப்பறவைச்
சாதியிலே நான் பிறந்தேன். சாதிக்குயில்களைப்போல்
இல்லாமல், என்றன் இயற்கை பிரிவாகி,
எல்லார் மொழியும் எனக்கு விளங்குவதேன்?
மானுடர்போற் சித்தநிலை வாய்த்திருக்குஞ் செய்
தியேன்?
யாதுணரச் சொல்வீர்' என வணங்கிக் கேட்கையிலே,
கூறுகின்றார் ஐயர்:
'குயிலே, கேள், முற்பிறப்பில்
வீறுடைய வெந்தொழிலார் வேடர் குலத்தலைவன்
வீர முருகனெனும் வேடன் மகளாகச்

சேர வளநாட்டில் தென்புறத்தே யோர்மலையில்
வந்து பிறந்து வளர்ந்தாய் நீ. நல்லிளமை
முந்து மழகினிலே மூன்று தமிழ் நாட்டில்
யாரு நினக்கோர் இணையில்லை யென்றிடவே
சீருயர நின்றாய்; செழுங்கான வேடரிலுன்
மாமன் மகனொருவன், மாடனெனும் பேர்கொண்டான்,
காமன் கணைக்கிரையாய், நின்னழகைக் கண்டுருகி,
நின்னை மணக்க நெடுநாள் விரும்பி, யவன்
பொன்னை மலரைப் புதுத்தேனைக் கொண்டுனக்கு
நித்தங் கொடுத்து, நினைவெல்லா நீயாகச்
சித்தம் வருந்துகையில், தேமொழியே, நீயவனை
மாலையிட வாக்களித்தாய்; மையலினாலில்லை; அவன்
சால வருந்தல் சகிக்காமற் சொல்லிவிட்டாய்;
ஆயிடையே, நின்றன் அழகின் பெருங்கீர்த்தி [லோர்
தேயமெங்குந் தான்பரவத் தென்மலையின் சார்பினி-
வேடர்கோன், செல்வமுநல் வீரமுமே தானுடையான்;
நாடனைத்து மஞ்சி நடுங்குஞ் செயலுடையான்,
மொட்டைப் புலியனுந்தன் மூத்த மகனான
நெட்டைக் குரங்கனுக்கு நேரான பெண்வேண்டி,
நின்னை மணப்புரிய நிச்சயித்து, நின்னப்பன்
தன்னை யணுகி, "நின்னோர் தையலையென் பிள்ளைக்குக்
கண்ணாலஞ் செய்யுங் கருத்துடையேன்" என்றிடலும்,
எண்ணாப் பெருமகிழ்ச்சி எய்தியே, நின் தந்தை
ஆங்கே யுடம்பட்டான்; ஆறிரண்டு நாட்களிலே
பாங்கா மணம்புரியத் தாமுறுதி பண்ணிவிட்டார்.
பன்னிரண்டு நாட்களிலே பாவையுனைத் தென்மலையில்

அன்னியன் கொண்டேகிடுவான் என்னும் அது கேட்டு,
மாடன் மனம்புகைந்து மற்றைநாள் உன்னைவந்து
நாடிச் சினந்துடனே நானு மொழிகூற,
நீயு மவனிடத்தே நீண்ட கருணையினால்,
"காயுஞ் சினந்தவிர்ப்பாய், மாடா, கடுமையினால்
நெட்டைக் குரங்கனுக்குப் பெண்டாக நேர்ந்தாலும்,
கட்டுப் படி அவர்தம் காவலிற் போய் வாழ்ந்தாலும்,
மாதமொரு மூன்றில் மருமஞ் சிலசெய்து
பேதம் விளைவித்துப் பின்னிங்கே வந்திடுவேன்;
தாலிதனை மீட்டுமவர் தங்களிடமே கொடுத்து
நாலிரண்டு மாதத்தே நாயகனா நின்றனையே
பெற்றிடுவேன்; நின்னிடத்தே பேச்சுத் தவறுவனோ?
மற்றிதனை நம்பிடுவாய், மாடப்பா," என்றுரைத்தாய்;
காதலினாலில்லை, கருணையினா லிஃதுரைத்தாய்.
(மாதரசாய், வேடன் மகளான முற்பிறப்பில்,
சின்னக் குயிலியென்று செப்பிடுவார் நின்னாமம்.)
பின்னர்ச் சில தினங்கள் சென்றதன்பின், பெண்குயிலி,
நின்னொத்த தோழியரு நீயுமொரு மாலையிலே
மின்னற் கொடிகள் விளையாடுதல் போலே
காட்டினிடையே களித்தாடி நிற்கையிலே,
வேட்டைக்கென வந்தான் வெல்வேந்தன் சேரமான்
தன்னருமை மைந்தன். தனியே, துணைபிரிந்து,
மன்னவன் றன்மைந்த னொருமானைத் தொடர்ந்துவரத்
தோழியரு நீயுந் தொகுத்துநின்றே யாடுவதை
வாழியவன் கண்டுவிட்டான். மையல் கரைகடந்து
நின்னைத் தனதாக்க நிச்சயித்தான். மாதுநீ

மன்னவனைக் கண்டவுடன் மாமோகங் கொண்டுவிட்
டாய்.
நின்னையவன் நோக்கினன் ; நீயவனை நோக்கிநின்றாய் ;
அன்னவரொரு நோக்கினிலே ஆவி கலந்துவிட்டீர்.
தோழியரும் வேந்தன் சுடர்க்கோலந் தான்கண்டே
ஆழி யரசனரும்புதல்வன் போலு மென்றே
அஞ்சி மறைந்து விட்டார். ஆங்கவனு நின்னிடத்தே
" வஞ்சித் தலைவன் மகன் யான் " எனவுரைத்து,
" வேடர் தவமகளே, விந்தை யழகுடையாய்,
ஆடவனாத் தோன்றி யதன்பயனை யின்றுபெற்றேன் ;
கண்டதுமே நின்மிசைநான் காதல்கொண்டேன் "
என்றிசைக்க,
மண்டு பெருங்காதல் மனத்தடக்கி நீ மொழிவாய் :
" ஐயனே, உங்க ளரமனையில் ஐந்நூறு
தையல ருண்டாம் ; அழகில் தந்நிகரில் லாதவராம்.
கல்வி தெரிந்தவராய் ; கவினுறுகப் பாடுவராம் ; [பீர் ;
அன்னவரைச் சேர்ந்தே நீர் அன்புடனே வாழ்ந்திருப்
மன்னவரை வேண்டேன் மலைக்குறவர் தம்மகள்யான் ;
கொல்லு மடற் சிங்கம் குழிமுயலை வேட்பதுண்டோ ?
வெல்லுதிறல் மாவேந்தர் வேடருள்ளோ பெண்ணெடுப்
பார் ?
பத்தினியா வாழ்வதல்லால் பார்வேந்தர் தாமெனினும்
நத்தி விலைமகளா நாங்கள் குடி போவதில்லை.
பொன்னடியைப் போற்றுகின்றேன், போய்வருவீர்.
தோழியரும்
என்னைவிட்டுப்போயினரே. என்செய்கேன் ?" என்றுநீ
நெஞ்சங் கலக்கமெய்தி நிற்கையிலே, வேந்தன்மகன்

மிஞ்சுநின் றன் காதல் விழிக்குறிப்பி னுலறிந்தே,
பக்கத்தில் வந்து பளிச்சென் றனது கன்னஞ்
செக்கச் சிவக்க முத்தமிட்டான். சினங்காட்டி
நீ விலகிச் சென்ருய்—நெறியேது காமியர்க்கே?—
தாவி நின்னைவந்து தழுவினன் மார்பிறுக.
" நின்னையன்றி யோர்பெண் நிலத்திலுண்டோ
என்றனக்கே?
பொன்னே, ஒளிர்மணியே, புத்தமுதே, இன்பமே,
நீயே மனையாட்டி, நீயே யரசாணி.
நீயே துணை யெனக்கு, நீயே குலதெய்வம்.
நின்னையன்றிப் பெண்ணை நினைப்பேனே? வீணிலே
என்னை நீ ஐயுறுதல் ஏதுக்காம்? இப்பொழுதே [பால்
நின்மனைக்குச் சென்றிடுவோம்; நின் வீட்டிலுள்ளோர்-
என்மனத்தைச் சொல்வேன், எனதுநிலை யுரைப்பேன்,
வேத நெறியில் விவாகமுனைச் செய்து கொள்வேன்,
மாதரசே," என்று வலக்கைதட்டி வாக்களித்தான்.
பூரிப்புக் கொண்டாய்; புளகமெய் தெய்திவிட்டாய்.
வாரிப் பெருந்திரைபோல் வந்த மகிழ்ச்சியிலே
நாணந் தவிர்த்தாய்; நனவே தவிர்ந்தவளாய்,
காணத் தெவிட்டாதோ ரின்பக் கனவினிலே [வகை
சேர்ந்துவிட்டாய். மன்னவன்றன் திண்டோளை நீயு-
ஆர்ந்து தழுவி அவனிதழில் தேன்பருகச்
சிந்தை கொண்டாய். வேந்தன்மகன், தேனில் விழும்
வண்டினைப்போல்,
விந்தையுறு காந்தமிசை வீழு மிரும்பினைப்போல்,
ஆவலுட னின்னை யறத்தழுவி, ஆங்குனது
கோவை யிதழ்பருகிக் கொண்டிருக்கும் வேளையிலே,—

சற்றுமுன்னே யூரினின்று தான்வந் திறங்கியவன்,
மற்றுநீ வீட்டைவிட்டு மாதருடன் காட்டினிலே
கூத்திருக்குச் சென்றதனைக் கேட்டுக் குதூகலமாய்
ஆத்திரந்தான் மிஞ்சி நின்னை ஆங்கெய்திக் காணவந்
தோன்;—
நெட்டைக் குரங்கன் நெருங்கிவந்து பார்த்துவிட்டான்.
“பட்டப் பகலிலே! பாவிமகள் செய்தியைப் பார்!
கண்ணாலங் கூட இன்னுங் கட்டி முடியவில்லை.
மண்ணாக்கிவிட்டாள்! என் மானங்கொலைத்துவிட்டாள்!
‘நிச்சிய தாம்பூலம்’ நிலையா நடந்திருக்கப்
பிச்சைச் சிறுக்கிசெய்த பேதகத்தைப் பார்த்தாயோ!”
என்று மனதில் எழுகின்ற தீயுடனே
நின்று கலங்கினான் நெட்டைக் குரங்கனங்கே.
மாப்பிள்ளைதான் ஊருக்கு வந்ததையும், பெண்குயிலி
தோப்பிலே தானுந்தன் தோழிகளு மாச்சென்று
பாடி விளையாடும் பண்பு கேட்டே குரங்கன்
ஓடி யிருப்பதோ ருண்மையையு மாடனிடம்
யாரோ வுரைத்து விட்டார்; ஈரிரண்டு பாய்ச்சலிலே
நீரோடு மேனி நெருப்போடுங் கண்ணுடனே
மாடனங்கு வந்துநின்றான். மற்றதனைத் தென்மலையின்
வேடர்கோன் மைந்தன் விழிகொண்டு பார்க்கவில்லை.
நெட்டைக் குரங்கனங்கு நீண்ட மரம்போலே
எட்டிநிற்குஞ் செய்தி யிவன் பார்க்க நேரமில்லை.
அன்னியனைப் பெண்குயிலி யார்ந்திருக்குஞ்
செய்தியொன்று
தன்னையே யிவ்விருவர் தாங்கண்டார், வேறறியார்.
மாடனதைத் தான் கண்டான், மற்றவனு மங்ஙனமே

மாடன் வெறிகொண்டான், மற்றவனு மவ்வாறே.
காவலன்றன் மைந்தனுமக் கன்னிகையுந் தானுமங்கு
தேவ சுகங் கொண்டு விழியே திறக்கவில்லை.
ஆவிக் கலப்பி னமுத சுகந்தனிலே
மேவியங்கு மூடி யிருந்த விழி நான்கு.
ஆங்கவற்றைக் கண்டமையால் ஆவியிலே தீப்பற்றி
ஓங்கும் பொறிக ளுதிர்க்கும் விழிநான்கு.
மாடனுந்தன் வாளுருவி மன்னவனைக் கொன்றிடவே
ஓடிவந்தான்; நெட்டைக் குரங்கனும் வா ளோங்கி
வந்தான்;
வெட்டிரண்டு வீழ்ந்தனகாண் வேந்தன் முதுகினிலே.
சட்டெனவே மன்னவனுந் தான்திரும்பி வாளுருவி
வீச்சிரண்டி லாங்கவரை வீழ்த்தினான்; வீழ்ந்தவர்தாம்
பேச்சிழந்தே யங்கு பிணமாகக் கிடந்துவிட்டார். [டான்.
மன்னவனுஞ் சோர்வெய்தி மண்மேல் விழுந்து விட்-
பின்னவனை நீயும் பெருந்துயர்கொண்டே மடியில்
வாரி யெடுத்துவைத்து வாய்புலம்பக் கண்ணிரண்டும்
மாரி பொழிய மனமழிந்து நிற்கையிலே,
கண்ணை விழித்துனது காவலனுங் கூறுகின்றான்:
"பெண்ணே, இனி நான் பிழைத்திடேன்; சில்கணத்தே
ஆவி துறப்பேன். அழுதோர் பயனில்லை.
சாவிலே துன்பமில்லை'; தையலே, இன்னமு நாம்
பூமியிலே தோன்றிடுவோம். பொன்னே, நினைக்கண்டு
காமுறுவேன்; நின்னைக் கலந்தினிது வாழ்ந்திடுவேன்
இன்னும் பிறவியுண்டு. மாதரசே, இன்பமுண்டு.
நின்னுடனே வாழ்வனினி நேரும் பிறப்பினிலே,"

என்று சொல்லிக் கண்மூடி, இன்பமுறுபுன்னகைதான்
நின்று முகத்தே நிலவுதர, மாண்டனன்காண்.
மாடனிங்கு செய்ததோர் மாயத்தால் இப்பொழுது
பீடையுறு புள்வடிவம் பேதையுனக் கெய்தியது.
வாழிநின் றன் மன்னவனுந் தொண்டை வளநாட்டில்
ஆழிக் கரையி னருகேயோர் பட்டினத்தில்
மானிடனாத் தோன்றி வளருகின்றான். நின்னையொரு
கானிடத்தே காண்பான். கனிந்துநீ பாடுநல்ல
பாட்டினைத்தான் கேட்பான். பழவினையின் கட்டினால்
மீட்டு நின்மேற் காதல்கொள்வான், மென்குயிலே,'
என்றந்தத்
தென்பொதிகை மாமுனிவர் செப்பினார். 'சாமீ,
குயிலுருவங்கொண்டேன்யான், கோமானோ மேன்மை
பயிலு மனிதவுருப் பற்றிநின்றான். எம்முள்ளே
காதலிசைத் தாலுங் கடிமணந்தான் கூடாதாம்.
சாதற் பொழுதிலே தார்வேந்தன் கூறியசொல்
பொய்யாய் முடியாதோ?' என்றிசைத்தேன். 'புன்ன-
கையில்
ஐய னுரைப்பார் :—'அடி பேதாய், இப்பிறவி
தன்னிலு நீ விந்தகிரிச் சார்பினிலோர் வேடனுக்குக்
கன்னியெனத் தான் பிறந்தாய். கர்மவசத்தினால்,
மாடன் குரங்க னிருவருமே வன்பேயாக்
காடுமலை சுற்றி வருகையிலே கண்டுகொண்டார்
நின்னையங்கே. இப்பிறப்பில் நீயும் பழமைபோல்
மன்னனையே சேர்வையென்று தாஞ்சூழ்ந்து மற்றவரும்
நின்னைக் குயிலாக்கி நீ செல்லுந் திக்கி லெல்லாம்

நின்னுடனே சுற்றுகின்றார். நீயிதனைத்தேர்கிலையோ?"
என்றார். 'விதியே! இறந்தவர்தாம் வாழ்வாரை
நின்று துயருறுத்தல் நீதியோ? பேய்களெனைப்
பேதைப் படுத்திப் பிறப்பை மறப்புறுத்தி
வாதைப் படுத்தி வருமாயில், யானெனது
காதலனைக் காணுங்கால், காய்சினத்தா லேதேனுந்
தீதிழைத்தா லென்செய்வேன்? தேவரே, மற்றிதற்கோர்
மாற்றிலையோ?" என்று மறுகி நான் கேட்கையிலே,
தேற்றமுறு மாமுனிவர் செப்புகின்றார்:—'பெண்குயிலே,
தொண்டைவளநாட்டிலோர் சோலையிலே வேந்தன்மகன்
கண்டுனது பாட்டிற் கருத்திளகிக் காதல்கொண்டு
நேச மிகுதியுற்று நிற்கையிலே, பேயிரண்டும்
மோச மிகுந்த முழுமாயச் செய்கைபல
செய்துபல பொய்த்தோற்றங் காட்டித் திறல்வேந்தன்
ஐயமுறச் செய்துவிடும். ஆங்கவனு நின்றனையே
வஞ்சகியென் றெண்ணி மதிமருண்டு நின்மீது
வெஞ்சினந்தா னெய்திநினை விட்டுவிட நிச்சயிப்பான்.
பிந்தி விளைவதெல்லாம் பின்னேநீ கண்டு கொள்வாய்,
சந்தி ஜபம் செய்யுஞ் சமய மாய் விட்ட' தென்றே
காற்றில் மறைந்து சென்றார் மாமுனிவர். காதலரே,
மாற்றியுரைக்கவில்லை. மாமுனிவர் சொன்னதெல்லாம்
அப்படியே சொல்லிவிட்டேன். ஐயோ! திருவுளத்தில்
எப்படி நீர் கொள்வீரோ? யானறியேன். ஆரியரே,
காத லருள்புரிவீர். காதலில்லை யென்றிடிலோ,

சாத லருளித் தமது கையாற் கொன்றிடுவீர் !"
என்று குயிலு மென துகையில் வீழ்ந்ததுகாண்.
கொன்றுவிட மனந்தான் கொள்ளுமோ? பெண்ணென்-
பேயு மிரங்காதோ ? பேய்க ளிரக்கமின்றி [றால்
மாயமிழைத் தாலதனை மானிடனுங் கொள்ளுவதோ ?
காதலிலே ஐயங் கலந்தாலு நிற்பதுண்டோ ?
மாதரன்பு கூறில் மனமிளகா ரிங்குளரோ ?
அன்புடனே யானும் அருங்குயிலைக் கைக்கொண்டு
முன்புவைத்து நோக்கியபின் மூண்டுவரு மின்பவெறி
கொண்டதனை முத்தமிட்டேன். கோகிலத்தைக்
காணவில்லை.
விண்டுரைக்க மாட்டாத விந்தையடா ! விந்தையடா !
ஆசைக் கடலின் அமுதடா ! அற்புதத்தின்
தேசமடா! பெண்மைதான் தெய்விகமாங்காட்சியடா !
பெண்ணொருத்தி யங்குநின்றாள் ; பேருவகை கொண்டு
தான்
கண்ணெடுக்கா தென்னைக்கணப்பொழுது நோக்கினாள்;
சற்றே தலைகுனிந்தாள். சாமீ ! இவளழகை
எற்றே தமிழி லிசைத்திடுவேன் ? கண்ணிரண்டும்
ஆளை விழுங்கும் அதிசயத்தைக் கூறுவனோ ?
மீளவிழியில் மிதந்த கவிதையெலாம்
சொல்லி லகப்படுமோ ? தூயசுடர் முத்தையொப்பாம்
பல்லிற் கனியிதழிற் பாய்ந்த நிலவினை யான்
என்று மறத்தல் இயலுமோ ? பாரின்மிசை
நின்றதொரு மின்கொடிபோல் நேர்ந்த மணிப் பெண்
ணரசின்
மேனி நலத்தினையும் வெட்டினையுங் கட்டினையும்

தேனி லினியாள் திருத்தநிலேபி னையும்
மற்றவர்க்குச் சொல்ல வசமாமோ? ஓர் வார்த்தை,
கற்றவர்க்குச் சொல்வேன். கவிதைக் கனிபிழிந்த
சாற்றினிலே, பண் கூத்தெனுமிவற்றின் சாரமெலாம்
ஏற்றி, யதனேடே யின்னமுதைத் தான் கலந்து,
காதல் வெயிலிலே காயவைத்த கட்டியினுல்
மாதவளின் மேனி வகுத்தான் பிரமனென்பேன்.
பெண்ணவளைக் கண்டு பெருங்களிகொண் டாங்ஙனே
நண்ணித் தழுவி நறுங் கள் ளிதழினையே
முத்தமிட்டு முத்தமிட்டு மோகப் பெருமயக்கில்
சித்த மயங்கிச் சிலபோழ் திருந்த பின்னே,
பக்கத் திருந்தமணிப் பாவையுடன் சோலையெலாம்
ஒக்க மறைந்திடலும், ஓஹோ! வெனக்கதறி
வீழ்ந்தேன். பிறகு விழிதிறந்து பார்க்கையிலே
சூழ்ந்திருக்கும் பண்டைச் சுவடி, எழுதுகோல்,
பத்திரிகைக் கூட்டம், பழம்பாய்—வரிசையெல்லாம்—
ஒத்திருக்க 'நாம் வீட்டில் உள்ளோம்' எனவுணர்ந்-
தேன்.

சோலை, குயில், காதல், சொன்னகதை யத்தனையும்,
மாலை யழகின் மயக்கத்தால் உள்ளத்தே
தோன்றியதோர் கற்பனையின் சூழ்ச்சியென்றே
கண்டுகொண்டேன்.

ஆன்ற தமிழ்ப்புலவீர், கற்பனையே யானுலும்,
வேதாந்தமாக விரித்துப் பொருளுரைக்க
யாதானுஞ் சற்றே யிடமிருந்தாற் கூறீரோ?




ஓம் சக்தி

# பாஞ்சாலி சபதம்

---

## பிரம ஸ்துதி

ஓ மெனப் பெரியோர்கள்—என்றும்
ஓதுவ தாய், வினை மோதுவ தாய்,
தீமைகள் மாய்ப்பது வாய்,—துயர்
தேய்ப்பது வாய், நலம் வாய்ப்பது வாய்,
நாமமு முருவு மற் றே—மனம்
நா டரி தாய்ப் புந்தி தேடரி தாய்,
ஆ மெனும் பொரு ளனைத் தாய்,—வெறும்
அறி வுட னானந்த வியல் புடைத் தாய் (1)

நின் றிடும் பிரம மென்பார் ;—அந்த
நிர்மலப் பொருளினை நினைத்திடுவேன்,
நன் று செய் தவம் யோகம்—சிவ
ஞானமும் பக்தியு நணுகிடவே,
வென் றி கொள் சிவ சக்தி—எனை
மே வுறவே, இருள் சா வுறவே,
இன் றமிழ் நூ லிது தான்—புகழ்
எய்ந் தினி தா யென் று மிலகிடவே. (2)

## ஸரஸ்வதி வணக்கம்

வெள்ளைக் கமலத்திலே—அவள்
வீற்றிருப்பாள், புக ழேற்றிருப்பாள்,
கொள்ளைக் கனி யிசை தான்—நன்கு
கொட்டு நல் யாழினைக் கொண்டிருப்பாள்,
கள்ளைக் கட லமுதை—நிகர்
கண்ட தோர் பூந் தமிழ்க் கவி சொலவே
பிள்ளைப் பருவத்திலே—எனைப்
பேண வந்தா ளருள் பூண வந்தாள். (3)

வேதத் திரு விழியாள்,—அதில்
மிக்க பல் லுரை யெனுங் கருமை யிட்டாள்,
சீதக் கதிர் மதியே—நுதல்
சிந்தனையே குழ லென் றுடையாள்,
வாதத் தருக்க மெனுஞ்—செவி
வாய்ந்த நற் றுணி வெனுந் தோ டணிந்தாள்,
போத மென் னாசி யினாள்,—நலம்
பொங்கு பல் சாத்திர வா யுடையாள், (4)

கற்பனைத் தே னிதழாள்,—சுவைக்
காவிய மெனுமணிக் கொங்கையினாள்,
சிற்ப முதற் கலைகள்—பல
தே மலர்க் கர மெனத் திகழ்ந்திருப்பாள்,
சொற் படு நய மறிவார்—இசை
தோய்ந்திடத் தொகுப்பதின் சுவை யறிவார்
விற்பனத் தமிழ்ப் புலவோர்—அந்த
மேலவர் நா வெனு மலர்ப் பதத்தாள் : (5)

வாணியைச் சரண் புகுந்தேன்;—அருள்
வாக் களிப்பாளெனத் திட மிகுந்தேன்;
பேணிய பெருந் தவத்தாள்,—நிலம்
பெயரளவும் பெயர் பெய ராதாள்,
பூணியல் மார் பகத்தாள்,—ஐவர்
பூவை, திரௌபதி புகழ்க் கதையை
மா ணியல் தமிழ்ப் பாட்டால்—நான்
வகுத் திடக் கலைமகள் வாழ்த்துகவே. (6)

## முதலாவது—அழைப்புச் சருக்கம்

### ஹஸ்தினாபுரம்

அத்தின புர முண்டாம்;—இவ்
வவனியிலே யதற் கிணை யிலையாம்;
பத்தியில் வீதிக ளாம்;—வெள்ளைப்
பனி வரை போற் பல மாளிகை யாம்;
முத் தொளிர் மாடங்க ளாம்;—எங்கு
மொய்த் தளி சூழ் மலர்ச் சோலைகளாம்;—
நத் தியல் வாவிக ளாம்;—அங்கு
நாடு மி ரதி நிகர் தேவிகளாம்; (7)

அந்தணர் வீதிகளாம்;—மறை
யாதிகளாம் கலைச் சோதிகளாம்;
செந் தழல் வேள்விக ளாம்;—மிகச்
சீர் பெறுஞ் சாத்திரக் கேள்விக ளாம்;
மந்திர கீதங்க ளாம்;—தர்க்க
வாதங்க ளாம்; தவ நீதங்க ளாம்;

சிந்தையி லற முண்டாம்;—எனிற்
சேர்ந்திடுங் கலிசெயு மறமு முண்டாம். (8)

மெய்த் தவர் பல ருண்டாம்;—வெறும்
வேடங்கள் பூண்டவர் பலரு முண்டாம்;
உய்த் திடு சிவ ஞானங்—கனிந்
தோர்ந் திடு மேலவர் பல ருண் டாம்;
பொய்த்த விந்திர சாலம்—நிகர்
பூசையுங் கிரியையும் புலை நடையும்
கைத் திடு பொய்ம் மொழியும்—கொண்டு
கண் மயக்காற் பிழைப்போர் பல ராம். (9)

மாலைகள் புரண் டசையும்—பெரு
வரை யெனத் திரண்டவன் றோ ளுடையார்,
வேலையும் வாளினையும்—நெடு
வில்லையுந் தண்டையும் விரும்பிடுவார்,
காலையு மாலையினும்—பகை
காய்ந்திடு தொழில் பல பழகி வெம் போர்
நூலையுந் தேர்ச்சி கொள்வோர்,—கரி
நூற்றினைத் தனி நின்று நொறுக்க வல்லார், (10)

ஆரிய வேன் மறவர்,—புவி
யாளுமொர் கடுந் தொழி லினி துணர்ந்தோர்,
சீரியல் மதி முகத்தார்—மணித்
தே னிதழமு தென நுகர்ந்திடுவார்,
வேரி யங் கள் ளருந்தி—எங்கும்
வெம் மத யானைக ளெனத் திரிவார்,
பாரினி லிந்திரர் போல்—வளர்
பார்த்திவர் வீதிகள் பாடுவமே. (11)

நல் விசை முழக்கங்க ளாம் ;—பல
நாட்டிய மாதர் தம் பழக்கங்க ளாம் ;
தொல் லிசைக் காவியங்கள்—அருந்
தொழி லுணர் சிற்பர் செ யோவியங்கள்
கொல்லிசை வாரணங்கள்—கடுங்
குதிரைக ளொடு பெருந் தேர்க ளுண் டாம் ;
மல் லிசை போர்க ளுண்டாம் ;—திரள்
வாய்ந் திவை பார்த் திடு வோர்க ளுண்டாம். (12)

எண்ணரு கனி வகையும்—இவை
இலகி நல்லொளி தரும் பணி வகையும்,
தண் ணறுஞ் சாந்தங்களும்—மலர்த்
தார்களு மலர் விழிக் காந்தங்களும்
சுண்ணமு நறும் புகையும்—சுரர்
துய்ப்பதற் குரிய பல் பண்டங்களும்
உண்ண நற் கனி வகையும்—களி
யுவகையுங் கேளியு மோங்கினவே. (13)

சிவ னுடை நண்ப னென்பார்,—வட
திசைக் கதி பதி யள கேச னென்பார்,
அவனுடைப் பெருஞ் செல்வம்—இவர்
ஆவ ணந் தொறும் புகுந் திருப்பது வாம் ;
தவனுடை வணிகர்களும்—பல
தர னுடைத் தொழில் செயு மா சனமும்
எவ னுடைப் பயமுமிலா—தினி
திருந் திடுந் தன்மைய தெழி னகரே. (14)

## துரியோதனன் ஸபை

கன்னங் கரியது வாய்—அகல்
காட்சிய தாய் மிகு மாட்சிய தாய்
துன்னற் கினியது வாய்—நல்ல
சுவைதரு நீருடை யமுனையெனும்
வன்னத் திரு நதியின்—பொன்
மருங்கிடைத் திகழ்ந்த வம் மணிநகரில்,
மன்னவர் தங் கோமான்—புகழ்
வா ளரவக் கொடி யுயர்த்து நின்றான். (15)

துரியோதனப் பெயரான்,—நெஞ்சத்
துணி வுடையான், முடி பணி வறியான்,
'கரி யோ ராயிரத்தின்—வலி
காட்டிடுவோ ன்'என் றக் கவிஞர்பிரான்
பெரி யோன் வேத முனி—அன்று
பேசிடும் படி திகழ் தோள் வலி யோன்,
உரியோர் தாமெனினும்—பகைக்
குரியோர் தமக்கு வெந் தீ யனையான், (16)

தந்தை சொல் நெறிப்படியே,—இந்தத்
தடந் தோள் மன்னவ னரசிருந்தான்.
மந்திர முணர் பெரியோர்—பலர்
வாய்ந்திருந்தா ரவன் சபை தனிலே,
அந்த மில் புகழுடையான்,—அந்த
ஆரிய வீட்டுமன், அற மறிந்தோன்,
வந்தனை பெறுங் குரவோர்—பழ
மறைக்குல மறவர்க ளிருவ ரோடே, (17)

மெய்ந் நெறி யுணர் விதுரன்—இனி
வேறு பல் லமைச்சரும் விளங்கி நின்றார் ;
பொய்ந் நெறித் தம்பியரும்—அந்தப்
புலை நடைச் சகுனியும் புற மிருந்தார் ;
மைந் நெறி வான் கொடை யான்,—உயர்
மானமும் வீ ரமு மதியு முளோன்,
உய்ந் நெறி யறியா தான்—இறைக்
குயிர் நிகர் கன்னனு முட னிருந்தான். (18)

## துரியோதனன் பொறாமை

வேறு

என் ணிலாத பொருளின் குவையும்
யாங்கணுஞ் செலுஞ் சக்கர மாண்பும்
மன்னி வார்க்கும் பெற லரிதா மோர்
வார் கடற் பெருஞ் சேனையு மாங்கே
விண்ணி லிந்திரன் துய்ப்பன போன்று
வேண்டு மின்பமும் பெற்றவ னேனும்
கண் ணிலாத் திரிதாட்டி ரன் மைந்தன்
காய்ந்த நெஞ் சுடனெண் ணுவ கேளீர். (19)

வேறு

'பாண்டவர் முடி யுயர்த்தே—இந்தப்
பார் மிசை யுல விடு நாள் வரை, நான்
ஆண்ட தொ ரர சாமோ ?—என
தாண்மையும் புகழு மோர் பொரு ளாமோ ?

## பொருட்பெருமை

பொருளி லார்க்கிலை யிவ்வுல கென்ற நம்
புலவர் தம் மொழி பொய்ம்மொழி யன்று
பொருளிலார்க் கினமில்லை, துணையிலை, [காண்.
பொழு தெலாமிடர் வெள்ளம் வந்தெற்று
[மால்.
பொருளிலார் பொருள் செய்தல் முதற்கடன்.
போற்றிக் காசினுக் கேங்கி யுயிர்விடும்
மருளர் தம்மிசை யேபழி கூறுவன் ;
மாமகட்கிங் கொருன முரைத்திலன். (43)

அறமொன் றேதரு மெய்யின்ப மென்றநல்
லறிஞர் தம்மை யனுதினம் போற்றுவேன் ;
பிற விரும்பி யுலகினில் யான் பட்ட
பீழையெத்தனை கோடி ! நினைக்கவும்
திறனழிந்தென் மனமுடை வெய்துமால்.
தேசத்துள்ள இளைஞ ரறிமினோ !
அறமொன் றேதரு மெய்யின்பம் ; ஆதலால்
அறனையே துணையென்றுகொண் டுய்திரால்.
(44)

வெய்ய கர்மப் பயன்களினொந்து தான்
மெய்யுணர்ந் திடலாகு மென்றாக்கிய
தெய்வமே யிது நீதி யெனினு நின்
திருவருட்குப் பொருந்திய தாகுமோ ?

ஐயகோ! சிறு புன்மை விளங்குமுன்,
ஆவியைத் துயருறல் வேண்டுமே!
பையப்பைய வோராமை குன்றே றல்போற்
பாருளோர் நுண்மை கண்டிவ ணுய்வரால்.
(45)

தந்தை போயினன், பாழ்மிடி சூழ்ந்தது;
தரணி மீதினி லஞ்சலென் பாரிலர்;
சிந்தையிற் றெளி வில்லை; உடலினில்
திறனு மில்லை; உரனுளத்தில்லை யால்;
மந்தர்பாற் பொருள் போக்கிப் பயின்றதோர்
மடமைக் கல்வியில் மண்ணுமோர் பயனிலை.
எந்த மார்க்கமுந் தோற்றில தென் செய்கேன்?
என் பிறந்தன னித்துயர் நாட்டிலே? (46)

முடிவுரை

உலகெலாமொர் பெருங் கனவஃதுளே
யுண்டுறங்கி யிடர்செய்து செத்திடும்
கலக மானிடப் பூச்சிகள் வாழ்க்கை யோர்
கனவினுங் கனவாகு மிதற்கு நான்
பல நினைந்து வருந்தி யிங்கென் பயன்?
பண்டு போனதை யெண்ணி யென்னாவது?
சில தினங்க ளிருந்து மறைவதிற்
சிந்தை செய்தவன் செத்திடுவானடா! (47)

ஞான முந் துறவும் பெற்றிலாதவர்
நானிலத்துத் துயரன்றிக் காண்கிலர்

போன தற்கு வருந்திலன். மெய்த்தவப்
புலமையோனது வானத் தொளிருமோர்
மீனை நாடி வளைத்திடத் தூண்டிலை
வீச லொக்கு மெனலை மறக்கிலேன்.
ஆன தாவதனைத்தையுஞ் செய்வதோர்
அன்னையே! இனி யேனு மருள்வையால்.
(48)

வேறு

அறிவிலே தெளிவு, நெஞ்சிலே யுறுதி,
அகத்திலே யன்பினோர் வெள்ளம்,
பொறிகளின் மீது தனியர சாணை,
பொழுதெலா நினதுபே ரருளின்
நெறியிலே நாட்டம், கரும யோகத்தி
னிலைத்திட லென்றிவை யருளாய்,
குறிகுண மேதுமில்ல தாயனைத்தாய்க்
குலவிடு தனிப்பரம் பொருளே! (49)

---

# 2. கவிதா தேவி அருள் வேண்டல்

வாராய்! கவிதையாம் மணிப்பெயர்க் காதலி!
பன்னாள் பன்மதி ஆண்டு பல கழிந்தன,
நின்னருள் வதன நானேருறக் கண்டே.
அந்த நாள் நீ யெனை யடிமையாக் கொள, யாம்
மானிடர் குழாத்தின் மறைவுறத் தனியிருந்

தெண்ணிலா வின்பத் திருங் கடற் றிளைத்தோம் ;
கலந்து யாம் பொழிலிடைக் களித்த வன்னாட்களிற்
பூம் பொழில் குயில்களி னின் குரல் போன்ற
தீங்குர லுடைத்தோர் புள்ளினைத் தெரிந்திலேன் ;
மலரினத் துன்றன் வாள் விழி யொப்ப
நிலவிய தொன்றினை நோக்கிலேன் ; குளிர் புனற்
சுனைகளி லுன் மணிச் சொற்கள் போற் றண்ணிய
நீருடைத் தறிகிலேன் ; நின்னொடு தமியனாய்
நீயே யுயிரெனத் தெய்வமும் நீயென
நின்னையே பேணி நெடுநாள் போக்கினேன்.
வானகத் தமுத மடுத்திடும் போழ்து
மற்றதனிடையோர் வஞ்சகக் கொடுமுள்
வீழ்த்திடைத் தொண்டையில் வேதனை செய்தென
நின்னொடு களித்து நினைவிழந் திருந்த
எனைத் துயர்ப் படுத்த வந்தெய்திய துலகிற்
கொடியன யாவுளுங் கொடியதா மிடிமை.
அடி நா முள்ளினை அயல் சிறிதேகிக்
களைந்து பின் வந்து காண் பொழுது, ஐயகோ!
மறைந்தது தெய்வ மருந்துடைப் பொற்குடம்.
மிடிமை நோய் தீர்ப்பான் வினர் தம் முலகப்
புன் தொழில் ஒன்று போற்றுது மென்பான்
தென்றிசைக் கண்ணொரு சிற்றூர்க் கிறைவனாந்
திருந்திய வொருவனைத் துணையெனப் புகுந்தவன்
பணிசெய விசைந்தேன். பதகி நீ யென்னைப்
பிரிந்து மற்றகன் றனை. பேசொணா தின்னருள்
இன்பமத் தனையு மிழந்து நானுழன்றேன்.

சின்னாள் கழிந்தபின்—யாதெனச் செப்புகேன் !
நின்னொடு வாழ்ந்த நினைப்புமே தேய்ந்தது.
கதையிலோர் முனிவன் கடியதாஞ் சாப
விளைவினாற் பன்றியா வீழ்ந்திடு முன்னர்த்
தன்மகனிடை 'என்றனய நீ யான் புலைப்
பன்றியாம் போது பார்த்து நில்லாதே !
விரைவிலோர் வாள்கொடு வெறுப்புடை யவ்வுடல்
துணித்தெனைக் கொன்று தொலைத்தலுன் கடனும்.
பாவமிங்கில்லை யென் பணிப்பிதஃ தாகலின் !'
தாதை சொற் கிளைஞன் தளர்வொடு மிணங்கினன்.
முனிவனும் பன்றியா முடிந்தபின், மைந்தன்
முன்னவன் கூறிய மொழியினை நினைந்தும்;
இரும்புகழ் முனிவனுக் கிழியதா மிவ்வுடல்
அமைந்தது கண்டு நெஞ் சுழன்றிடல் கொண்டும்,
வாள் கொடு பன்றியை மாய்த்திட லுற்றனன்.
ஆயிடை மற்றவ் வருந்தவப் பன்றி
யினையது கூறும் : "ஏடா ! நிற்க !
நிற்க ! நிற்க ! முன்னர்யா நினைந்தவா
றத்துணை துன்புடைத்தன்றிவ் வாழ்க்கை.
காற்றும் புனலுங் கடிப்புற் கிழங்கும்
இனைய பல்லின்ப மிதன்கணே யுளவாம் ;
ஆறேழ் திங்கள் அகன்றபின் வருதியேற்
பின்னெனைக் கோறலாம்." பீழை யோ டிவ்வுரை
செவியுறீஇ முடிசாய்த் திளையவன் சென்றனன்.
திங்கள் பல போயபின், முனி மகன் சென்று
தாதைப் பன்றியோர் தடத்திடைப் பெடையொடும்

போய்த்தினம் பலவொடு மன்பினிற் பொருந்தி
யாடல் கண்ட யிந்திரனன். ஆப்பொருள் தருகுசென்று
" எந்தாய்! எந்தாய்! யாதிதோ மற்றிது!
வேத நூலறிந்த மேதகு முனிவரர்
போற்றிட வாழ்ந்தநின் புகழ்க்கிது சாலுமோ?"
எனப் பல கூறி யிரங்கினன்; பின்னர்
வாள்கொடு பன்றியை மாய்த்திடல் விழைந்தான்.
ஆயிடை முனிவ னகம்பதைத் துரைக்கும்;
'செல்லடா! செல்கத் தீக்குணத் திழிஞ!
எனக் கிவ்வாழ்க்கை யின்புடைத் தேயாம்:
நினக்கி திற்றுன்ப மெழுமேற் சென்றவ்
வாளினின் னெஞ்சை வகுத்து நீ மடிக"
என்றிது கூறி யிருந்த வப் பன்றிதன்
இனத்தொடு மோடி யின்னுயிர் காத்தது.
இன்னது கண்ட இளையவன் கருதும்:
" ஆவா! மானிடர் அருமையின் வீழ்ந்து
புன்னிலை யெய்திய போழ்தினி னெடுங்காற்
றெருமரு கின்றிலர். சில பகல் கழிந்தபின்
புதியதா நீசப் பொய்ம்மை கொள் வாழ்வில்
விருப்புடையவராய் வேறுதா மென்றும்
அறிந்தில ரேபோன் றதிற் களிக்கின்றார்.
என் சொல்கேன் மாயையி னெவ்வாறும் வஞ்சம்."
திமிங்கில வுடலும் சிறிய புன்மதியும்
ஓரேழ் பெண்டிரு முடையதோர் வேந்தன்
தன் பணிக் கிசைந்தென் தருக்கெலா மழிந்து
வாழ்ந்தனன் கதையின் முனிபோல் வாழ்க்கை!

## 3. மது

போகி

பச்சை முந்திரித் தேம்பழங் கொன்று
பாட்டுப் பாடிநற் சாறு பிழிந்தே
இச்சை தீர மதுவடித் துண்போம்;
இஃது தீதென் றிடையர்கள் சொல்லும்
கொச்சைப் பேச்சிற்கை கொட்டி நகைப்போம்;
கொஞ்சு மாதருங் கூட்டுறுங் கள்ளும்
இச்ச கத்தினில் இன்பங்க ளன்றோ?
இவற்றி னல்லின்பம் வேறொன்று முண்டோ? (1)

யோகி

பச்சை முந்திரி யன்ன துலகம்;
பாட்டுப் பாடல் சிவக்களி எய்தல்;
இச்சை தீர உலகினைக் கொல்வோம்;
இனிய சாறு சிவமதை உண்போம்;
கொச்சை மாக்களுக் கிஃதெளி தாமோ?
கொஞ்சு மாதொரு குண்டலி சக்தி
இச்ச கத்திலி வையின்ப மன்றோ?
இவற்றி னல்லின்பம் வேறுள தாமோ? (2)

போகி

வெற்றி கொள்ளும் படைகள் நடத்தி
வேந்தர் தம்முட் பெரும்புகழ் எய்தி
ஒற்றை வெள்ளைக் கவிகை உயர்த்தே
உலகம் அஞ்சிப் பணிந்திட வாழ்வோம்;

மற்று நறுங்கமழ் மென்மலர் மாலை
தோளின் மீதுறப் பெண்கள் குலாவச்
சுற்றும் நெஞ்சம் கவலுத லின்றித்
தரணி மீதில் மறுவுமின்றி வாழ்வோம். (3)

யோகி

வெற்றி ஐந்து புலன்மிசைக் கொள்வோம்;
வீழ்ந்து நாளிடை வையகம் போற்றும்;
ஒற்றை வெள்ளைக் கவிகை மெய்ஞ் ஞானம்
உண்மை வேந்தர் சிவநிலை கண்டார்;
மற்ற வர்தமுட் சீர்பெற வாழ்வோம்;
வண்ம லர்நறு மாலை தெளிவாம்;
சுற்றி மார்பில் அருள்மது வுண்டே
தோகை சக்தியொ டின்புற்று வாழ்வோம். (4)

போகி

நல்ல கீதத் தொழிலுணர் பாணர்
நடனம் வல்ல நகைமுக மாதர்
அல்லல் போக இவருடன் கூடி
ஆடி யாடிக் களித்தின்பங் கொள்வோம்;
சொல்ல நாவு கனியுத டாநற்
சுதியி லொத்துத் துணையொடும் பாடி
புல்லும் மார்பினோ டாடிக் குதிக்கும்
போகம் போலொரு போகமிங் குண்டோ? (5)

யோகி

நல்ல கீதஞ் சிவத்தனி நாதம்,
நடன ஞானியர் சிற்சபை யாட்டம்;

அல்லல் போக இவருடன் சேர்ந்தே
    ஆடியாடிப் பெருங்களி கொள்வோம்;
சொல்ல நாவில் இனிக்குதடா! வான்
    சுழலு மண்டத் திரளின் சுதியிற்
செல்லும் பண்ணொடு சிற்சபை யாடும்
    செல்வம்போலொரு செல்வமிங் குண்டோ? (6)

ஞானி

மாதரோடு மயங்கிக் களித்தும்
    மதுர நல்லிசை பாடிக் குதித்தும்
காதல் செய்தும் பெறும் பல இன்பம்,
    கள்ளில் இன்பம், கலைகளின் இன்பம்,
பூதலத்தினை ஆள்வதில் இன்பம்,
    —பொய்மை யல்ல—இவ் வின்பங்க ளெல்லாம்
யாதுஞ் சக்தி இயல்பெனக் கண்டோம்.
    இனைய துய்ப்பம் இதய மகிழ்ந்தே. (7)

இன்பந் துன்பம் அனைத்தும் கலந்தே
    இச்சகத்தின் இயல்வலியாகி
முன்பு பின்பல தாகியெந் நாளும்
    மூண்டு செல்லும் பராசக்தி யோடே
அன்பில் ஒன்றிப் பெருஞ்சிவ யோகத்
    தறிவு தன்னில் ஒருப்பட்டு நிற்பார்,
துன்பு நேரினும் இன்பெனக் கொள்வார்,
    துய்ப்பர் இன்பம் மிகச்சுவை கொண்டே. (8)

இச்சகத்தொர் பொருளையுந் தீரர்
    இல்லை யென்று வருந்துவ தில்லை;

நச்சி நச்சி உளத்திற் கொண்டு கொண்டு
  நாணி லத்தின்பம் நாடுவ தில்லை;
பிச்சை கேட்பதுமில்லை; இன் பத்திற்
  பித்துக் கொண்டு மயங்குவ தில்லை;
துச்ச மென்று சுகங்களைக் கொள்ளச்
  சொல்லு மூடர்சொற் கேட்பதும் இல்லை. (9)

தீது நேர்ந்திடின் அஞ்சுவ தில்லை;
  தேறு நெஞ்சினொ டேசிவங் கண்டோர்
மாதர் இன்பம் முதலியவெல்லாம்
  வையகத்துச் சிவன் வைத்த வென்றே
ஆதரித்தவை முற்றிலுங் கொள்வார்;
  அங்குமிங்குமொன் றாமெனத் தேர்வார்;
யாதுமெங்கள் சிவன்திருக் கேளி;
  இன்பம் யாவும் அவனுடை இன்பம். (10)

வேத மந்திர நாதம் ஒருபால்,
  வேயி னின்குழல் மெல்லொலி ஓர்பால்,
காதன் மாதரொ டாடல் ஒருபால்,
  களவெம் போரிடை வென்றிடல் ஓர்பால்,
போத நல்வெறி துய்த்திடல் ஓர்பால்,
  பொசியுங் கள்வெறி துய்த்தல்மற் றோர்பால்;
ஏதெ லாநமக் கின்புற நிற்கும்
  எங்கள் தாய்அருட் பாலது வன்றோ. (11)

## ஸங்கீர்த்தனம்

மூவரும் சேர்ந்து பாடுவது

மதுரமக்கு, மதுரமக்கு, மதுரமக்கு விண்ணெலாம்,
மதுரமிக்க ஹரிநமக்கு, மதுவெனக் கதித்தலால்,

மதுநமக்கு மதியுநாளும், மதுநமக்கு வானமீன்,
மதுநமக்கு மண்ணுநீரும், மதுநமக்கு மலையெலாம்,
மதுநமக்கோர் தோல்விவெற்றி, மதுநமக்கு வினை
[யெலாம்.
மதுநமக்கு மாதரின்பம், மதுநமக்கு மதுவகை,
மதுநமக்கு மதிநமக்கு, மதுமனத்தொ டாவியும் -
மதுரமிக்க சிவநமக்கு மதுவெனக் கதித்தலால். (12)

---

## 4. காலனுக் குரைத்தல்

காலா, உனைநான் சிறுபுல்லென மதிக்கிறேன்; என்றன்
காலருகேவாடா ! சற்றே உனை மிதிக்கிறேன்—அட
(காலா)
வேலாயுத விருதினை மனதிற் பதிக்கிறேன்—நல்ல
வேதாந்த முரைத்த ஞானியர்தமை யெண்ணித்
துதிக்கிறேன்—ஆதி
மூலா வென்று கதறிய யானையைக் காக்கவே-நின்றன்
முதலைக்கு நேர்ந்ததை மறந்தாயோ? கெட்ட மூடனே-
அட (காலா)
ஆலால முண்டவனடி சரணென்ற மார்க்கண்டன்—
தனதாவி கவரப்போய் நீ பட்ட பாட்டினை யறிகு
[வேன்—இங்கு
நாராயணனுக நின் முன்னே உதிக்கிறேன்—அட
(காலா)

---

# ௫. காதற்பாட்டுகள்

## காலைப்பொழுது

காலைப் பொழுதினிலே கண் விழித்து
மேனிலை மேல்
மேலைச் சுடர் வானை நோக்கி நின்றோம்
விண்ணகத்தே. (1)

கீழ்த் திசையில் ஞாயிறுதான் கேடில்
சுடர் விடுத்தான் ;
பார்த்த வெளி யெல்லாம் பக
லொளியாய் மின்னிற்றே. (2)

தென்னை மரத்தின் கிளை யிடையே
தென்றல் போய்
மன்னப் பருந்தினுக்கு மாலை யிட்டுச்
சென்றதுவே. (3)

தென்னை மரக்கிளைமேற் சிந்தனையோ
டோர் காகம்
வன்ன முற வீற்றிருந்து வானை
முத்த மிட்டதுவே. (4)

தென்னைப் பசுங் கீற்றைக் கொத்திச்
சிறு காக்கை
பின்னு நின்றதென் கடலை நோக்கி
விழித்ததுவே. (5)

வன்னச் சுடர். மிகுந்த வானகத்தே
தென் றிசையில்

கன்னங் கருங்காகக் கூட்டம் வரக்
கண்ட தங்கே. (6)

கூட்டத்தைக் கண்டஙோ கும்பிட்டே
தன்னரு கோர்
பாட்டுக் குருவிதனைப் பார்த்து
நகைத்ததுவே. (7)

சின்னக் குருவி சிரிப்புடனே
வந்தாங்கு
கன்னங் கருங்காக்கை கண்ணெதிரே
யோர் கிளை மேல் (8)

வீற்றிருந்தே, "கிக் கிக்கி ; காக்காய்,
நீ விண்ணிடையே
போற்றி யெதை நோக்குகிறாய்? கூட்ட
மங்கு போவ தென்னே?" (9)

என்ற வுடனே காக்கை :—"என் தோழா,
நீ கேளாய்,
மன்று தனைக் கண்டே மன மகிழ்ந்து
போற்றுகிறேன்" (10)

என்று சொல்லிக் காக்கை யிருக்கையிலே
ஆங்கணோர்
மின் றிகழும் பச்சைக் கிளி வந்து
வீற்றிருந்தே:— (11)

"நட்புக் குருவியே, ஞாயிற்றின்
வெயிலில்

கட் புலனுக் கெல்லாம் களியாகத்
தோன்றுகையில், (12)

நும்மை மகிழ்ச்சியுடன் நோக்கி
யிங்கு வந்திட்டேன் ;
அம்மவோ ! காகப் பெருங் கூட்ட
மமைந்ததென்னே ?" (13)

என்று வினவக் குருவி தா
னிமைத்துரைக்கும் :—
" நன்று நீ கேட்டாய், பசுங்கிளியே,
நானு மிங்கு (14)

மற்றதனை யோர்ந்திடவே காக்கை யிடம்
வந்திட்டேன்.
கற்றறிந்த காக்காய், கழறுக நீ "
என்றதுவே. (15)

அப்போது காக்கை, :—" அருமை யுள்ள
தோழர்களே,
செப்புவேன் கேளீர் ; சில நாளாக்
காக்கை யுள்ளே (16)

நேர்ந்த புதுமைகளை நீர் கேட்
டறியீரோ ?
சார்ந்து நின்ற கூட்டமங்கு சாலையின்
மேற் கண்டீரே ? (17)

மற் றந்தக் கூட்டத்து மன்னவனைக்
காணீரே ?

கற்றறிந்த ஞானி கடவுளையே
நேராவான் ; (18)

ஏழுநாள் முன்னே இறை மகுடந்
தான் புனைந்தான்.
வாழி யவன் எங்கள் வருத்த மெலாம்
போக்கி விட்டான். (19)

சோற்றுக்குப் பஞ்சமில்லை ; போரில்லை ;
துன்ப மில்லை.
போற்றற் குரியான் புது மன்னன்,
காணீரோ ?" (20)

என் றுரைத்துக் காக்கை யிருக்கையிலே
அன்ன மொன்று
தென் றிசையினின்று சிரிப்புடனே
வந்ததங்கே, (21)

அன்ன மந்தத் தென்னை யருகினி
லோர் மாட மிசை
வன்ன முற வீற்றிருந்து:—"வாழ்க,
துணைவரே ! (22)

காலை யிள வெயிலிற் காண்ப தெலா
மின்ப மன்றோ ?
சால நுமைக் கண்டு களித்தேன்
சருவினீர் (23)

ஏ துரைகள் பேசி யிருக்கின்றீர் ?"
என்றிடவே,

போதமுள்ள காக்கை புகன்ற தந்தச்
செய்தியெல்லாம். (24)

அன்னமிது கேட்டு மகிழ்ந் துரைக்கும் :—
"ஆங் காணும்!
மன்னர் அறம் புரிந்தால், வைய மெல்லாம்
மாண்பு பெறும். (25)

ஒற்றுமையால் மேன்மை யுண்டாம்;
ஒன்றை யொன்று தான் பிழைத்தல்
குற்றமென்று கண்டால், குறையுண்டோ
வாழ்வினுக்கே!" (26)

என்று சொல்லி யன்னம் பறந் தாங்கே
ஏகிற்றால்.
மன்று கலைத்து மறைந்தன வப் புட்
களெல்லாம். (27)

காலைப் பொழுதினிலே கண்டிருந்தோம்
நாங்க ளிதை ;
ஞால மறிந் திடவே நாங்களிதைப்
பாட்டிசைத்தோம். (28)

---

## 6. அந்திப்பொழுது

1. கா வென்று கத்திடுங் காக்கை—என்றன்
கண்ணுக் கினிய கரு நிறக் காக்கை.
மேவிப் பல கிளை மீதில்—இங்கு
விண்ணிடை யந்திப் பொழுதினைக் கண்டே

கூவித் திரியுஞ் சிலவே ;—சில
கூட்டங்கள் கூடித் திசை தொறும் போகும்.
தேவி பராசக்தி யன்னை—விண்ணிற்
செவ்வொளிகாட்டிப் பிறை தலைக்கொண்டாள்.

2. தென்னை மரக் கிளை மீதில்—அங் கோர்
செல்வப் பசுங்கிளி கீச்சிட்டுப் பாயும்.
சின்னஞ் சிறிய குருவி—அது
'ஜிவ்' வென்று விண்ணிடை யூசலிட் டேகும்.
மன்னப் பருந்தொ ரிரண்டு—மெல்ல
வட்டமிட்டுப் பின் னெடுந்தொலை போகும்.
பின்னர் தெருவி லொர் சேவல்—அதன்
பேச்சினிலே "சக்தி வேல்" என்று கூவும்.

3. செவ் வொளி வானில் மறைந்தே—இளந்
தே நில வெங்கும் பொழிந்தது கண்டீர்.
இவ் வளவான பொழுதில்—அவள்
ஏறிவந்தே யுச்சி மாடத்தின் மீது,
கொவ்வை யிதழ் நகை வீச,—விழிக்
கோணத்தைக் கொண்டு நிலவைப் பிடித்தாள.
செவ்விது, செவ்விது, பெண்மை !—ஆ !
செவ்விது, செவ்விது, செவ்விது, காதல்.

4. காதலினா லுயிர் தோன்றும் ;—இங்கு
காதலினா லுயிர் வீரத்தி லேறும் ;
காதலினா லறி வெய்தும்,—இங்கு
காதல் கவிதைப் பயிரை வளர்க்கும் ;

ஆதலினு லவள் கையைப்—பற்றி
அற்புத மென்றிரு கண்ணிடை யொற்றி
வேதனை யின்றி யிருந்தேன் ;—அவள்
வீணைக் குரலி லோர் பாட்டிசைத் திட்டாள்.

காதலியின் பாட்டு

கோல மிட்டு விளக்கினை யேற்றிக்
கூடி நின்று பராசக்தி முன்னே
ஓல மிட்டுப் புகழ்ச்சிகள் சொல்வார்
உண்மை கண்டிலர் வையத்து மாக்கள் ;
ஞால முற்றும் பராசக்தி தோற்றம்.
ஞாலமென்ற விளக்கினை யேற்றிக்
கால முற்றுந் தொழுதிடல் வேண்டும்,
காத லென்ப தோர் கோயிலின் கண்ணே.

---

# 7. வேய்ங்குழல்

ராகம்-ஹிந்துஸ்தான் தோடி. ஏகதாளம்.

எங்கிருந்து வருகுவதோ—ஒலி
யாவர் செய்கு வதோ ?—அடி தோழி.

(1) குன்றி னின்றும் வருகுவதோ—மரக்
கொம்பி னின்றும் வருகுவதோ—வெளி
மன்றி னின்று வருகுவதோ—என்றன்
மதி மருண்டிடச் செய்குதடீ—(இஃதெங்கிருந்து)

(2) அலை யொலித்திடும் தெய்வ—யமுனை
யாற்றி னின்றும் ஒலிப்பதுவோ—அன்றி

இலை யொலிக்கும் பொழிலிடை நின்றும்
எழுவதோ இஃதின்ன முதைப்போல்-(எங்கிருந்து)

(3) காட்டி னின்றும் வருகுவதோ—நிலாக்
காற்றைக் கொண்டு தருகுவதோ—வெளி
நாட்டினின்று மித்தென்றல் கொணர்வதோ
நாதமிஃதெனுயிரை யுருக்குதே— (எங்கிருந்து)

(4) பறவையேது மொன்றுள்ளதுவோ—இங்ஙன்
பாடுமோ அமுதக்கனற் பாட்டு
மறைவினின்றுங் கின்னர ராதியர்
வாத்தியத்தினிசை யிதுவோ—அடி (எங்கிருந்து)

(5) கண்ணனூதிடும் வேய்ங்குழல் தானடீ
காதிலே யமுதுள்ளத்தில் நஞ்சு
பண்ணன்று மடி பாவையர் வாடப்
பாடி யெய்திடும் அம்படி தோழி (எங்கிருந்து)

---

## 8. ராதைப் பாட்டு

இராகம்-கமாஸ். தாளம்-ஆதி.

பல்லவி

தேகி முதம் தேகி ஸ்ரீ ராதே, ராதே.

சரணங்கள்

ராக ஸமுத்ரஜாம்ருதே ராதே, ராதே.
ராஜ்ஞீ மண்டல ரத்ந ராதே, ராதே.

போக ரதி கோடி துல்ய ராதே, ராதே (ஜய, ஜய)
பூதேவி தப: பல ராதே, ராதே. (தேகி)
வேத மஹா மந்த்ர ரஸ ராதே, ராதே!
வேத வித்யா விலாஸினி ஸ்ரீ ராதே, ராதே!
ஆதி பரா சக்தி ரூப ராதே, ராதே!
அத் யத்புத ச்ருங்காரமய ராதே, ராதே. (தேகி)

தமிழ்க் கண்ணிகள்

காதலெனுந் தீவினிலே, ராதே, ராதே! (அன்று)
கண்டெடுத்த பொன்மணியே, ராதே, ராதே.
காத லெனுஞ் சோலையிலே ராதே, ராதே, (நின்ற)
கற்பகமாம் பூந் தருவே ராதே, ராதே.
மாதரசே! செல்வப் பெண்ணே, ராதே, ராதே, (உயர்)
வானவர்க ளின்ப வாழ்வே, ராதே, ராதே. (தேகி)

---

# 9. வள்ளிப் பாட்டு (1)

பல்லவி

எந்த நேரமும் நின் மையல் ஏறுதடீ,
குற வள்ளி! சிறு கள்ளி!

சரணங்கள்

1. (இந்த) நேரத்திலே மலை வாரத்திலே நதி
யோரத்திலே யுனைக் கூடி—நின்றன்
வீரத் தமிழ்ச் சொல்லின் ஸாரத்திலே மன
மிக்க மகிழ்ச்சி கொண்டாடி—குழல்

பாரத்திலே இத ழீரத்திலே, முலேயோரத்திலே
யன்பு சூடி—நெஞ்சம்
ஆரத் தழுவி யமர நிலே பெற்றதன்
பயனே யின்று காண்பேன்.
(எந்த நேரமும்)

2. வெள்ளே நிலா விங்கு வானத்தை மூடி
விரிந்து பொழிவது கண்டாய்—ஒளிக்
கொள்ளேயிலே யுனேக் கூடி முயங்கிக்
குறிப்பினிலே யொன்றுபட்டு—நின்றன்
பிள்ளேக்கிளி மென் குதலேயிலே மனம்
பின்ன மறச் செல்லவிட்டு—அடி
தெள்ளிய ஞானப் பெருஞ் செல்வமே!
நினேச் சேர விரும்பினன், கண்டாய்!
(எந்த நேரமும்)

3. வட்டங்க ளிட்டுங் குளமகலாத
மணிப் பெருந் தெப்பத்தைப்போலே—நினே
விட்டு விட்டுப் பல லீலேகள் செய்து நின்
மேனி தனே விட லின்றி—
எட்டுத் திசையு மொளிர்ந்திடுங் காலே யிரவியைப்
போன்ற முகத்தாய்!—முத்த
மிட்டுப் பல முத்த மிட்டுப் பல முத்த மிட்டுனேச்
சேர்ந்திட வந்தேன். (எந்த நேரமும்)

# 10. வள்ளிப் பாட்டு (2)

ராகம்-காஹரப்பிரியை. தாளம்-ஆதி.

பல்லவி

உனையே மயல் கொண்டேன்,—வள்ளீ!
உவமையி லரியாய், உயிரினு மினியாய்!
(உனையே)

சரணம்

எனை யாள்வாய், வள்ளீ, வள்ளீ!
இள மயிலே, என் இதய மலர் வாழ்வே,
கனியே, சுவை யுறு தேனே,
கலவியிலே அமுதனையாய்!—(கலவியிலே)
தனியே, ஞான விழியாய்! நிலவினில்
நினை மருவி, வள்ளீ, வள்ளீ!
நீ யாகிட வே வந்தேன்.

---

# 11. சித்தாந்தச் சாமி கோயில்

1. சித்தாந்தச் சாமி திருக் கோயில் வாயிலில்
தீப வொளி யுண்டாம்;—பெண்ணே!
முத்தாந்த வீதி முழுதையுங் காட்டிட
மூண்ட திருச் சுடராம்;—பெண்ணே!

2. உள்ளத் தழுக்கும் உடலிற் குறைகளும்
ஓட்ட வருஞ் சுடராம்;—பெண்ணே!

கள்ளத் தனங்க ளனைத்தும் வெளிப்படக்
காட்ட வருஞ் சுடராம் ;—பெண்ணே !
3. தோன்று முயிர்க ளனைத்து நன் றென்பது
தோற்ற முறுஞ் சுடராம் ;—பெண்ணே !
மூன்று வகைப்படு கால நன்றென்பதை
முன்னரிடுஞ் சுடராம் ;—பெண்ணே !
4. பட்டினந் தன்னிலும் பாக்க நன்றென்பதை
பார்க்க வொளிர் சுடராம் ;—பெண்ணே !
கட்டு மனையிலுங் கோயில் நன்றென்பதைக்
காண வொளிர் சுடராம் ;—பெண்ணே !

---

## 12. புயற்காற்று

நளஹு கார்த்திகை மீ 8 புதன்கிழமை இரவு

ஒரு கணவனும் மனைவியும்

மனைவி :—காற்றடிக்குது, கடல் குமுறுது,
கண்ணை விழிப்பாய், நாயகனே !
தூற்றல் கதவு சாளர மெல்லாந்
தொளைத்தடிக்குது, பள்ளியிலே.
கணவன் :—வானஞ் சினக்குது ; வைய நடுங்குது ;
வாழி பராசக்தி காத்திடவே !
தீனக் குழந்தைகள் துன்பப்படாதிங்கு,
தேவி, அருள் செய்ய வேண்டுகின்றோம்.
மனைவி :—நேற்றிருந்தோமந்த வீட்டினிலே, இந்த
நேரமிருந்தா லென்படுவோம் ?
காற்றென வந்தது கூற்றமிங்கே, நம்மைக்
காத்தது தெய்வ வலிமையன்றோ ?

---

# 13. பிழைத்த தென்னந் தோப்பு

1. வயலிடை யினிலே—செழுநீர்
மடுக் கரை யினிலே.
அய லெவரு மில்லை,—தனியே
ஆறுதல் கொள்ள வந்தேன்.

2. காற்றடித் ததிலே,—மரங்கள்
கணக்கிடத் தகுமோ ?—
நாற்றினைப்போலே சிதறி
நாடெங்கும் வீழ்ந்தனவே.

3. சிறிய திட்டையிலே—உளதோர்
தென்னஞ் சிறுதோப்பு—
வறியவ னுடைமை—அதனை
வாயு பொடிக்க வில்லை.

4. வீழ்ந்தன சிலவாம்—மரங்கள்
மீந்தன பலவாம் ;
வாழ்ந்திருக்க வென்றே—அதனை
வாயு பொறுத்து விட்டான்.

5. தனிமை கண்டதுண்டு ;—அதிலே
ஸார மிருக்கு தம்மா !
பனிதொலைக்கும் வெயில்,—அது தேம்
பாகு மதுர மன்றோ ;

6. இரவி நின்றது காண்—விண்ணிலே
இன்ப வொளித் திரளாய் ;

பரவியெங்கணுமே—கதிர்கள்
பாடிக் களித்தனவே.

7. நின்ற மரத்திடையே—சிறிதோர்
நிழலினி லிருந்தேன்;
என்றுங் கவிதையிலே—நிலையாம்
இன்ப மறிந்து கொண்டேன்.

8. வாழ்க பராசக்தி!—நினையே
வாழ்த்திடுவோர் வாழ்வார்;
வாழ்க பராசக்தி!—இதையென்
வாக்கு மறவாதே!

---

## 14. மறவன் பாட்டு

1. மண்வெட்டிக் கூலிதின லாச்சே!—எங்கள்
வாள்வலியும் வேல்வலியும் போச்சே!
விண்முட்டிச் சென்ற புகழ் போச்சே!—இந்த
மேதினியில் கெட்ட பெய ராச்சே!

2. நாணிலகு வில்லினொடு தூணி—நல்ல
நாதமிகு சங்கொலியும் பேணி,
பூணிலகு திண்கதையும் கொண்டு, நாங்கள்
போர் செய்த காலமெல்லாம் பண்டு.

3. கன்னங் கரிய விருள் நேரம்—அதிற்
காற்றும் பெரு மழையும் சேரும்;
சின்னக் கரிய துணி யாலே—எங்கள்
தேகமெல்லாம் மூடி நரிபோலே,

4. ஏழை யெளியவர்கள் வீட்டில்—இந்த
ஈன வயிறு படும் பாட்டில்
கோழை யெளிக ளென்னவே—பொருள்
கொண்டு வந்து [illegible]

5. முன்னாளில் ஐயரெல்லாம் வேதம்—ஓதுவார்;
மூன்று மழை பெய்யுமடா மாதம்;
இந்நாளி லேபொய்மைப் பார்ப்பார்—இவர்
ஏது செய்துங் காசுபெறப் பார்ப்பார்.

6. பேராசைக் காரனடா பார்ப்பான்—ஆனால்
பெரியதுரை என்னிலுடல் வேர்ப்பான்,
யாரானாலுங் கொடுமை.... [illegible]
[illegible]

7. பிள்ளைக்குப் பூணூலா மென்பான்—நம்மைப்
பிச்சுப் பணங்கொ டெனத் தின்பான்
கொள்ளைக் கேசென்று [illegible]
[illegible]

8. சொல்லக் கொதிக்குதடா நெஞ்சம்—வெறுஞ்
சோற்றுக்கோ வந்ததிந்தப் பஞ்சம்?

9. நாயும் பிழைக்கு மிந்தப்—பிழைப்பு;
நாளெல்லாம் மற்றிதிலே உழைப்பு;
பாயும் கடிநாய்ப் போலீசுக்—காரப்
பார்ப்பானுக் குண்டிதிலே பீசு.

10. சோரந்தொழிலாக் கொள்வோமோ ?-முந்தைச்
சூரர் பெயரை அழிப்போமோ ?
வீர மறவர் நாமன்றோ ?—இந்த
வீண் வாழ்க்கை வாழ்வதினி நன்றோ ?



# 15. அக்கினிக் குஞ்சு

அக்கினிக் குஞ்சொன்று கண்டேன்;—அதை
அங்கொரு காட்டிலோர் பொந்திடை [வைத்தேன் ;
வெந்து தணிந்தது காடு ;—தழல்
வீரத்திற் குஞ்சென்று மூப்பென்று முண்டோ ?
தத்தரிகிட தத்தரிகிட தித்தோம்.



# 16. மழை

1. திக்குக்க ளெட்டுஞ் சிதறி—தக்கத்
தீம்தரிகிட தீம்தரிகிட தீம்தரிகிட தீம்தரிகிட
பக்க மலைகளுடைந்து—வெள்ளம்
பாயுது பாயுது பாயுது—தாம்தரிகிட
தக்கத் ததிங்கிட தித்தோம்—அண்டம்
சாயுது சாயுது சாயுது—பேய்கொண்டு
தக்கை யடிக்குது காற்று—தக்கத்
தாம்தரிகிட தாம்தரிகிட தாம்தரிகிட தாம்தரிகிட.

2. வெட்டி யடிக்குது மின்னல்,—கடல்
வீரத்திரை கொண்டு விண்ணையிடிக்குது ;

கொட்டி யிடிக்குது மேகம் ;—கூ
கூவென்று விண்ணைக்குடையுது காற்று ;
சட்டச்சட சட்டச்சட டட்டா—என்று
தாளங்கள் கொட்டிக் கனைக்குது வானம் ;
எட்டுத்திசையு மிடிய—மழை
எங்ஙனம் வந்ததடா, தம்பி வீரா !

3. அண்டங் குலுங்குது, தம்பி !—தலை
ஆயிரந் தூக்கிய சேடனும் பேய்போல்
மிண்டிக் குதித் திடுகின்றான் ;—திசை
வெற்புக் குதிக்குது ; வானத்துத் தேவர்
செண்டு புடைத்திடு கின்றார் ;—என்ன
தெய்விகக் காட்சியைக் கண் முன்பு
கண்டோம் !
கண்டோம், கண்டோம், கண்டோம்—இந்தக்
காலத்தின் கூத்தினைக் கண் முன்பு
கண்டோம் !

---

# 17. நிலாவும் வான்மீனும் காற்றும்

மனத்தை வாழ்த்துதல்

1. நிலாவையும் வானத்து மீனையும் காற்றையும்
நேர்ப்பட வைத்தாங்கே
குலாவு மமுதக் குழம்பைக் குடித்தொரு
கோல வெறி படைத்தோம் ;

உலாவு மனச்சிறு புள்ளினை யெங்கணும்
ஓட்டி மகிழ்ந்திடுவோம்;
பலாவின் கனிச்சுளை வண்டியி லோர் வண்டு
பாடுவதும் வியப்போ?

2. தாரகை யென்ற மணித்திரள் யாவையும்
சார்ந்திடப் போ மனமே,
ஈரச்சுவையதி லூறிவருமதில்
இன்புறுவாய் மனமே!
சீரவிருஞ்சுடர் மீனொடு வானத்துத்
திங்களையுஞ் சமைத்தே
ஓரழகாக விழுங்கிடு முள்ளத்தை
யொப்பதொர் செல்வமுண்டோ?

3. பன்றியைப் போலிங்கு மண்ணிடைச் சேற்றிற்
படுத்துப் புரளாதே
வென்றியை நாடியிவ் வானத்தி லோட
விரும்பி விரைந்திடுமே;
மூன்றிலி லோடுமொர் வண்டியைப் போலன்று
மூன்றுலகுஞ் சூழ்ந்தே
நன்று திரியும் விமானத்தைப் போலொரு
நல்ல மனம் படைத்தோம்.

4. தென்னையின் கீற்றுச் சலசல வென்றிடச்
செய்து வருங் காற்றே!
உன்னைக் குதிரை கொண் டேறித் திரியுமொ
ருள்ளம் படைத்துவிட்டோம்.
சின்னப்பறவையின் மெல்லொலி கொண்டிங்கு
சேர்ந்திடு நற் காற்றே!

மின்னல் விளக்கிற்கு வானகங் கொட்டுமிவ்
வெட்டொலி யேன் கொணர்ந்தாய் ?

5. மண்ணுலகத்து நல்லோசைகள் காற்றெனும்
வானவன் கொண்டுவந் தான் ;
பண்ணி லிசைத்தவ் வொலிக ளனைத்தையும்
பாடி மகிழ்ந்திடுவோம்.
நண்ணிவரு மணியோசையும், பின்னங்கு
நாய்கள் குலைப்பதுவும்,
எண்ணுமுன்னே 'யன்னக்காவடிப் பிச்சை'-
றேங்கிடுவான் குரலும், [யென்"

6. வீதிக் கதவை யடைப்பதுங் கீழ்த்திசை
விம்மிடுஞ் சங்கொலியும்,
வாதுகள் பேசிடு மாந்தர் குரலு
மதலை யழுங் குரலும்—
ஏதேது கொண்டு வருகுது காற்றிவை
யெண்ணி லகப்படுமோ ?
சீதக் கதிர்மதி மேற்சென்று பாய்ந்தங்கு
தேனுண்ணுவாய், மனமே !

---

# 18. சாதாரண வருஷத்துத் தூமகேது

திணையின்மீது பனை நின்றாங்கு
மணிச்சிறு மீன்மிசை வளர்வா லொளிதரக்
கீழ்த்திசை வெள்ளியைக் கேண்மை கொண்டிலகுந்
தூமகேதுச் சுடரே, வாராய். (1)

எண்ணில் பல் கோடி யோசனை யெல்லை
எண்ணிலா மென்மை யியன்றதோர் வாயுவாற்
புனைந்த நின்னொடு வால் போவதென்கின்றார். (2)

மண்ணகத்தினையும் வால் கொடு தீண்டி
ஏழையர்க் கேது மிடர் செயாதே நீ
போதி யென்கின்றார்; புதுமைகளாயிரம்
நினைக் குறித் தறிஞர் நிகழ்த்து கின்றனரால். (3)

பாரத நாட்டிற் பரவிய எம் மனோர்
நூற்கண மறந்து பன் னூருண்டாயின;
உனதியல் அன்னிய ருரைத்திடக் கேட்டே
தெரிந்தனம்; எம் முளே தெளிந்தவரீங்கிலை. (4)

வாராய், சுடரே! வார்த்தை சில கேட்பேன்:
தீயர்க்கெல்லாந் தீமைகள் விளைத்துத்
தொல் புவியதனைத் துயர்க் கடலாழ்த்தி நீ
போவை யென்கின்றார்; பொய்யோ, மெய்யோ? (5)

ஆதித்தலைவி யாணையின்படி நீ
சவித்திடுந் தன்மையால், தண்ட நீ செய்வது
புவியினைப் புனிதமாப் புனைதற்கேயென
விளம்புகின்றனர்; அது மெய்யோ, பொய்யோ? (6)

ஆண்டோரெழு பத் தைந்தினி லொருமுறை
மண்ணை நீ யணுகும் வழக்கினையாயினும்,
இம்முறை வரவினால் எண்ணிலாப் புதுமைகள்
விளையுமென்கின்றார், மெய்யோ, பொய்யோ? (7)

சித்திகள் பலவுஞ் சிறந்திடு ஞானமும்
மீட்டு மெம்மிடை நின் வரவினால் விளைவதாப்
புகலுகின்றனர்; அது பொய்யோ, மெய்யோ? (8)

# 19. மனைத் தலைவிக்கு வாழ்த்து

வாழ்க மனைவியாங் கவிதைத் தலைவி!
தினமு மிவ்வுலகில் சிதறியே நிகழும்
பலபல பொருளிலாப் பாழ்படு செய்தியை
வாழ்க்கைப் பாலையில் வளர் பல முட்கள்போல்
பேதை யுலகைப் பேதைமைப் படுத்தும்
வெறுங் கதைத்திரளை, வெள்ளறி வுடைய
மாயா சக்தியின் மகளே, மனைக்கண்
வாழ்வினை வகுப்பாய், வருடம் பலவினும்
ஓர்நாட் போலமற் றோர்நாள் தோன்றாது
பலவித வண்ணம் வீட்டிடைப் பரவ
நடத்திடுஞ் சக்தி நிலையமே, நன்மனைத்
தலைவி, ஆங்கத் தனிப்பதர்ச் செய்திகள்
அனைத்தையும் பயனிறை யனுபவ மாக்கி,
உயிரிலாச் செய்திகட் குயிர்மிகக் கொடுத்து,
ஒளியிலாச் செய்திகட் கொளியருள் புரிந்து,
வான சாத்திரம் மகமது வீழ்ச்சி
சின்னப் பையல் சேவகத் திறமை
எனவரு நிகழ்ச்சி யாவே யாயினும்
அனைத்தையு மாங்கே யழகுறச் செய்து,
இலௌகிக வாழ்க்கையிற் பொருளினை யிணைக்கும்
பேதை மாசக்தியின் பெண்ணே, வாழ்க.
காளியின் குமாரி, அறங்காத் திடுக!
வாழ்க! மனையகத் தலைவி வாழ்க!

## 20. தாயுமானவர் வாழ்த்து

என்றும் இருக்க உளங்கொண்டாய்
இன்பத் தமிழுக் கிலக்கியமாய்
இன்றும் இருத்தல் செய்கின்றாய்
இறவாய் தமிழோ டிருப்பாய் நீ
ஒன்று பொருளஃ தின்பமென
உணர்ந்தாய் தாயு மானவனே
நின்ற பரத்து மாத்திரமோ
நில்லா. இகத்தும் நிற்பாய் நீ.

---

## 21. மகாமகோபாத்தியாய வாழ்த்து

[ஸ்ரீ. வே. சாமிநாதையரவர்கள் மகாமகோபாத்தியாயப் பட்டம் பெற்றபோது சி. சுப்பிரமணிய பாரதியார் பாடிப் படித்த செய்யுட்கள்]

(அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

1

செம்பரிதி யொளிபெற்றான் பைந்நறவு
சுவைபெற்றுத் திகழ்ந்த தாங்கண்
உம்பரெலாம் இறவாமை பெற்றனரென்
றெவரேகொல் உவத்தல் செய்வார் ?
கும்பமுனி யெனத் தோன்றும் சாமிநா
தப்புலவன் குறைவில் கீர்த்தி
பம்பலுறப் பெற்றனனேல், இதற்கென்கொல்
பேருவகை படைக்கின் றீரே !

அன்னியர்கள் தமிழ்ச்செவ்வி யறியாதார்
இன்றெம்மை ஆள்வோ ரேனும்
பன்னியசீர் மகாமகோ பாத்தியா
யப்பதவி பரிவின் ஈந்து
பொன்னிலவு குடந்தைநகர்ச் சாமிநா
தன்றனக்குப் புகழ்செய் வாரேல்,
முன்னிவனப் பாண்டியர்நாள் இருந்திருப்பின்
இவன் பெருமை மொழிய லாமோ ?

3

'நிதியறியோம்' இவ்வுலகத் தொருகோடி
இன்பவகை நித்தந் துய்க்கும்
'கதியறியோம்' என்றுமனம் வருந்தற்க ;
குடந்தைநகர்க் கலைஞர் கோவே !
பொதியமலைப் பிறந்தமொழி வாழ்வறியும்
காலமெலாம் புலவோர் வாயில்
துதியறிவாய், அவர்நெஞ்சின் வாழ்த்தறிவாய்,
இறப்பின்றித் துலங்கு வாயே.

# 22. ஓவியர்மணி ஸ்ரீ ரவிவர்மா

1. சந்திர னொளியை யீசன்
சமைத்தது பருக வென்றே
வந்திடு சாதகப்புள்
வருத்தனன்; அமுதுண் டாக்கிப்
பந்தியிற் பருக வென்றே
படைத்தன னமரர் தம்மை;
இந்திரன் மாண்புக் கென்ன
இயற்றினன் வெளிய யானை.

2. மலரினில் நீல வானில்
மாதரார் முகத்தில் எல்லாம்
இலகிய அழகை யீசன்
இயற்றினன், சீர்த்தி யிந்த
உலகினி லெங்கும் வீசி
யோங்கிய இரவி வர்மன்
அலகிலா அறிவுக் கண்ணா
லனைத்தையு நுகரு மாறே.

3. மன்னர் மாளிகையி லேழை
மக்களின் குடிலி லெல்லாம்
உன்னருந் தேசுவீசி
உளத்தினைக் களிக்கச் செய்வான்
நன்னரோ வியங்கள் தீட்டி
நல்கிய பெருமான் இந்நாட்

பொன்னணி யுலகு சென்றான்
புவிப்புகழ் போதுமென்பான்.

4. அரம்பை யூர்வசி போலுள்ள
அமர மெல்லியலார் செவ்வி
திரம்பட வகுத்த வெம்மான்!
செய்தொழி லொப்பு நோக்க
விரும்பியே கொல்லா மின்று
விண்ணுல கடைந்து விட்டாய்?
அரம்பையர் நின்கைச் செய்கைக்
கழிதலங் கறிவை தின்னம்.

5. காலவான் போக்கி லென்றுங்
கழிகிலாப் பெருமை கொண்ட
கோலவான் றொழில்கள் செய்து
குலவிய பெரியோர் தாமும்
சீலவாழ் வகற்றி யோர்நாட்
செத்திட லுறுதி யாயின்
ஞால வாழ்வினது மாயம்
நவின்றிடற் கரிய தன்றோ?

# 23. ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதர் காலஞ்சென்றதைப் பற்றிய இரங்கற் பாக்கள்

**நவம்பர், 25, 1906**

ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதர் தென்னிந்தியாவின் பிரபல சங்கீத வித்வான் ஸ்ரீ முத்துசாமி தீக்ஷிதரவர்களின் புதல்வனும் எட்டயபுரம் சமஸ்தானம் பாகவதரும் ஆவார்.

அகவல்

கவிதையு மருஞ்சுவைக் கானநூலும்
புவியினர் வியக்கு மோவியப் பொற்பும்
மற்றுள பெருந் தொழில் வகைகளிற் பலவும்
வெற்றி கொண்டிலங்கிய மேன்மையார் பரத
நாட்டினி லிந்நாள் அந்நியர் நலிப்ப
ஈட்டிய செல்வ மிறந்தமை யானும்
ஆண்டகையொடு புக ழழிந்தமை யானும்
மாண்டன பழம்பெரு மாட்சியார் தொழிலெலாம்;
தேவர்கள் வாழ்ந்த சீர் வளர் பூமியில்
மேவிய குரக்கர் விளங்குதல் போல
நேரிலாப் பெரியோர் நிலவிய நாட்டிற்
சீரிலாப் புல்லர் செறிந்து நிற்கின்றார்:
இவரிடை,
சுரத்திடை யின்னீர்ச் சுனையது போன்றும்
அரக்கர்தங் குலத்திடை வீடண னாகவும்

சேற்றிடைத் தாமரைச் செம்மலர் போன்றும்
போற்றுதற் குரிய புனித வான்குலத்தில்
நாரத முனிவ னமர்மிசை யருளாற்
பாரத நாட்டிற் பழமாண் புறுகென
மீட்டு மோர் முறையிவன் மேவின னென்ன
நாட்டு நற்சீர்த்தி நலனுயர் பெருமான்
தோமறு சுப்ப ராமனற் பெயரோன்
நாமகள் புளகுற நம்மிடை வாழ்ந்தான்.
இன்னுன் றூனு மெமை யகன்றேகினன்;
என்னே நம்மவ ரியற்றிய பாவம்!
இனி யிவ னனையரை யெந்நாட் காண்போம்?
கனி யறு மரமெனக் கடைநிலை யுற்றோம்.
அந்தோ மறலி நம் மமுதினைக் கவர்ந்தான்!
நொந்தோ பயனிலை; நுவல யா துளதே?

விருத்தம்

1. கன்னனொடு கொடை போயிற்றுயர் கம்ப
நாடனுடன் கவிதை போயிற்
றுன்னரிய புகழ்ப் பார்த்தனொடு வீர மகன்ற
தெனவுரைப்ப ரான்றோர்;
என்னக நின்றகலாதோன் அருட் சுப்ப ராம
னெனு மிணையிலா விற்
பன்ன னொடு சுவை மிகுந்த பண்வளனு மகன்ற
தெனப் பகரலாமே.

2. கலை விளக்கே, யிளசை*யெனுஞ் சிற்றூரிற்
பெருஞ் சோதிகதிக்கத் தோன்று

* இளசை—எட்டயபுரம்.

மலை விளக்கே, யெம்மனையர் மனவிருளை
மாற்றுதற்கு வந்த ஞான
நிலை விளக்கே, நினைப்பிரிந்த இசைத் தேவி
நெய்யகல நின்ற தட்டி
னுலை விளக்கே யெனத் தளரு மந்தோ!
நீ யகன்ற துய ருரைக்கற் பாற்றே?

3. மன்னரையும் பொய்ஞ் ஞான மதக்குரவர்
தங்களையும் வணங்கலாதேன்
தன்னனைய புகழுடையாய், நினைக்கண்ட
பொழுது தலைதாழ்ந்து வந்தேன்;
உன்னருமைச் சொற்களையே தெய்விகமா
மெனக் கருதி வந்தேன்; அந்தோ,
இன்ன மொருக் காவிளைசைக் கேகிடி னிவ்
வெளியன் மன மென்படாதோ?

---

## 24. சீட்டுக்கவிகளும் ஓலைத் தூக்கும்

### 1

### ஸ்ரீ எட்டயபுரம் ராஜ ராஜேந்த்ர மகாராஜ வெங்கடேசு ரெட்டப்ப பூபதி அவர்கள் சமுகத்துக்கு

கவிராஜ ஸ்ரீ சி. சுப்பிரமணிய பாரதி எழுதும்
சீட்டுக்கவிகள்

1. பாரி வாழ்ந் திருந்த சீர்த்திப் பழந்தமிழ் நாட் [டின் கண்ணே
ஆரிய, நீயிந்நாளி லரசுவீற் றிருக்கின் றுயால்;

காரியங் கருதி நின்னைக் கவிஞர்தாங் காண
[வேண்டின்
நேரி லப்போதே யெய்தி வழிபட நினைகிலாயோ?

2. விண்ணள வுயர்ந்த கீர்த்தி வெங்கடே சுரெட்ட
மன்ன!
பண்ணள வுயர்ந்த தென்பண், பாவள வுயர்ந்த
[தென்பா,
எண்ணள வுயர்ந்த வெண்ணி லிரும்புகழ்க் கவி
[ஞர் வந்தால்
அண்ணலே பரிசு கோடி யளித்திட விரைகி
[லாயோ?

3. கல்வியே தொழிலாக் கொண்டாய், கவிதையே
[தெய்வமாக
அல்லுநன் பகலும் போற்றி யதைவழி பட்டு
[நின்றாய்!
சொல்லிலே நிகரி லாத புலவர்நின் சூழ லுற்றால்
எல்லினைக் காணப் பாயும் இடபம்போல் முற்ப
[டாயோ?

எட்டயபுரம்
2, மே. 1919

சுப்பிரமணிய பாரதி

# 2

## ஸ்ரீ எட்டயபுரம் மகாராஜ ராஜேந்த்ர ஸ்ரீ வெங்கடேசு ரெட்டப்ப பூபதி அவர்கள் சமுகத்துக்கு

கவிராஜ ஸ்ரீ சி. சுப்பிரமணிய பாரதி எழுதும்

ஓலைத்தூக்கு

1. ராஜமகா ராஜேந்த்ர ராஜகுல
சேகரன் ஸ்ரீ ராஜ ராஜன்
தேசமெலாம் புகழ்விளங்கு மிளசை
வெங்கடேசு ரெட்ட சிங்கன் காண்க,
வாசமிகு துழாய்த் தாரன் கண்ணனடி
மறவாத மனத்தான், சக்தி
தாசனெனப் புகழ்வளரும் சுப்ரமண்ய
பாரதிதான் சமைத்த தூக்கு*.

2. மன்னவனே! தமிழ் நாட்டில் தமிழறிந்த
மன்னரிலை யென்று மாந்தர்
இன்னலுறப் புகன்றவசை நீ மகுடம்
புனைந்தபொழு திருந்த தன்றே!
சொன்னலமும் பொருணலமும் சுவை கண்டு,
சுவை கண்டு, துய்த்துத் துய்த்துக்
கன்னலிலே சுவையறியுங் குழந்தைகள் போல்
தமிழ்ச் சுவைநீ களித்தா யன்றே!

---

* 'பாட்டு' என்ற பாடமு முண்டு.

3. புவியனைத்தும் போற்றிடவான் புகழ்படைத்துத்
தமிழ் மொழியைப் புகழி லேற்றுங்
கவியரசர் தமிழ் நாட்டுக் கில்லையெனும்
வசையென்னுற் கழிந்த தன்றே!
"சுவை புதிது, பொருள் புதிது, வளம் புதிது,
சொற்புதிது, சோதிமிக்க
நவகவிதை, யெந்நாளு மழியாத
மகா கவிதை" யென்று நன்கு

4. பிரான் ஸென்னுஞ் சிறந்த புகழ் நாட்டினுயர்
புலவோரும் பிறகு மாங்கே
விராவு புகழாங்கிலத் தீங் கவியரசர்
தாமு மிக வியந்து கூறிப்
பராவி யென்றன் தமிழ்க் கவியை மொழி
பெயர்த்துப் போற்றுகின்ருர்; பாரோ
[ரேத்துந்
தராதிபனே, யிளசை வெங்க டேசுரெட்டா!
நின்பா லத் தமிழ் கொணர்ந்தேன்.

5. வியப்பு மிகும் புத்திசையில் வியத்தகுமென்
கவிதையினை, வேந்தனே, நின்
நயப்படுசந் நிதிதனிலே நான்பாட
நீ கேட்டு நன்கு போற்றி,
ஜயப் பறைகள் சாற்றுவித்துச் சாலுவைகள்,
பொற்பைகள், ஜதி, பல்லக்கு,

வயப்பரிவா ரங்கள் முதற் பரிசளித்துப்
பல்லூழி வாழ்க நீயே!

எட்டயபுரம்
2, மே. 1919

சுப்பிரமணிய பாரதி

---

[ குறிப்பு:—ஸ்ரீ பாரதியார் புதுவையிலிருந்து வெளியேறிய பிறகு, எட்டயபுரத்தில் சிறிது காலம் வசித்து வந்தார். ஜீவனத்திற்கு மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த காலம். இருந்தாலும் ஜமீந்தாரை நேரில் கண்டு, அவரது ஆதரவைப் பெறுவதற்கு விரும்பவில்லை. ஏனெனில், ஏற்கனவே இந்த சமஸ்தானச் சேவகத்தை உதறிவிட்டு வெளியேறியவர். மேலும், துரைத்தனத்தாரால் பாரதிக்கு ஏற்பட்டிருந்த தடைகளெல்லாம் அப்பொழுது நீக்கப்பட்டிருந்த போதிலும், பாரதியாருக்கு உதவி செய்தால் தனக்கு ஏதேனும் பாதகமேற்படுமோவென்று ஜமீந்தார் பயங்கொண்டிருந்தார். ஆதலின், பாரதியார் தனக்கு இச்சமயம் சரியான ஆதரவும் மரியாதையும் கிடைக்காது என்று கருதி, வறுமையின் கொடுமையைப் பொறுத்துக் கொண்டிருந்தாரே யொழிய, ஜமீந்தாரின் உதவியை நாடவில்லை. ஆனால், இவர் படும் கஷ்டத்தைச் சகிக்காமல் இவரது நண்பர்களும் பந்துக்களும் இவரை மிகவும் நிர்பந்திக்கவே, ஜமீந்தாருக்கு இவ் விரண்டு சீட்டுக் கவிகளையும் எழுதி யனுப்பினார்.

பன்னிரண்டு ரூபாய்க்குச் சேவகஞ் செய்து வந்த பழைய "சுப்பையா" வாகத் தன்னைக் கருதாமல் கவியரசனை புவியரசன் தக்கபடி ஆதரிக்க வேண்டுமென்பதை இந்தப் பாக்கள் நன்கு விளக்குகின்றன. ]

ஓம்

# 25. சத்ரபதி சிவாஜி

## தன் சைனியத்திற்குக் கூறியது

ஜய ஜய பவானி! ஜய ஜய பாரதம்!
ஜய ஜய மாதா! ஜய ஜய துர்க்கா!
வந்தே மாதரம்! வந்தே மாதரம்!
சேனைத் தலைவர்காள்! சிறந்த மந்திரிகாள்!
யானைத் தலைவரும் அருந்திறல் வீரர்காள்!
அதிரத மன்னர்காள்! துரகத் ததிபர்காள்!
எதிரிகள் துணுக்குற இடித்திடு பதாதிகாள்!
வேலெறி படைகாள்! சூலெறி மறவர்காள்!
காலனுருக் கொளும் கணை துரந்திடுவீர்.
மற்று மாயிர விதம் பற்றலர் தம்மைச்
செற்றிடுந் திறனுடைத் தீர ரத்தினங்கள்காள்!
யாவிரும் வாழிய! யாவிரும் வாழிய!
தேவிநந் தமக்கெலாம் திருவருள் புரிக!
மாற்றலர் தம்புலை நாற்றமே யறியா
ஆற்றல்கொண் டிருந்தவிவ் வரும் புகழ் நாடு!
வேதநூல் பழிக்கும் வெளித்திசை மிலேச்சர்
பாதமும் பொறுப்பளோ பாரத தேவி?
வீரரு மவரிசை விரித்திடு புலவரும்
பாரெலாம் பெரும்புகழ் பரப்பிய நாடு!
தர்மமே யுருவமாத் தழைத்த பேரரசரும்
நிர்மல முனிவரும் நிறைந்த நன்னாடு!
வீரரைப் பெறுத மேன்மைதீர் மங்கையை
ஊரவர் மலடியென் றுரைத்திடு நாடு!

பாரதப்பூமி பழம்பெரும் பூமி ;
நீ ரதன் புதல்வர் ; இந் நினைவகற் றாதீர் !
பாரத நாடு பார்க்கெலாம் திலகம்
நீரதன் புதல்வர் ; இந் நினைவகற் றாதீர் !
வானக முட்டு மிமயமால் வரையும்
ஏனைய திசைக ளிலிருந் திரைக் கடலும்
காத்திடு நாடு ! கங்கையுஞ் சிந்துவும்
தூத் திரை யமுனையுஞ் சுனைகளும் புனல்களும்
இன்னரும் பொழில்களும் இணையிலா வளங்களும்
உன்னத மலைகளும் ஒளிர்தரு நாடு !
பைந்நிறப் பழனம் பசியிலா தளிக்க
மைந்நிற முகில்கள் வழங்கு பொன் னாடு !
தேவர்கள் வாழ்விடம், திறலுயர் முனிவர்
ஆவலோ டடையு மரும் புகழ்நாடு !
ஊனமொன் றறியா ஞானமெய்ப் பூமி !
வானவர் விழையு மாட்சியார் தேயம் !
பாரத நாட்டிசை பகர யான் வல்லனோ ?
நீரதன் புதல்வர் ; இந் நினைவகற் றாதீர் !
தாய்த்திரு நாட்டைத் தறுகண் மிலேச்சர்,
பேய்த்தகை கொண்டோர், பெருமையும் வன்மையும்
ஞானமு மறியா நவைபுரி பகைவர்,
வானக மடக்க வந்திடு மரக்கர் போல்
இந்நாட் படைகொணர்ந் தின்னல்செய் கின்றார் !
ஆலய மழித்தலு மருமறை யொழித்தலும்
மாதர்கற் பழித்தலும் மறையவர் வேள்விக்
கேதமே சூழ்வது மியற்றிநிற் கின்றார் !

சாத்திரத் தொகுதியைத் தாழ்த்து வைக்கின்றார்!
கோத்திர மங்கையர் குலங்கெடுக் கின்றார்!
எண்ணில துணைவர்காள்! எமக்கிவர் செயுந்துயர் :
கண்ணிய மறுத்தனர் ; ஆண்மையுங் கடிந்தனர் ;
பொருளினைச் சிதைத்தனர் ; மருளினை விதைத்த
[னர் ;
திண்மையை யழித்துப் பெண்மையிங் களித்த
[னர் ;
பாரதப் பெரும் பெயர் பழிப்பெய ராக்கினர் ;
சூரர்தம் மக்களைத் தொழும்பராய்ப் புரிந்தனர் ;
வீரிய மழிந்து மேன்மையு மொழிந்து நம்
ஆரியர் புலையருக் கடிமைக ளாயினர்.
மற்றிதைப் பொறுத்து வாழ்வதோ வாழ்க்கை?
வெற்றிகொள் புலையர்காள் வீழ்ந்துகொல் வாழ்
[வீர்?
மொக்குள்தான் தோன்றி முடிவது போல
மக்களாய்ப் பிறந்தோர் மடிவது திண்ணம்!
தாய்த்திரு நாட்டைத் தகர்த்திடு மிலேச்சரை
மாய்த்திட விரும்பார் வாழ்வுமோர் வாழ்வு
[கொல்?
மானமொன் றிலாது மாற்றலர் தொழும்பராய்
ஈனமுற் றிருக்க எவன்கொலோ விரும்புவன்?
தாய்பிறன் கைபடச் சகிப்பவ னாகி
நாயென வாழ்வோன் நமரிலிங் குளனோ?
பிச்சைவாழ் வுகந்து பிறருடை யாட்சியில்
அச்ச முற் றிருப்போன் ஆரிய னல்லன் ;

புன்புலால் யாக்கையைப் போற்றியே தாய்நாட்
டன்பிலா திருப்போன் ஆரிய னல்லன்.
மாட்சிதீர் மிலேச்சர் மனப்படி யாளும்
ஆரியத் தன்மை யற்றிடுஞ் சிறியர்
யாரிவ ணுளரவர் யாண்டேனு மொழிக!
படைமுகத் திறந்து பதம்பெற விரும்பாக்
கடைபடு மாக்களென் கண்முனில் லாதீர்!
சோதரர் தம்மைத் துரோககி ளழிப்ப
மாதரார் நலத்தின் மகிழ்பவன் மகிழ்க!
நாடெலாம் பிறர்வசம் நண்ணுதல் நினையான்
வீடுசென் றுளிக்க விரும்புவோன் விரும்புக!
பாசமே பெரிதெனப் பார்ப்பவன் செல்க!
நாட்டுளார் பசியினல் நலிந்திடத் தன் வயி
றூட்டுதல் பெரிதென உன்னுவோன் செல்க!
ஆணுருக் கொண்ட பெண்களு மலிகளும்
வீணிவிங் கிருந்தெனை வெறுத்திடல் விரும்பேன்.
ஆரிய ரிருமின்! ஆண்களிங் கிருமின்!
வீரிய மிகுந்த மேன்மையோ ரிருமின்!
மானமே பெரிதென மதிப்பவ ரிருமின்!
ஈனமே பொருத வியல்பின ரிருமின்!
தாய்நாட் டன்புறு தனையரிங் கிருமின்!
மாய் நாட் பெருமையின் மாய்பவ ரிருமின்!
புலையர்தம் தொழும்பைப் பொறுக்கிலா ரிருமின்!
கலையறு மிலேச்சரைக் கடிபவ ரிருமின்!
ஊரவர் துயரில்நெஞ் சுருகுவீ ரிருமின்!
சோர நெஞ்சிலாத் தூயவ ரிருமின்!

தேவி தாள்பணியுந் தீரரிங் கிருமின் !
பாவியர் குருதியைப் பருகுவா ரிருமின் !
உடலினைப் போற்று வுத்தம ரிருமின் !
கடல் மடுப்பினுமனங் கலங்கல ருதவுமின் !
வம்மினோ துணைவீர் ? மருட்சி கொள்ளாதீர் !
நம்மினோ ராற்றலை நாழிகைப் பொழுதெனும்
புல்லிய மாற்றலர் பொறுக்கவல் லார்கொல் ?
மெல்லிய திருவடி வீறுடைத் தேவியின்
இன்னருள் நமக்கோர் இருந்துணை யாகும்.
பன்னரும் புகழுடைப் பார்த்தனும் கண்ணனும்
வீமனும் துரோணனும் வீட்டுமன் றானும்
ராமனும் வேறுள இருந்திறல் வீரரும்
நற்றுணை புரிவர் ; வானக நாடுறும் ;
வெற்றியே யன்றி வேறெதும் பெறுகிலேம்.
செற்றினி மிலேச்சரைத் தீர்த்திட வம்மின் !
வாளுடை முனையினும், வயந்திகழ் சூலினும்,
ஆளுடைக் கால்க ளடியினுந் தேர்களின்
உருளையி னிடையினும், மாற்றலர் தலைகள்
உருளையிற் கண்டுநெஞ் சுவப்புற வம்மின் !
நம் மிதம் பெருவளம் நலிந்திட விரும்பும்
(வன்மியை) வேரறத் தொலைத்தபின் னன்றோ
ஆணெனப் பெறுவோம் ! அன்றிநா மிறப்பினும்
வானுறு தேவர் மணியுல கடைவோம் !
வாழ்வமேற் பாரத வான்புகழ்த் தேவியை
தாழ்வினின் றுயர்த்திய தடம்புகழ் பெறுவோம் !
போரெனி லிதுபோற் புண்ணியத் திருப்போர்
பாரினி லொன்று பார்த்திடற் கெளிதோ ?

ஆட்டினைக் கொன்று வேள்விக ளியற்றி
வீட்டினைப் பெறுவதை விரும்புவார் சிலரே ;
நெஞ்சக் குருதியை நிலத்திடை வடித்து
வஞ்சக மழிக்கும் மாமகம் புரிவம் யாம்.
வேள்வியி லிது போல் வேள்வி யொன்றில்லை ;
தவத்தினி லிதுபோற் றவம் பிறிதில்லை.
முன்னையோர் பார்த்தன் முனைத்திசை நின்று
தன்னெதிர் நின்ற தளத்தினை நோக்கிட
மாதுலர் சோதரர் மைத்துனர் தாதையர்
காதலின் நண்பர் கலைதரு குரவ ரென்
றின்னவ ரிருத்தல்கண் டிதயநொந் தோனுய்த்
தன்னருந் தெய்விகச் சாரதி முன்னர்
" ஐயனே ! யிவர்மீ தம்பையோ தொடுப்பேன் ?
வையகத் தரசும் வானக வாட்சியும்
போயினு மிவர்தமைப் போரினில் வீழ்த்தேன்.
மெய்யினில் நடுக்கம் மேவுகின் றதுவால் ;
கையினில் வில்லும் கழன்றுவீழ் கின்றது ;
வாயுலர் கின்றது ; மனம்பதைக் கின்றது ;
ஓய்வுறுங் கால்கள் ; உலைந்தது சிரமும் ;
வெற்றியை விரும்பேன் ; மேன்மையை விரும்
[பேன் ;
சுற்றமிங் கறுத்துச் சுகம்பெறல்விரும்பேன் ;
எனையிவர் கொல்லினும் இவரையான் தீண்டேன்
சினையறுத் திட்ட பின் செய்வதோ ஆட்சி ?"
எனப்பல கூறியவ் விந்திரன் புதல்வன்
கனப்படை வில்லைக் களத்தினி லெறிந்து

சோர்வொடு வீழ்ந்தனன் ; கருதியின் முடிவாய்த்
தேர்வயின் னின்றநத் தெய்விகப் பெருமான்
வில்லெறிந் திருந்த வீரனை நோக்கி,
" புல்லிய அறிவொடு புலம்புகின் றனையால்.
அறத்தினைப் பிரிந்த சுயோதன தியரைச்
செறுத்தினி மாய்ப்பது தீமையென் கின்றாய்.
உண்மையை அறியாய் ; உறவையே கருதிப்
பெண்மைகொண் டேதோ பிதற்றிநிற் கின்றாய்.
வஞ்சகர், தீயர், மனிதரை வருத்துவோர் ,
நெஞ்சகக் கருக்குடை நீசர்கள்—இன்னோர்
தம்மொடு பிறந்த சகோதர ராயினும்
வெம்மையோ டொறுத்தல் வீரர்கள் செயலாம்.
ஆரிய ! நீதிநீ யறிகிலை போலும் !
பூரியர் போல் மனம் புழுங்குத லாயினை.
அரும்புகழ் தேய்ப்பதும் அனாரியத் தகைத்தும்
பெரும்பதத் தடையுமாம் பெண்மையெவ் வெய்
[தினை ?
பேடிமை யகற்று ! நின் பெருமையை மறந்தி
[டேல் !
ஈடிலாப் புகழினாய் ! எழுகவோ எழுக !"
என்றுமெய் ஞானம்சம் மிறையவர் கூறக்
குன்றெனும் வயிரக் கொற்றவான் புயத்தோன்
அறமே பெரிதென அறிந்திடு மனத்தனாய்
மறமே யுருவுடை மாற்றலர் தம்மைச்
சுற்றமும் நோக்கான் தோழமை மதியான்
பற்றலர் தமையெலாம் பார்க் கிடையாக்கினன்.

விசயனன் றிருந்த வியன் புகழ் நாட்டில்
இசையுநற் றவத்தா லின்றுவாழ்ந் திருக்கும்
ஆரிய வீரர்காள்! அவருடை மாற்றலர்,
தேரில், இந் நாட்டினர், செறிவுடை உறவினர்;
நம்மையின் றெதிர்க்கும் நயனிலாப் புல்லோர்
செம்மைதீர் மிலேச்சர், தேசமும் பிறிதாம்,
பிறப்பினி லன்னியர், பேச்சினி லன்னியர்,
சிறப்புடை யாரியச் சீர்மையை யறியார்.

[குறிப்பு:—இது அச்சுப்பிரதி ஒன்றிலிருந்து பதிப்பிக்கப்பட்டிருக்கிறது; நூலின் போக்கைப் பார்க்குமிடத்து, இது பூர்த்தியாகவில்லை யென்றும், கடைசியில் இன்னும் சில வரிகள் இருந்திருக்கலாமோ என்றும் சந்தேகப்பட வேண்டி யிருக்கிறது.—பா. பி.]

---

# 26. குரு கோவிந்தஸிம்ஹ விஜயம்

ஆயிரத் தெழுநூற் றைம்பத் தாறு
விக்ரம ணுண்டு, வீரருக் கமுதாம்
ஆனந்த புரத்தி லார்ந்தினி திருந்தனன்
பாஞ்சாலத்துப் படர்தரு சிங்கக்
குலத்தினை வகுத்த குருமணி யாவான்
ஞானப் பெருங்கடல், நல்லிசைக் கவிஞன்

வானம் வீழ்ந் துதிரினும் வாள்கொடு தடுக்கும்
வீரர் நாயகன், மேதினி காத்த
குருகோவிந்த சிங்கமாங் கோமகன்
அவன்றிருக் கட்டளை யறிந்துபல திசையினும்
பாஞ்சாலத்துறு படைவலோர் நாடொறும்
நாடொறும் வந்து நண்ணுகின்றனரால்
ஆனந்த புரத்தி லாயிர மாயிரம்
வீரர்கள் குருவின் விருப்பினை தெரிவான்
கூடிவந்தெய்தினர் கொழும்பொழி லினங்களும்
புன்னகை புனைந்த புதுமலர்த் தொகுதியும்
பைந்நிறம் விரிந்த பழனக் காட்சியும்
“நல்வர வாகுக நம்மனோர் வரவு” என்
றுசிகள் கூறி யார்ப்பன போன்ற
புண்ணிய நாளிற் புகழ்வளர் குரவன்
திருமொழி கேட்கச் செறிந்தனர் சீடர்கள்
“யாதவன் கூறும்? என்னெமக் கருளும்?
எப்பணி விதித்தெம தேழேழ் பிறவியும்
இன்புடைத் தாக்கும்?” எனப்பல கருதி
மாலோன் றிருமுனர் வந்துகண் ணுயர்த்தே
ஆக்கினை தெரிவா னுவலொடு துடிக்கும்
தேவரை யொத்தனர் திடுக்கெனப் பீடத்
தேறி நின்றது காண்! இளமையுந் திறலும்
ஆதிபத் தகைமையு மமைந்ததோ ருருவம்
விழிகளிற் றெய்வப் பெருங்கனல் வீசிட
திருமுடி சூழ்ந்தோர் தேசுகாத் திருப்ப
தூக்கிய கரத்திற் சுடருமிழ்ந் திருந்தது

கூறநா நடுங்குமோர் கொற்றக் கூர்வாள்
எண்ணிலா வீரர் இவ்வுரு நோக்கி
வானின் றிறங்கிய மாந்திரிகன் முனர்ச்
சிங்கக் கூட்டந் திகைத்திருந் தாங்கு
மோனமுற் றடங்கி முடிவணங் கினரால்
வாள்நுனி காட்டி மாட்சியார் குரவன்
திருவுள நோக்கஞ் செப்புவன். தெய்வச்
சேயித ழசைவுறச் சினந்தோர் எரிமலைக்
குமுறுதல்போல் வெளிக்கொண் டன திருமொழி:
"வாளிதை மனிதர் மார்பிடைக் குளிப்ப
விரும்புகின் றேன் யான், தீர்கிலா விடாய்கொள்
தருமத் தெய்வந் தான்பல குருதிப்
பலிவிழை கின்றதால் பக்தர்காள்! நும்மிடை
நெஞ்சினைக் கிழித்து நிலமிசை யுதிரம்
வீழ்த்தித் தேவியின் விடாயினைத் தவிர்ப்ப
யார் வருகின்றீர்?" என்னலுஞ் சீடர்கள்
நடுங்கியோர் கணம்வரை நாவெழா திருந்தனர்.
கம்மென ஓர்சிறு கணங்கழி வுற்றது
ஆங்கிருந் தார்பல் லாயிர ருள்ளொரு
வீரன்முன் வந்து விளம்புவனிஃதே:—
"குருமணி, நின்னொரு கொற்றவாள் கிழிப்ப
விடாயறுக் தரும மேம்படு தெய்வதத்
திரை யென மாய்வனேற் றருள் புரிகவே."
புன்னகை மலர்ந்தது புனிதநல் வதனம்
கோயிலு ளவனைக் குரவர்கோன் கொடுசெல
மற்றத னின்றோர் மடுவின்வந் தாலெனக்

குருதி நீர்பாயக் குழாத்தினர் கண்டனர்.
பார்மின் ! சற்குரு பளீரெனக் கோயிலின்
வெளிப்போந் தாங்கு மேவினோர் முன்னம்
முதற்பலி முடித்து முகமலர்ந் தோனாய்
மின்னெனப் பாய்ந்து மீண்டு வந்துற்றனன்.
மீண்டுமவ் வுதிரவாள் விண்வழி தூக்கிப்
பின்வரு மொழிகள் பேசுவன் குரவர் கோன் :—
" மானுடர் நெஞ்சிலிவ் வாளினைப் பதிக்கச்
சித்தநான் கொண்டேன் தேவிதான் பின்னுமோர்
பலிகேட்கின்றாள் பக்தர்காள் ! நும்முளே
இன்னுமிங் கொருவன் இரத்தமே தந்திக்
காளியைத் தாகங் கழிக்குந் துணிவோன்
எவனுளன் ?" எனலும் இன்னுமோர் துணிவுடை
வீரன்முன் னின்று விருப்பினை யுணர்த்தினன்.
இவனையுங் கோயிலு ளினிதழைத் தேகி
இரண்டாம் பலிமுடித் தீண்டினன் குரவன்
குருதியைக் கண்டு குழாத்தினர் நடுங்கினர்.
இங்ஙன மீண்டுமே யியற்றிப்
பலியோ ரைந்து பரமனங் களித்தனன்.

* * * * * * * * *

அறத்தினைத் தமதோ ரறிவினாற் கொண்ட
மட்டிலே மானிடர் மாண்பெற லாகா.
அறமது தழைப்ப நெஞ்சகம் காட்டி
வாட்டுக் கேற்று மாய்பவர் பெரியோர்
அவரே மெய்ம்மையோர் முத்தரு மவரே

தோன்று நூறாயிரம் தொண்டர் தம்முள்ளே
அத்தகை நல்லரை யறிகுதல் வேண்டியே
தண்ணருட் கடலாந் தகவுயர் குரவன்
கொடுமைசேர் சோதனை புரிந்திடல் குறித்தனன்.
அன்பின் மிகையா லாருயிர் நல்குவோர்
ஐவரைக் கண்டபின் அவ்விய லுடையார்
எண்ணில ருளரெனத் துணிந்தின் பெய்தினன்
வெய்ய செங்குருதியின் வீழ்ந்துதா மிறந்து
சொர்க்க முற்றாரெனத் தொண்டர் கொண்
[டிருக்கும்
ஐந்து நன்மணி யெனுமைந்து முத்தரையும்
கோயிலுளிருந்து பேரவை முனர்க் கொணர்ந்
[தான் !
ஆர்த்தனர் தொண்டர் ! அருவியப் பெய்தினர் !
விழிகளைத் துடைத்து மீளவு நோக்கினர் !
ஜயஜய குருமணி ஜய குருசிங்கம்
எனப்பல வாழிக ளிசைத்தனர், ஆடினர்
அப்போழ் தின்னரு ளவதரித் தனையான்,
நற்சுடர்ப் பரிதி நகைபுரிந் தாங்கு
குறுநகை புரிந்து குறையறு முத்தர்
ஐவர்கள் தம்மையு மகமுறத் தழுவி
யாசிகள் கூறி யவையினை நோக்கிக்
கடல் முழக்கென்ன முழங்குவன் :—" காணீர் !
காளியு நமது கனக நன்னாட்டுத்
தேவியு மொன்றெனத் தேர்ந்தநல் லன்பர்காள்,
நடுக்க நீரெய்த நானனம் முறையும்

பலியிடச் சென்றது, பாவனை மன்ற
என்கரத் தாற்கொலோ நும்முயி ரெடுப்பன்
ஐம்முறை தானு மன்பரை மறைத்துநும்
நெஞ்சகச் சோதனை நிகழ்த்தினன் யானே.
தாய்மணி நாட்டின் உண்மைத் தனயர்நீர்
என்பது தெளிந்தேன். என்கர வாளால்
அறுத்தநிங் கின்றைந் தாடுகள் காண்மின் !
சோதனை வழியினுந் துணிவினைக் கண்டேன்
களித்ததென் னெஞ்சம் கழிந்தன கவலைகள்.''
குரு கோவிந்தன் கொண்டதோர் தருமம்
'சீடர்தம் மார்க்கம்' எனப்புகழ் சிறந்தது
இன்றுமம் மார்க்கத் திருப்பவர் தம்பெயர்
'காலசா' என்ப 'காலசா' எனுமொழி
முத்தர்தம் சங்க முறையெனும் பொருளது
முத்தர்தஞ் சபைக்கு மூலர்களாகமற்
றைவரன் னோர்தமை யருளினன் ஞரியன்.
சமைந்தது 'காலசா' எனும்பெயர்ச் சங்கம்
பாரத மென்ற பழம்பெரு நாட்டினர்
ஆவிதேய்ந் தழிந்திலர், ஆண்மையிற் குறைந்திலர்
வீரமுஞ் சிரத்தையும் வீந்தில ரென்று
புவியினோ ரறியப் புரிந்தனன் முனிவன்.
அந்நாள் முதுகுந்த னவதரித் தாங்கோர்
தெய்விகத் தலைவன் சீருறத் தோன்றி
மண்மா சகன்ற வான்படு சொற்களால்
எழுப்பிடுங் காலை, இறந்துதான் கிடக்கிலன்,
இளமையுந் துணிவு மிசைந்துநம் மன்னை

சாதியின் மானந் தாங்கமுற் படுவளென்
றுலகினோ ரறிவிடை யுறுத்தினன் முனிவன்
ஐம்பெரும் பூதத் தகிலமே சமைத்த
முன்னவ ணெப்ப முனிவனு மைந்து
சீடர்கள் மூலமாத் தேசுறு பாரதச்
சாதியை வகுத்தனன் தழைத்தது தருமம்
கொடுங்கோல் பற்றிய புன்மைக் குரிசிலர்
நடுங்குவ ராயினர். நகைத்தனள் சுதந்திரை.
ஆயிரத் தெழுநூற் றைம்பத் தாறு
விக்கிர மார்க்க ணாண்டினில், வியன்புகழ்க்
குருகோ விந்தன் கொற்றமார் சீடரை,
கூட்டியே தெய்வக் கொலுவொன் றமைத்தனன்
காண்டற் கரிய காட்சி! கவின்திகழ்
அரியா தனத்தி லமர்ந்தனன் முனிவர்கோ.
சூழ்ந்திருந் தனருயிர்த் தொண்டர்தா மைவரும்
தன்றிருக் கரத்தா லாடைகள் சார்த்தி
மாலைகள் சூட்டி மதிப்புற விருத்திக்
கண்மணி போன்று ரைவர்மேற் கனிந்து
குழைவுற வாழ்த்திக் குழாத்தினை நோக்கி,
"காண்டிரோ! முதலாங் 'காலசா'" என்றனன்
நாடுந் தருமமு நன்கிதிற் காப்பான்
அமைந்ததிச் சங்க மறிமினீ ரென்றான்.
அருகினி லோடிய ஆற்றினின் றையன்
இருப்புச் சிறுகலத் தின்னீர் கொணர்ந்து
வாள்முனை கொண்டு மற்றதைக் கலக்கி
மந்திர மோதினன். மனத்தினை யடக்கிச்

சித்தமே முழுதுஞ் சிவத்திடையாக்கிச்
சபமுரைத் திட்டான், சயப்பெருந் திருவக்
கொலுமுனர் வந்து குதித்துநின் றிட்டாள்.
ஆற்றுநீர் தனையோ அடித்ததத் திருவாள்
அயர்ந்து போய்நின்ற அரும்புகழ் பாரதச்
சாதியின் திறல்கள் தம்மையே யியக்கி
நல்லுயிர் நல்கினன். நாடெலா மியங்கின.
தவமுடை யைவரைத் தன்முனர் நிறுத்தி
மந்திர நீரை மாசறத் தெளித்து
அருள்மய மாகி யவர்விழி தீண்டினன்
பார்மினோ உலகீர் ! பரமனங் கரத்தால்
அவர்விழி தீண்டிய அக்கணத் தன்றே
நாடனைத் திற்கு நல்விழி திறந்தது !
சீடர்க ளனைவருந் தீட்சையிற் கலந்தனர்.
ஐயன் சொல்வன் " அன்பர்காள் ! நீவிர்
செய்திடப் பெற்ற தீட்சை யினுமம்
'அமிர்த' மென்றறிமின் ! அரும் பேறிது
பெற்றோர் யாவரும் பேரருள் பெற்றோர்.
நுமக்கினித் தருமா நுவன்றிடக் கேண்மின்.
ஒன்றாம் கடவுள். உலகிடைத் தோன்றிய
மானிட ரெல்லாஞ் சோதரர் மானுடர்
சமத்துவ முடையார், சுதந்திரஞ் சார்ந்தவர்.
சீடர்காள் ! குலத்தினும் செயலினு மனைத்தினு
மிக்கணந் தொட்டுநீர் யாவிருமொன்றே
பிரிவுகள் துடைப்பீர் ! பிரிதலே சாதல்.
ஆரியர் சாதியுள் ஆயிரஞ் சாதி

வகுப்பவர் வகுத்து மாய்க, நீரனைவிருந்
தருமம், கடவுள், சத்தியம், சுதந்திரம்
என்பவை போற்ற எழுந்திடும் வீரச்
சாதி யொன்றனையே சார்ந்தோ ராவிர்.
அநீதியும், கொடுமையும் அழிந்திடுஞ் சாதி ;
மழித்திட லறியா வன்முகச் சாதி ;
இரும்பு முத்திரையு மிறுகிய கச்சையும்
கையினில் வாளுங் கழன்றிடாச் சாதி ;
சோதர நட்புத் தொடர்ந்திடு சாதி ;
அரச னில்லாது தெய்வமே யரசா
மானுடர் துணைவரா, மறமே பகையாக்
குடியர சியற்றுங் கொள்கையார் சாதி ;
அறத்தினை யொறுக்கிலீர் மறத்தினைப் பொறுக்கி
தாய்த்திரு நாட்டைச் சந்ததம் போற்றிப் [லீர்
புகழொடு வாழ்மின் ! புகழொடு வாழ்மின் ''
என்றுரைத் தைய னின்புற வாழ்த்தினன்
அவனடி போற்றி யார்த்தனர் சீடர்கள்.
குரு கோவிந்தக் கோமக னூட்டிய
கொடியுயர்ந் தசையக் குவலயம் புகழ்ந்தது
ஆடிய மாய்ந்த தரங்கசிப் ஆட்சி.



# 27. இருதலைக் கொள்ளியினிடையே*

எனப்பல பேசி யிறைஞ்சிடப் படுவதாய்
நாட்பட நாட்பட நாற்றமுஞ் சேறும்
பாசியும் புதைந்து பயனீ ரிலதாய்
நோய்க் களமாகி யழிகென நோக்கமோ?
விதியே, விதியே, தமிழச் சாதியை
என்செய நினைத்தா யெனக்குரை யாயோ?
சார்வினுக் கெல்லாந் தகத்தக மாறித்
தன்மையுந் தனது தருமமு மாயா†
தென்று மோர் நிலையா யிருந்து நின்னருளால்
வாழ்ந்திடும் பொருளொடு வகுத்திடு வாயோ?
தோற்றமும் புறத்துத் தொழிலுமே காத்துமற்
றுள்ளுறு தருமமு முண்மையு மாறிச்
சிதைவுற் றழியும் பொருள்களிற் சேர்ப்பையோ?
'அழியாக் கடலோ? அணிமலர்த் தடமோ?
வானுறு மீனோ? மாளிகை விளக்கோ?
கற்பகத் தருவோ? காட்டிடைமரமோ?
விதியே தமிழச் சாதியை யெவ்வகை

---

*இந்நூல் எண்ணிடப்படாத, மிகவுஞ் சிதைவுற்ற கைப்பிரதித் துணுக்குகளினின்றும் சேகரிக்கப்பட்டது. ஆரம்பத்திலும் முடிவிலும் உள்ள வரிகள் கிடைக்கவில்லை. நூலின் பெயர் எங்களால் கொடுக்கப்பட்டதே.—பா. பி.

†'தருமமு மழியா' என்றும் பாடம்.

விதித்தா' யென்பதன் மெய்யெனக் குணர்த்து
[வாய்.

ஏனெனில்,

'சிலப்பதிகாரச் செய்யுளைக் கருதியும்,
திருக்குறளுறுதியும் தெளிவும் பொருளின்
ஆழமும் விரிவு மழகுங் கருதியும்,
"எல்லை யொன்றின்மை" யெனும் பொருளதனைக்
கம்பன் குறிகளாற் காட்டிடமுயலு
முயற்சியைக் கருதியும், முன்பு நான் தமிழச்
சாதியை யமரத் தன்மை வாய்ந்தது' வென்
றுறுதி கொண்டிருந்தேன். ஒரு பதினயிரஞ்
சனிவாய்ப் பட்டுந் தமிழச் சாதிதான்
உள்ளுடை வின்றி யுழைத்திடு நெறிகளைக்
கண்டெனதுள்ளங் கலங்கிடா திருந்தேன்.
ஆப்பிரிக்கத்துக் காப்பிரி நாட்டிலுந்
தென்முனை யடுத்த தீவுகள் பலவினும்
பூமிப் பந்தின் கீழ்ப்புறத்துள்ள
பற்பல தீவினும் பரவி யிவ்வெளிய
தமிழச் சாதி தடியுதை யுண்டும்
காலுதை யுண்டும் கயிற்றடி யுண்டும்
வருந்திடுஞ் செய்தியும் மாய்ந்திடுஞ் செய்தியும்
பெண்டிரை மிலேச்சர் பிரித்திடல் பொறாது
செத்திடுஞ் செய்தியும் பசியாற் சாதலும்
பிணிகளாற் சாதலும் பொருந்தொலை யுள்ள தந்
நாட்டினைப் பிரிந்த நலிவினாற் சாதலும்
இஃதெலாங் கேட்டு மெனதுள மழிந்திலேன் ;

'தெய்வ மறவார், செயுங்கடன் பிழையார்,
ஏதுதான் செய்யினு மேதுதான் வருந்தினும்
இறுதியில் பெருமையு மின்பமும் பெறுவார்'
என்பதென்னுளத்து வேரகழ்ந் திருத்தலால்.
எனினும்,
இப் பெருங் கொள்கை யிதய மேற்கொண்டு
கலங்கிடாதிருந்த வெனைக் கலக்குறுத்தும்
செய்தியொன் றதனைத் தெளிவுறக் கேட்பாய்:–
ஊன மற்றெவைதாம் உறினுமே பொறுத்து,
வானம் பொய்க்கின் மடிந்திடு முலகுபோல்,
தானமுந் தவமுந் தாழ்ந்திடல் பொறுத்து
ஞானம் பொய்க்க நசிக்குமோர் சாதி.
சாத்திரங் கண்டாய் சாதியி னுயிர்த்தலம்;
சாத்திரமின் றேற் சாதி யில்லை.
பொய்மைச் சாத்திரம் புகுந்திடின் மக்கள்
பொய்மை யாகிப் புழுவென மடிவர்.
நால்வகைக் குலத்தார் நண்ணுமோர் சாதியில்,
அறிவுத் தலைமை யாற்றிடுந் தலைவர்—
மற்றிவர் வகுப்பதே சாத்திரமாகும்.
இவர்தாம்—
உடலு முள்ளமுந் தம் வசமிலராய்
நெறிபிழைத் திகழ்வுறு நிலைமையில் வீழினும்,
பெரிதில்லை; பின்னும் மருந்திதற் குண்டு.
செய்கையுஞ் சீலமுங் குன்றிய பின்னரும்
உய்கைக்குரிய வழி சில வுளவாம்.
மற்றிவர்,

சாத்திரம்—(அதாவது, மதியிலே தழுவிய
கொள்கை, கருத்து, குளிர்ந்திடு நோக்கம்)—
ஈங்கிதிற் கலக்க மெய்திடுமாயின்
மற்றதன் பின்னர் மருந்தொன் றில்லை.
இந்த நாளெமது தமிழ் நாட்டிடையே
அறிவுத் தலைமை தமதெனக் கொண்டார்
தம்மிலே யிருவகை தலைப்படக் கண்டேன் :
ஒரு சார்,
'மேற்றிசை வாழும் வெண்ணிற மாக்களின்
செய்கையு நடையுந் தீனியு முடையும்
கொள்கையு மதமுங் குறிகளு நம்முடை
யவற்றினுஞ் சிறந்தன ; ஆதலினவற்றை
முழுதுமே தழுவி மூழ்கிடி னல்லால்,
தமிழச் சாதி தரணி மீதிராது.
பொய்த்தழி வெய்தல் முடி'யெனப் புகலும்.
நன்றடா! நன்று! நாமினி மேற்றிசை
வழியெலாந் தழுவி வாழ்குவ மெனிலோ,
'ஏ ஏ! அஃதுமக் கிசையா' தென்பர்.
'உயிர் தருமேற்றிசை நெறிகளை யுவந்து நீர்
தழுவிடா வண்ணந் தடுத்திடும் பெருந்தடை
பல, அவை நீங்கும் பான்மையவல்ல'
என்றருள் புரிவர். இதன்பொருள் 'சீமை
மருந்துகள் கற்ற மருத்துவர் தமிழச்
சாதியின் நோய்க்குத் தலையசைத் தேகினர்'
என்பதேயாகும். இஃதொரு சார்பாம்.
பின்னொரு சார்பினர் வைதிகப் பெயரொடு

'நமது மூதாதையர் (நாற்பதிற்றாண்டின்
முன்னிருந்தவரோ, மூந்நூற்றாண்டிற்
கப்பால் வாழ்ந்தவர் கொல்லோ, ஆயிரம்
ஆண்டின் முன்னவரோ, ஐயாயிரமோ?
பவுத்தரே நாடெலாம் பல்கிய காலத்
தவரோ? புராணமாக்கிய காலமோ?
சைவரோ? வைணவ சமயத்தாரோ?
இந்திரன்றானே தனி முதற் கடவுள்
என்று நம்முன்னோ ரேத்திய வைதிகக்
காலத்தவரோ? கருத்திலா தவர் தாம்
எமது மூதாதைய ரென்பதிங் கெவர்கொல்?)
நமது மூதாதையர் நயமுறக் காட்டிய
ஒழுக்கமு நடையுங் கிரியையுங் கொள்கையும்
ஆங்கவர் காட்டிய வவ்வப் படியே
தழுவிடின் வாழ்வு தமிழர்க் குண்டு.
எனிலது தழுவ லியன்றிடா வண்ணம்
கலி தடைபுரிவன். கலியின் வலியை
வெல்லலாகா' தென விளம்புகின்றனரால்.
நாசங்கூறு 'நாட்டு வயித்தியர்'
இவராம். இங்கிவ் விருதலைக் கொள்ளியி
னிடையே நம்மவ ரெப்படி யுய்வர்?
விதியே! விதியே! தமிழச் சாதியை
யென்செயக் கருதி யிருக்கின்றாயடா?

## விதி

மேலை நீ கூறிய விநாசப்புலவரை
நம்மவ ரிகழ்ந்து நன்மையு மறிவும்

எத்திசைத் தெனினும் யாவரே காட்டினும்
மற்றவை தழுவி வாழ்வீராயின்,
அச்சமொன்றில்லை. ஆரிய நாட்டின்
அறிவும் பெருமையும்...............

## 28. காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கத்தின் மீது வாழ்த்துப் பாக்கள்

1. மண்ணுலகின் மீதினிலே யெக்காலும்
அமரரைப்போல் மடிவில் லாமல்
திண்ணமுற வாழ்ந்திடலா மதற்குரிய
உபாயமிங்கு செப்பக் கேளீர்!
நண்ணியெலாப் பொருளினிலு முட்பொருளாய்ச்
செய்கையெலாம் நடத்தும் வீறாய்த்
திண்ணியநல் லறிவொளியாய்த் திகழுமொரு
பரம்பொருளை யகத்திற் சேர்த்து,

2. 'செய்கையெலாம் அதன் செய்கை, நினைவெல்லாம்
அதனினைவு, தெய்வ மேநாம்
உய்கையுற நாமாகிநமக்குள்ளே யொளிர்வ'தென
உறுதி கொண்டு,
பொய், கயமை, சினம், சோம்பர், கவலை, மயல்,
வீண்விருப்பம், புழுக்கம், அச்சம்,
ஐயமெனும் பேயையெலாம் ஞானமெனும்
வாளாலே அறுத்துத் தள்ளி,

நான் எதிர்பார்த்திராத வண்ணமாக மெய்த்தொண்டர்கள் பலர் "இம்மலர்கள் மிக நல்லன" என்று பாராட்டி மகிழ்ச்சி யறிவித்தார்கள். மாதாவும் அதனை அங்கீகாரம் செய்து கொண்டாள். இதனால் துணிவு மிகுதியுறப் பெற்றேனாகி, மறுபடியும் தாயின் பதமலர்க்குச் சில புதிய மலர்கள் கொணர்ந்திருக்கின்றேன். இவை மாதாவின் திருவுள்ளத்திற்கு மகிழ்ச்சி யளிக்குமென்றே நினைக்கின்றேன்; "குழலினிது யாழினி தென்ப தம் மக்கள் மழலைச்சொற் கேளாதவர்" என்பது வேதமாதலின்.

இங்ஙனம்

ஸி. சுப்பிரமணிய பாரதி

குறிப்பு:—முதற் பகுதியிலே யிருந்த ஓரிரண்டு பாடல்கள், இதனிடையே பொருத்த நோக்கிச் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இந்நூலுள், இப்பகுதியிலுள்ள 4, 35, 15, 12, 9, 38, 14, 34, 21, 24, 22, 23, 33, 19, 32, 36 ஆகியவை வெளி வந்தன.

(4)

'மாதா மணிவாசகம்' என்னும் நூல் 1914-ல் தென் ஆபிரிக்காவிலே வெளியிடப்பட்டது. அதனுள் இப்பகுதியிற் காணப்படும் 11, 5 பாடல்கள் முதலில் வெளியாயின.

(5)

'நாட்டுப்பாட்டு' என்னும் பாடற்றொகுதியை ஸ்ரீ பாலி. சு. நெல்லையப்ப பிள்ளையவர்கள் வெளியிட்டார்கள். அதன் இரண்டாம் பதிப்பு 1919-இல் வெளியாயிற்று. அப்பதிப்பின் முகவுரை வருமாறு:

இது முன்னர் யான் வெளியிட்ட 'நாட்டுப்பாட்டி'ன் இரண்டாம் பதிப்பு. இதில் பல புதிய பாடல்கள் சேர்க்கப் பட்டிருக்கின்றன.

பாரதியாரின் பாடல்களைப் பற்றி ஒரு சிறிய ஆராய்ச்சி எழுதுவதென்றாலும், அது பெரிதாக விரியும். எனவே, அந்தக் கடமையை இங்கு நான் செய்யவில்லை.

பாரதியாரின் பாடல்கள் தமிழர்களுக்குப் புதிய உயிர் அளிப்பன. அவரது பாடல்களெல்லாம் மேலான தேசபக்தி யையும் தெய்வ பக்தியையும் உண்மையான கவிகள் விளைக் கும் ஒப்பற்ற இன்பத்தையும் விளைக்கின்றன. அவர் பாடல் களைப் படித்த காசிவாசியான எனது நண்பர் ஒருவர் "அவரது அரிய கவிகளைப் படித்து உடம்பு சிலிர்த்தேன். இத்தகைய சிறந்த கவிவல்லோர்கள் இன்னும் இருந்து பாரத நாட்டைச் சிறப்பித்து வருவதால் தான் தமிழ்மாது விருத்தாப்பிய தசை அடையவில்லை, அடையமாட்டாள் என மகிழ்ந்தேன்" என்று எழுதினர். ஆயினும், இத்தகைய புலவர்களின் பெருமையை அறிந்து, அவர்களை ஆதரித்து, அவர்கள் அறிவும் திறமையும் தமிழ் நாட்டாருக்கு மிகவும் பயன்படும் வண்ணம் செய்யக்கூடிய தமிழர்கள் மிகச் சிலர் கூட இல்லாதிருப்பதை நோக்கும்பொழுது எனக்கு அள வற்ற விசனம் உண்டாகிறது.

இந்த 'நாட்டுப்பாட்டி'ன் பெருமையைத் தமிழர் கள் நன்றாய் அறிவார்கள். எனது தாய்த் திருநாட்டைப் புகழும் இத்தகைய பாடல்களைப் பாடி மகிழுமாறு, யான் இந்த நாட்டிலே கோடிகோடி பிறப்பு பிறக்க வேண்டு மென்று விரும்புகிறேன். அண்ட சராசரங்கள் அனைத்தை யும் ஆக்கியும் காத்தும் மாய்த்தும் வரும் பரம்பொருளின்

பெரும்புகழை ஒருவன் எவ்வளவு காலந் தான் புகழ்ந்து போற்றினும் ஆவல் தீருமா? அதுபோல, இந்தத் தெய்விகத் திருநாட்டின் பெருமைகளை ஒருவன் எவ்வளவு காலந் தான் புகழ்ந்து பாடினும் ஆவல் தீராது. எங் தாய் வாழ்க, வந்தே மாதரம். தே.

சித்தார்த்தி௵ ஆனி௴ சிந்தாத்திரிப்பேட்டை, சென்னை.

இப்பகுதியிற் காணப்படும் 1, 2, 55, 7, 3, 8, 4, 5, 15, 14, 12, 9, 35, 34, 11, 54, 53, 57, 52 ஆகிய பாடல்கள் இப்பதிப்பிலுள்ளன.

(6)

1910௵ நவம்பருக்குச் சரியான சாதாரண வருஷம் கார்த்திகை மாதத்தில் பாரதியார் ஒரு பாடற்றொகுதியை வெளியிட்டார். அதன் முகவுரை வருமாறு:

"இச்சிறிய செய்யுள்-நூல் விநோதார்த்தமாக எழுதப் பட்டது. ஒரு சில பாட்டுக்கள் இன்பமளிக்கக் கூடியவாறு லும் பதர் மிகுதியாகக் கலந்திருக்கக்கூடும். இதன் இயல்பு தன் கூற்றெனப்படும். அதாவது, கதாநாயகன் தன் சரிதையைத் தான் நேராகவே சொல்லும் நடை. இக்காவிய முறை நவீனமானது. இஃது தமிழறிந்த நூலோர்கள் அங்கீகரிக்கத் தக்கது தானு என்று பார்த்திடும் பொருட்டுச் சிறிய நூலொன்றை முதலில் பதிப்பிடுகிறேன். இதனைப் பதம் பார்த்து மேலோர் நன்றென்பாராயின் இவ்வழியிலே வேறு பல வெளியாக்குவேன். அனுபவக்குறைவினாலும் ஆற்றற் குறைவினாலும் நேரும் பிழைகளைப் பொறுத்தருள் செய்க.

ஆசிரியன்

சாதாரண௵ கார்த்திகை௴-புதுச்சேரி.

இப்பகுதியிலுள்ள 51-வது பாடல் இந்நூலிலுள்ள தன் கூற்றுக்காவியத்தின் ஒரு பகுதி; 37, 11, 5 பாடல்களும் இந்நூலிற் காணப்படுகின்றன.

இவ்வாறான ஐந்து நூல்களையும் ஒப்புநோக்கி இப் பகுதி அச்சிடப் பெற்றது. இவ்வைந்து நூல்களிலுமுள்ள பாடபேதங்களும் பிறவிசேஷங்களும் அடியிற் குறிப் பிடப் பெற்றுள்ளன. இவ்வைந்து நூல்களிலும் இல்லாதன இப்பதிப்பிலுள்ள 6, 10, 13, 16, 18, 29, 30, 31, 39, 40, 41, 42, 43, 45, 46, 47, 48, 49, 50, 52, 57 ஆகிய 21 பாடல்கள்.

ஸ்வ—ஸ்வதேச கீதங்கள். ஜ—ஜன்ம பூமி.

நா—நாட்டுப்பாட்டு (1919): மா—மாதாமணிவாசகம்.

(1910)—1910 நவம்பரில் வெளிவந்த பாடற்றொகுதி.

பக்கம்

1-2. நா. சரணங்கள் 2, 3, 6 இல்லை.

சரணம் 4. ஸ்வ: பின்னமக்கெது வேண்டும்.

13. சரணம் 2, வரி 5. நா: பொருந்து நன்று

சரணம் 3, வரி 7. நா: உன்னத பாரத

15. நா: 'தேவருண்ணு நன்மருந்து' என்று தொடங்கும் 4-வது பாடல் இல்லை.

18. பாடல் 2, வரி 2, (1910): பொங்கின தெங்குஞ்; நா: சுதந்தர நாதம்

பக்கம்

19. பாடல் 2, வரி 7, மா: அள்ளிய தெள்ள முதன்னையெ மன்னை. பாடல் 3, வரி 1. (1910): பரிதியின் பேரொளி

20. வரி 4. (1910): பள்ளி யெழுந்தருள்வாயே

20-22. இராகக் குறிப்புக்கள்: 'ஐ' 'நா' இரண்டிலும் இல்லை.

21. பாடல் 5, வரி 1, ஐ: தொன்மறை கணுன்குடையாள்

22. பாடல் 8, வரி 2. நா: வளர்முரசம் ஒதுவாய்.
பாடல் 9, வரி 3. நா: குறுநகையால் முற்றுவித்து.
பாடம் 10. வரி 1. ஐ: குத்திர முந்நீங்கு.

23-27. கீழ்க்குறிப்புக்கள் பிரசுராலயத்தார் எழுதியன.

28. வரி 3. ஐ: தாயுமான சுவாமிகள்.

29. பாடல் 5, வரி 2. ஐ: ஆரியக்காட்சியோ ராநந்தமன்றோ
பாடல் 5, வரி 4. ஐ: வடிவமும் காணீர்.

30. பாடல் 10, வரி 2. நா; ஐ: வீர நிரந்தரம் வாழ்க.

37. இது புதிதாக சேர்க்கப்பட்ட பாடல்.

41. ஐ: 'நிதானக் கட்சியார் கூட்டம்' என்பது தலைப்பு.

43. ஐ: "கலெக்டர் வின்ச் ஸ்ரீ சிதம்பரம் பிள்ளைக்குச் சொல்லுதல்" என்பது தலைப்பு.

("நந்தன் சரித்திர"த்திலே ஆண்டை நந்தனுடைய சிதம்பர வாஞ்சையை மற்றப் பறையர்கள் வந்து சொல்லக் கேட்டு மஹா கோபங்கொண்டு நந்தனை நோக்கி "சேரி முற்றுஞ் சிவ பக்தி பண்ணும்படி விட்டையாம் அடியிட்டையாம்" என்பது முதலான வார்த்தைகள் கூறிப் பயமுறுத்து

கிறான். அதன் குறிப்பைத் தழுவித் திருநெல்வேலி ஜில்லா கலெக்டராகிய விஞ்ச், ஸ்ரீ சிதம்பரம் பிள்ளைக்குக் கூறிய தாகப் பின்வரும் கண்ணிகள் எழுதப்பட்டுள்ளன)—இக் குறிப்பு 'ஜ' இல் உள்ளது.

பக்கம்

44. ஜ: 'கலெக்டர் விஞ்சுக்கு ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை சொல்லிய மறுமொழி' என்பது தலைப்பு.

55. இப்பாடல் ஸ்ரீமான் எம். வி. ஈசுவர ஐயர் 1908-இல் வெளியிட்ட 'ஸ்ரீ திலகரின் ஜீவிய சரித'த்தில் உள்ளது.

63. பாடல் 9, வரி 3-4. நா: மாக்க ளதை

65. பாடல் 1, வரி 7. ஜ: சுதந்திரத்தேவி !
பாடல் 4, வரி 3-4. ஜ: மாக்களெல்லா மிகழ்ந்திட.

66. பாடல் 4, வரி 7-8. ஜ: நல்கு மன்னே !
பாடல் 7, வரி 1. ஜ: வீரத்தாற்

67. பாடல் 2, வரி 1-2. ஜ: சுதந்திரம் என்பதே

68. பாடல் 3, வரி 1. ஜ: எல்லோருமொன்றென்னும்

83. பாடல் 6, வரி 1. ஸ்வ: தூரத்துண்டு

99. பாடல் 3, வரி 5. (1910): பொருள் நூலும்

100. பாடல் 4, வரி 6. (1910): ஞால மீதிலிலக்கணம்
பாடல் 5, வரி 1. (1910): சேரன்றம்பி
வரி 2. (1910): தெய்வ வள்ளுவர்
வரி 3. (1910): பார நல்லிசை

101. பாடல் 7, வரி 5. (1910): மயக்கமும் ஐயமும்

111. இவை 'சுதேசகீதங்கள்' இரண்டாம் பாகத்திலுள்ளபடி.

முதற்பாகம் 38-ஆம் பக்கத்தில் 7, 4, 3 பாடல்கள் மட்டுமே முதன் மூன்று பாடல்களாகக் காண்கின்றன.

———

## உ. தோத்திரப் பாடல்கள்

இப்பகுதியின் முதற்பதிப்பு 1930-இல் பதிப்பிக்கப் பெற்றது. இப்பதிப்பில் அதில் சேராத ஆறு பாடல்கள் உள்ளன. அவையாவன இதில் 21, 22, 23, 31, 43, 65 என்ற எண்களேயுடைய கண்ணம்மா (2), கண்ணம்மா (3), திருக்காதல், வேள்விப்பாட்டு, கோமதி மஹிமை, மஹா சக்திக்கு விண்ணப்பம் என்பன.

'மாதா மணிவாசகம்' என்ற நூலுள் இப்பகுதியிலே 4, 24, 26, 39, 40, 57, 58, 63 என்னும் எண்களேயுடைய பாடல்கள் வெளியாயின.

1910-ம் ஹு நவம்பர் மாதத்திற்குச் சரியான சாதாரண ஹு கார்த்திகை மாதத்தில் பாரதியாரின் பாடற்றொகுதி யொன்று வெளியிடப்பெற்றது. அதனுள் இப்பகுதியிலே 61, 62, 64, 65 என்னும் எண்களேயுடைய பாடல்கள் வெளியாயின.

இவ்விரு தொகுதிகளிற் கண்ட பாட பேதங்களும், ஸ்ரீ. சி. தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள் கண்டறிந்த பாட பேதங்களும், அவர்கள் சரியானவை யென்று ஊகித் தறிந்த பாட பேதங்களும் கீழே குறிப்பிடப்பட்டுள்ளன.

மா—மாதா மணிவாசகம்.

1910—1910 நவம்பரில் வெளியான பாடற்றொகுதி.

தே—ஸ்ரீ தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள் தெரிவித்த பாட பேதங்களும், ஊகங்களும்.

மு—இப்பகுதியின் முதற்பதிப்பு.

ப—பக்கம்.

ப. 120. வரி 13. மு: தானெனப் பொழிந்திடுவீர். தே: தேனெனப் பொழிந்திடுவீர்.

ப. 120. வரி 20, மு: மதிப்பது மறந்தன.

ப. 125. வரி 7. மு: வீழ்கவிக் கொடு. தே: வீழ்கவக் கொடு.

ப. 129. வரி 2. தே: வெற்றி கண்டே; வரி 5. தே: சுத்த முழுப் பொய்யோ காண்; வரி 19-20. தே: வாழ்த்தி நன்று நில மளிப்பேன், திருவே!; வரி 20. மு: நிலத்திருப் பேன், திருவே; வரி 24. மு: சரணுமுண்டோ?

ப. 131-133. தே: முதல் ஏழு பாடல்களிலும் கடைசி வரிகளில் 'அம்மா' என்று முடிவதற்குப் பதிலாக 'அடா' என்று ஒரு பாடம்.

ப. 137. வரி 9. 'குருவெற்பு' என்பது திருநெல்வேலிக் கருகிலுள்ள சுப்பிரமணிய க்ஷேத்திரமாகிய 'குரு மலை' என்னும் ஊர். வரி 10. மு: 'நின்சேவகம்' என்பதற்குப் பதிலாக 'திருப்புகழ்' என்று ஒரு பாடம். தே: 'பாடுவோம்' என்பதற்குப் பதிலாக 'பாடுவேன்' என்று பாடம்.

ப. 140. வரி 15-16. மு: 'நகைத்திடுஞ் சேவலாய்' என்பதற்குப் பதிலாக "சிரித்திடுங் கோழியாய்" என்று ஒரு பாடம்.

ப. 141, பாடல் 1, வரி 1 மு: 'அடா' என்பதற்குப் பதிலாக 'அடர்' என்று பாடம்.

ப. 147. சரணங்கள் அந்தாதியாய் அமைந்துள்ளன.

ப. 162. வரி 8. தே: ஆசைக்குமாரி; வரி 12. தே: வீழ்ந்தேனடி; 'விரும்பினேன், அடி' என்ற பொருளில் 'விழைந்தேனடி' என்று மிருக்கலாம்.

ப. 172. வரி 14. தே: மண் விளைந்திட

ப. 173. வரி 14. மு: 'பாவமெலா மடிந்து' என்பதற்குப் பதிலாக 'பாவமெலாமடித்து' என்று பாடம்.

ப. 174. வரி 18. தே: பொறிகளைக் கடந்தாய்' என்றும் வரி 20. தே: 'பொறியை மிஞ்சி' என்றும் பாடம்.

ப. 175. வரி 4 தே: 'தொல்லை போக்கி' என்பதற்குப் பதிலாக 'துயரழித்து' என்று பாடம்.

ப. 186. வரி 18. மு: 'தவறுவதொருலகோ ?' என்று பாடம்.

ப. 190. வரி 15. தே: 'சாவினை வேண்டேன், தவிர்ப்பாய் போற்றி' என்பது ஒரு பிரதியில் 'இன்பங்கேட்டேன், ஈவாய் போற்றி' என்ற வரியை அடுத்துக் காணப்படுகிறது.

ப. 190. வரி 18. தே: காணிநிலம் வேண்டும்;—அடி

ப. 196. வரி 7. தே: வயிரப்படை காணுங்கால்.

ப. 196. கடைசி வரி. மு: தாயடிக் கீழ் பேய்போலே.

ப. 201. வரி 3. தே: சக்தி தனக்கே.

ப. 203. வரி 4. தே: சஞ்சலமில்லாம லெங்குமேவும்.

ப. 205. வரி 2. முழக்கும் என்றும் பாடம்.

ப. 209. வரி 8. 'சக்தி யென்றீராயின்' என்றேனும் 'சக்தி யென்றீராகில்' என்றேனும் இருக்கலாம்.

ப. 214. வரி 12. நே: சக்தி வெற்றிகொண்டு.

ப. 217. வரி 14. 1910: 'சந்திரிகையிலவனைக் கண்டேன்' என்று பாடம்.

ப. 218. வரி 9, 1910: 'யாவையும் செய் தவனோ' என்று பாடம்; வரி 18. 1910: 'உள்ளந்தெளியாதோ' என்று பாடம்.

ப. 218. 1910 பதிப்பில் மூன்றாவது பாடலின் முதலிரண்டடிகள் பின்வருமாறு காணப்படுகின்றன:—

கள்ள முருகாதோ—அம்மா பக்திக்
  கண்ணீர் பெருகாதோ ?
உள்ளந் தெளியாதோ—பொய்யாணவ
  ஊன மொழியாதோ ?

ப. 219. 1910: வரி 20. 'காத்தேன்' என்னும், வரி 23. 'சிந்தனை தெளிந்தே னிதையின்று' என்றும், வரி 26, 'வகை புரிந்துகொள்' என்றும் பாடபேதங்கள்.

## ௩. வேதாந்தப் பாடல்கள்

இப் பகுதியின் முதற் பதிப்பு 1930-இல் பதிப்பிக்கப் பெற்றது. அப்பதிப்பிற் சேர்க்கப் பட்டிருந்த பாடல்களுள் எட்டு வேறு பகுதிகளிலேயும் சேர்க்கப்பட்டிருந்ததால் அவை இவ்விரண்டாம் பதிப்பினின்றும் நீக்கப்பட்டன. அவை யாவன—(1) கண்ணன் பாட்டிலுள்ள கண்ணன்—என் சற்குருவும், (2) தோத்திரப் பாடலிலுள்ள கண்ணன்

துதியும். 'பாரதி—அறுபத்தாறு' என்னும் பகுதியுள் அடங்கிய (3) கடவுள் எங்கே இருக்கிறார்?, (4) குருக்கள் ஸ்துதி (குள்ளச்சாமி புகழ்), (5) குரு தர்சனம், (6) உபதேசம், (7) ஸர்வ மத ஸமரஸம், என்னும் பகுதிகளும் (8) புதிய ஆத்தி சூடியின் காப்புச் செய்யுளான பரம்பொருள் வாழ்த்தும்.

1910-ம் ஆண்டு நவம்பர் மாதத்தில் வெளிவந்த பாடற்றொகுதியினின்றும் இப்பகுதியுள் 'நான்' என்ற 30 வது பாடல் சேர்க்கப்பட்டது. இப்பகுதியிலுள்ள 23, 26 பாடல்களும் அதே 1910 வருஷ பாடற்றொகுதியில் உள்ளன. இப்பகுதியிலுள்ள 13-வது பாடலான 'ஸூர்ய ஸ்தோமம்—ஞானபாநு' என்பது 'ஞானபாநு' என்னும் பத்திரிகையில் வெளியானது.

'மாதா மணி வாசகம்' என்னும் நூலில் இப்பகுதியிலேயுள்ள 2,3,4,28 என்னும் எண்ணுடைய பாடல்கள் வெளியாயின.

இவ்விரு தொகுதிகளிற் கண்ட பாடபேதங்களும் ஸ்ரீ. சி. தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள் தெரிவித்த பாடபேதங்களும் வேறு குறிப்புக்களும் கீழே தரப்பட்டுள்ளன.

மா—மாதா மணி வாசகம்.

1910—1910 நவம்பரில் வெளியான பாடற்றொகுதி.

தே—ஸ்ரீ தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள் தெரிவித்த பாடபேதங்கள்.

மு—1930-இல் வெளியான முதற் பதிப்பு.

பக். 231, வரி 16, 'பொய்மைப்' என்பதற்குப் பதிலாக 'துன்பப்' என்றும் பாடம்.

பக். 234. கற்பனையூர் 'The Town of Let's Pretend' என்னும் ஆங்கிலப் பாடல் 'The Herald of the Star' என்னும் பத்திரிகையில் 1918 ஜூனில் வெளியான 7 வால்யூம் 1 ெந. இல் 'John Scurr' என்பவர் எழுதியது. அது வருமாறு:

Now this is the town of 'Let's Pretend'
Where the fairies live and play;
'Tis the gorgeous land of 'Make Believe'
Where everyone is gay.

This chair has become a pirate ship
That sails the Spanish Main—
Full many a man must walk the plank
Ere we come home again.

'Tis here the prince will welcome us
With the kiss that awoke his wife:
For happy are, for ever and aye,
Free from all care and strife.

We'll drink our tea from dolly's cup,
Sweet nectar it will be.
We must hide away from the giant ogre
Till Jack can set us free.

The children dwell in this pleasant town
Where the toys all pulse with life
Each doll is a queen in a golden crown
Or else's a prince's wife.

Each firewood stick is a dagger ornate
To destroy the Red Skin Chief,

And with cards or bricks we build a house
Which never shall shelter a thief.

O would that we of the elder breed
Whose youth has passed away
Could dream again as we dreamt of yore,
As the children dream at their play.

But the dear sweet land of 'Make Believe'
We never can enter again;
We have grown too old and cannot pretend
Nor castle build in Spain.

பக். 244. வரி 12 ; தே. 'பீடையிலாத வோர்'

பக். 244. 'விடுதலை வெண்பா': இது அந்தாதித் தொடையாக அமைந்துள்ளது.

பக். 249. 'மனமே': இதுவும் அந்தாதித்தொடை.

பக். 250. வரி 10; (1910)—'பேயாவுழலுஞ்' என்று பாடம்; வரி 12 : (1910) 'நீயா ஒன்றை' என்று பாடம்.

பக். 250. வரி 16. 'ஓயாதே நின்றுழைத்திடு நீ' என்றும் பாடம்.

பக். 251. 'மனத்திற்கு': இப்பாடலின் முதல் மூன்று அடிகளும் நான்காமடியின் முற்பகுதியுமான ஏழு வரிகளும் 'பாரதி அறுபத்தாறு' என்னும் நூலுள் 32-வது பாட்டில் உள்ளன.

பக். 251. வரி 5: 1923-வது வருஷத்தில் அச்சிட்ட 'பாரதி அறுபத்தாறு' முதற்பதிப்பிலே 'வேண்டா' என்று பாடம்.

பக். 253. வரி 1: (1910) 'தேர்ந்தபின்' என்பதற்குப் பதிலாக 'கண்டபின்' என்று பாடம்.

பக். 253. வரி 5-8: இது (1910) இல் உள்ளது.

பக். 253. வரி 15: (1910) 'கண்டு' என்பதற்குப் பதிலாக 'கண்டது' என்று பாடம்.

பக். 261. வரி 9: தே: 'காண்பதெல்லா மறையுமென் றால் மறைந்த வெல்லாம்' என்றும் 'காண்பவெல்லா மறையு மென்றால் மறைந்தவெல்லாம்' என்றும் பாடம்.

பக். 261. வரி 13: தே: 'காண்பதுவேயுறுதி யென் றாய்' என்றும், 'காண்பதுவே யுண்மை கண்டாய்' என்றும் பாடம்.

பக். 261. மு: 4-வது பாட்டின் தலைப்பாக 'இயற்கை சொல்விடை' என்றுள்ளது.

## ச. விநாயகர் நான்மணிமாலை

இந்நூல், பாரதியாரின் கையெழுத்துப் பிரதி அபூர்ண மாயிருந்த இடங்களில், ஸ்ரீ. தேசிகவிநாயகம் பிள்ளையவர் கள், ஸ்ரீ. சுத்தாநந்த பாரதியார் அவர்கள் முதலியவர்களைக் கொண்டு பூர்த்தி செய்யப்பட்டது. கையெழுத்துப் பிரதி யிற் காணுதன ககவளைவு (பிராக்கெட்)களுள் தரப்பட்டுள்

ளன. இவற்றைப் பற்றிய குறிப்புகள் கீழே கொடுக்க படுகின்றன.

பா: பாடல்.

தே: ஸ்ரீ தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள் எழுதியனுப்பிய பாடம்.

சு: ஸ்ரீ சுத்தாநந்த பாரதியார் அவர்கள் எழுதியனுப்பிய பாடம்.

மு: முதற்பதிப்பிலேயுள்ள பாடம்.

கை: பாரதியாரின் கையெழுத்துப் பிரதி.

பா 1, வரி 1, சு: சக்தி பெறும், தே: சக்திவளர் or சக்தியுள்ள or சத்தியுள்ள. கை: 'யாதோதான்' என்பதை அடித்து 'யாதெனினும்' என்று எழுதப் பட்டுள்ளது.

பா. 1, வரி 2. கை: 'நூல் செய்திடினும் வல்லமைக்கா என்பதை அடித்து 'சித்' என்று மட்டும் எழுதப்பட்டுள்ளது. சு: வல்லமைக்கே. தே: வைத்து நூல் செய்திடினும் வல்லமைக்கா or சித்தமதிற்கொண்டு நூல் செய்வரெனில்.

பா. 1, வரி 3. தே: சு: நின்.

பா. 4, மு: வரி 15க்குப் பின் 'எதற்கு மஞ்சா வியல்புநாம் பெறலாம்' என்ற ஒரு வரி நகவளைவுக்குள் இருந்தது. இதுவும் இது போன்ற பிற அடிகளும் கையெழுத்துப் பிரதியிலே காணப்படாமையின், அவை மூலத்தினின்றும் நீக்கப்பட்டன.

பா. 4. வரி 18. தே: வித்தைவளரும் வீரமே யியல்பாம்; மு: வித்தை வளரும் வேள்வியோங்கும் (வீரமே யியல்பாம்)

பா. 4, வரி 19-20. தே: அமரத்தன்மையு மெய்துவம்; நமர்களிதனை நன்குணர்வீரே.

பா. 4, வரி 20-க்கு மேல் மு: (நமர்களிதனை நன்குணர் வீரே) என்றுள்ளது.

பா. 5, வரி 1, தே: சு: உண.

வரி 2. சு: புணர்வீர் அமரர் சுகபோகம்—கணபதி யைப்; தே: புணர்வீர் அமர ருறும்போகம்—கணபதியை.

வரி 3-4. சு: மூலத்திலுள்ள பாடம்.

தே: நெஞ்சிலிருத்தி நிதமுமன் பாகவவன்
கஞ்சமலர்த் தாள் பணிந்தக்கால்.
or தஞ்சமெனக் கொண்டு தளராநெஞ்சாளுமவன்
கஞ்சமலர்த்தாள் பணிந்தக் கால்.
or நெஞ்சமரக் கொண்டு நிதமுமன் பாகவவன்
கஞ்சமலர்த்தாள் பணிந்தக் கால்.
or அல்லும் பகலும் அடிபணிந்திவ்வன்னெஞ்சக்
கல்லும் கசிந்துருகுங்கால்

பா. 7. கடைசி அடி. மு: நூறு வயதெல்லா நலமு மளிக்கக் (திவையுந் தா நீ) கடவாயே. தே: மூலத்திற் கொண்ட பாடம் or நூறு வயதெல்லாந்தா நீ கடவாயே.

பா. 8. பக்கம் 266, வரி 4-க்குப் பின் மு (விநாயக தேவா, வேதநாயகா) என்றுள்ளது.

பா. 20. வரி 9. மு: விலே இல்லை. தே: கைப்பிரதியி லுள்ளது. பக்கம் 271. வரி 3-க்குப் பின் மு: விலே (பாவம் வேண்டேன் பல்சுவை வேண்டினேன் இழிவு வேண்டேன் இன்பம் வேண்டினேன் என்றும், வரி 4-க்குப் பின்

'பிறர்துயர் வேண்டேன் பெருமை வேண்டினேன்
கொலையினை வேண்டேன் தலைமையை வேண்டினேன்
களவு வேண்டேன் காதல் வேண்டினேன்' என்றும்

பா. 28, வரி 7-க்குப் பின் மூ: விலே

(யானை முகனே இங்கு வந்தருள்செய்
ஓங்கார ரூபா உண்மைப் பொருளே)

என்றும், வரி 8-க்குப் பின்

(மாதவன் மருகா மணி மலர்த்திருவடி
வாழ்த்திடுந் தொழிலில் வாழ்வித்தருள்வாய்
அசுரரைக் காய்வாய், ஆரணநாதா) என்றும் உள்ளது.

பக்கம் 274, வரி 7. தே: கோத்தருள் புரிந்த.

பக்கம் 274, வரி 7-க்குப் பின் மூ. விலே,

(விநாயக தேவா, வேலா, தீயே,
மதியே, ஞாயிறே, அடியேன் மனத்தினுள்
பதத்தினை நாட்டிப் படருமிடரெலாம்
போக்கியாள்வாய் புனிதா போற்றி)

என்று உள்ளது.

பா. 31, கடைசி வரியில் 'நின்னைப் பேணிடிலே' என்று மூ: விலே இருக்கிறது; தே: அந்தாதி யாக்குவதற்கு அதனை 'பேசிடிலே' என்றோ 'பேசினிலே' என்றோ கொள்ளவேண்டும்.

பக்கம் 276. வரி 2க்குப் பின் மூ: விலே

(அத்தனே, ஆருயிர்த் தெய்வமே, அகண்ட
நித்தியப் பொருளே நிர்மலா நந்தமே

சத்தியப்பொருளே) சரணம்

என்றுள்ளது.

பா. 33, வரி 2: 'மனக்கேடனைத் தினையு மாற்றி' என்று பாடபேதம். நே: 'எனக்கே' என்பதற்குப் பதிலாக 'எனக்கு நீ.'

பா. 36, வரி 11-20; இவை கை யெழுத்துப் பிரதியில் அடிக்கப்பட்டுள்ளன வாயினும் இவற்றிற்குப் பதிலாகப் பாரதியார் எழுதியுள்ளது விளங்காமையால் இவையே கொள்ளப்பட்டன.

பா. 37, வரி 4; தே: வாழ்தவியல்

பா. 38, வரி 4; தே: மொய்ம்பினையே.

பக்கம் 279, வரி 4-க்குப் பின் மூ: விலே யுள்ளவை யாவன—

(ஐயா கணபதிராயா போற்றி
தெய்வமே போற்றி சேனைத் தேவா
தலைவனே போற்றி சங்கரன் மகனே,
ஆதிமா சக்தி யருளிய மைந்தா,
இச்சா சக்தியிலிணைந்ததோர் வீரமே
கிரியா சக்தியின் கேடிலாத் துணையே
ஞானசக்தி நல்கிய பயனே)
தேவ தேவன் திருத்தாள் போற்றி.

என்னும் 8 அடிகளும் பாரதியாராலே கையெழுத்துப் பிரதியில் அடிக்கப்பட்டுள்ளது. அதற்குப் பதிலாக அவர் எழுதி யுள்ளவை விளங்க வில்லை.

பக்கம் 279, வரி 13-க்குப் பின் மூ: விலே
(சேவற் கொடியோன் தேவசேனாபதி

வேலோன்றனக்கு மிக்காய் போற்றி
உலகெலாம் படைத்தாய் ஒன்றே போற்றி
ஆதிமா சக்தி நீயாவாய் போற்றி
எந்தாய் போற்றி எம்மோய் போற்றி
ஆதிமூலமே யரசே போற்றி,

என்று ஆறு அடிகள் உள்ளன.

---

## ரு. கண்ணன் பாட்டு

'கண்ணன் பாட்டு' என்னும் நூலின் முதற்பதிப்பு 1917-ம் வருஷம் பிங்களஹு ஆவணிமாதத்தில் வெளியாயிற்று. அதன் முகவுரை பின் வருமாறு:

இந்தச் சிறிய நூலுக்கு ஒரு பெரிய முகவுரை எழுத யான் விரும்பவில்லை. சில வார்த்தைகள் மட்டும் கூறுகின்றேன்.

இதன் ஆசிரியர் ஸ்ரீமான் சி. சுப்பிரமணிய பாரதியாரைத் தமிழ் நாட்டார் அறிவார்கள். ஆனால் அவர் பெருமையை உள்ளபடி அறிந்தவர்கள் மிக மிகச் சிலரே யாவர். ஸ்ரீமான் பாரதியார் ஒரு பெரிய மேதாவி ; மகா பண்டிதர் ; தெய்விகப் புலவர்; ஜீவன் முக்தர். இவர் தமிழ்நாட்டு 'ரவீந்திரநாதர்'; இவர் எனது தமிழ் நாட்டின் தவப்பயன்.

பாரதியாருக்குக் கண்ணபிரான் மீதுள்ள அதி தீவிர பக்தி காரணமாக இந்நூலிலுள்ள பாடல்கள் வெளியாயின. இவை தமிழர்களுக்கு நல்விருந்தாகும்.

பாரதியார் பாடல்களின் பெருமையைப் பற்றி யான் விரித்துக் கூறுவதென்றால், இந்த முகவுரை அளவு கடந்து பெரிதாய்விடும். ஒரு வார்த்தை மட்டும் கூறுகின்றேன். இந்த ஆசிரியன் காலத்திற்குப் பின், எத்தனையோ நூற்றாண்டுகளுக்குப் பின், இவர் பாடல்களைத் தமிழ்நாட்டு மாதர்களும் புருஷர்களும் மிகுந்த இன்பத்துடன் படித்துக் களிப்படையும் காட்சியை யான் இப்பொழுதே காண்கின்றேன்.

இந்நூல் வாழ்க! என்னவர் வாழ்க!! எந் தாய் வாழ்க !!!

சிந்தாதிரிப்பேட்டை<br>சென்னை. பிங்கள, ஆவணி, க. } நெல்லையப்பபிள்ளை.

இந்நூலின் இரண்டாம் பதிப்புக்கு ஸ்ரீ. வ. வெ. ஸுப்ரமண்ய ஐயர் எழுதிய முன்னுரை பின்வருமாறு :

நம் காலத்துத் தமிழ்க் கவிகளுள் பிரதம ஸ்தானத்தை வகிக்கும் ஸ்ரீமான் ஸுப்ரஹ்மண்ய பாரதியின் நூல்களுக்கு முன்னுரை வேண்டுவதே யில்லை. இருப்பினும், பாயிர மல்லது பனுவ லன்றே என்னும் முதுமொழியை நினைத்தோ அல்லது வேறு என்ன எண்ணியோ, பதிப்பாசிரியர் இக் கண்ணன் பாட்டின் இரண்டாம் பதிப்புக்கு என்னை ஓர் முன்னுரை எழுதித் தரவேண்டுமெனக் கேட்டார்; சிறிதளவேனும் சாத்தியமாயிருக்கிற ஓர் காரியத்தை நட்புரிமை பூண்டோர் செய்யும்படி வேண்டினால் மறுத்தல் அழகன்று என நினைத்துச் சம்மதித்தேன்.

பாரத நாட்டின் குலதெய்வ மாகிவிட்ட கண்ணனுக்குப் பாமாலை சூட்டாத கவிகள் அருமை. தன்னை நெடுநாள்களாக மறந்திருந்த பாரத நாடு திடீரென விழித்துக் கொண்

டதும், அதன் எதிரே முதலில் தோன்றிய ஒளி, கீதாசாஸ் திரத்தைக் கூறிப் பார்த்தனுடைய ரதத்தை வெற்றிபெற ஓட்டிய கண்ணபிரானுடைய உருவமே. அந்த உருவ மானது நமது கவியின் இருதயத்திலும் எழுந்து அவருடைய கவிதைக்கு ஓர் சோபையைக் கொடுத்தது.

பத்து வருஷங்களுக்கு முன் அவர் பதிப்பித்த ஜன்ம பூமியிலேயே ஸ்ரீகிருஷ்ண ஸ்தோத்திரம் என்று இரண்டு செய்யுள்கள் காணப்படுகின்றன. ஆனால், பிற்பட்டுத்தான் கண்ணனுடைய செயல்களும் திருவிளையாடல்களும் அவர் மனதைப் பூரணமாக ஆகருஷித்தன. இவ் ஆகருஷணத் திற்கு நாலாயிரப் பிரபந்தத்துள் பெரியாழ்வார் அருளிச் செய்த திருப்பாசுரங்களின் அனுஸந்தானம் முக்கிய காரண மாக இருந்திருக்கிறது. இக் கண்ணன் பாட்டானது பாவ விஷயத்தில் அப் பாசுரங்களின் வழியையே தழுவியதாக இருக்கிறது.

இஷ்டதெய்வத்தைப் பல பாவங்களால் வழிபடலாகும் என்று நமது பக்தி சாஸ்திரங்கள் கூறுகின்றன. நமது ஆசிரியரும் இதை அனுசரித்துக் கண்ணனைத் தாயாகவும், தந்தையாகவும், எஜமானனாகவும், குருவாகவும், தோழனாக வும், நாயகியாகவும் நாயகனாகவும் பாவித்துப் பாடுகிறார்.

இவற்றுள், நாயக நாயகி பாவத்தைப் பற்றி இங்குச் சில மொழிகள் கூறாது விட முடியவில்லை. இப் பாவத்தால் பக வானை வழிபடும் முறை தொன்று தொட்டு பக்தர்களாலும் கவிகளாலும் அனுசரிக்கப்பட்டு வருகிறது. ரோமன் கத்தோ லிக் மதத்திலே கூட அடியார் வர்க்கத்தை நாயகியாகவும் கிறிஸ்துவை நாயகனாகவும் பாவித்து எழுதிய தோத்தி ரங்கள் பல உள. நமது பாகவதத்தில் கோபிகைகளின் உபாக்

ஆயானங்களெல்லாம் இப் பாவத்தைத் தழுவி எழுதப்பட்டுள்ளனவே. மகா பக்திமதியான மீராபாயி உலகத்திலுள்ள ஜீவ கோடிகள் அனைத்தும் ஸ்திரீப்பிராயம் என்றும் பகவான் ஒருவனே புருஷன் என்றும் பாவித்துப் பக்தி செய்திருக்கிறார். பரமஹம்ஸ ஸ்ரீராமகிருஷ்ண தேவரும் தம்முடைய அனுபவங்களுள் நாயகி அனுபவத்தையும் அனுபவிக்க எண்ணி, சேலை தரித்துக் கொண்டு, ராதை என்கிற பாவத்தால் கண்ணனை வழிபட்டார் என்று சொல்லப்படுகிறது. திருக்கோவையாரையும் ராமலிங்க சுவாமிகளின் திருவருட்பாவையும் அனுபவித்த தமிழருக்கு இவ்விதம் வழிபடும் முறை புதிதாகப்படாது.

ஆனால் இந்தப் பாவத்தை ஆளுவது கத்தியின் கூர்ப் பக்கத்தின்மீது நடப்பதைப் போன்ற கஷ்டமான காரியம். ஓர் வரம்பு இருக்கிறது; அதற்கு இப்புறம் அப்புறம் போய் விட்டால், அசந்தர்ப்ப மாகிவிடும். ஸ்ரீபாகவதத்திலும் கூட கோபிகா உபாக்கியானங்களில் சுக பகவான் இவ் வரம்பை அங்கங்கே கடந்து விட்டிருக்கிறார் என்பது எனது தாழ்ந்த அபிப்பிராயம்.

கடல் ஞாலம் செய்தேனும் யானே என்னும்,
கடல் ஞாலம் ஆவேனும் யானே என்னும்[1]

என்று தொடங்கும் திருவாய் மொழிகளையும்,

கருப்பூரம் நாறுமோ, கமலப்பூ நாறுமோ?
திருப் பவளச் செவ்வாய்தான் தித்தித் திருக்குமோ?[2]

என்றும் தொடங்கும் ஆண்டாளுடைய பாசுரங்களையும்

1. திருவாய்மொழி, 5, 6, 1.
2. நாச்சியார் திருமொழி, 7, 1.

போலச் செயிரின்றி இப் பாவத்தைப் பாடுவது அனேகமாய் அசாத்தியம்.

நமது கவியும் இப் பாவத்தை விரிக்கையில் பரபக்தியை விடச் சாரீரமான காதலையே அதிகமாக வர்ணித்திருக்கிறார். ஆனால், சுகப்பிரம்மமே நிறுத்த முடியாததான தாரசு முனையை நம் ஆசிரியர் நிறுத்தவில்லை என்று நாம் குறை கூறலாமா?

இந்தக் கீர்த்தனங்களைப் பரபக்திக்குப் பேரிலக்கிய மாகக் கொள்ள வேண்டுவ தில்லை. ஆசிரியர் இந் நூலில் கவி என்கிற ஹோதாவில் தான் நம்மிடம் வருகிறார் என நினைக்க வேண்டும். கவிதா ரீதியாகப் பார்க்கும் போது, இக் கீர்த்தனங்களுள் பெரும்பாலவையி லுள்ள சுவை தேனினும் இனிதா யிருக்கிறது.

இன்னொன்று: கவிதை யழகை மாத்திரம் அனுபவித்து விட்டு, இந் நூலின் பண்ணழகை மறந்துவிடக் கூடாது. இதிலுள்ள பாட்டுகளிற் பெரும்பாலவை தாளத்தோடு பாடு வதற்காகவே எழுதப்பட்டவை யாயிருக்கின்றன. கடற் கரையில், சாந்திமயமான சாயங்கால வேளையில், உலகனைத் தையும் மோஹ வயப்படுத்தி நீலக் கடலையும் பாற்கட லாக்கும் நிலவொளியில், புதிதாகப் புனைந்த கீர்த்தனங்களைக் கற்பனு கர்வத்தோடும் சிருஷ்டி உற்சாகத்தோடும் ஆசிரி யன் தன்னுடைய கம்பீரமான குரலில் பாடினதைக் கேட்ட ஒவ்வொருவரும் இந்நூலிலுள்ள பாட்டுக்களை மாணிக் கங்களாக மதிப்பர்.

இந் நூலைத் தமிழுலகம் ஆதரித்துத் தான் இரண்டாவது பதிப்பு வெளிவருகிறது. ஆனால், ஹரீந்திரநாத சட்டோ

பாத்யாயர் எழுதிய ஆங்கிலக் கீர்த்தனங்களின் விலை மூன்று ரூபாயாக விருக்க, அளவில் அந் நூலில் குறையாததும், சுவையில் அதற்கு இணையாக இருப்பதுமான இந் நூலின் முதற் பதிப்புக்குக் காகிதவிலை ஏறிவிற்ற காலத்தில் பதிப்பாசிரியர் விலை கால் ரூபாயாகக் குறிக்கவேண்டி யிருந்தது என நினைக்கும்போது, நாட்டில் தமிழபிமானம் வெளிப் படையாக விளங்கவில்லை யென்றுவது ஒப்புக்கொள்ள வேண்டும். முன் காலத்தில், ஆசிரியர்களுக்கு அரசர்கள் ஏராளமான பொருள் உதவி செய்து, அவர்கள் மனதைச் சிறிய விசாரங்கள் பீடிக்காமல் காத்துவந்து, அவர்களுடைய ஆற்றல் நாளுக்கு நாள் அதிகரிக்கும்படி செய்து வந்தார்கள். தற்காலத்தில் கல்வி யபிமானமுள்ள பொது ஜனங்கள் தாம் அக்காலத்து அரசரின் ஸ்தானத்தை வகிக்கிறார்கள். இவர்கள் தங்கள் அபிமானத்தை, விலையைப் பொருட்படுத்தாமல் நூல்களின் யோக்கியதையைக் கருதி ஆதரித்துத் தான், காட்ட முடியும். நமது ஆசிரியரின் நூல்களை நம் நாட்டவர் சரிவர ஆதரிக்காததனாலே,

> ‘ சுற்றி நில்லாதே போ, பகையே :—
> துள்ளி வருகுது வேல் ’[1]

என்றும்,

> “ கை தனில் வில்லும் உண்டு :
> காண்டீவம் அதன் பேர்.”[2]

என்றும் உள்ள அக்ஷர லக்ஷம் பெறுமான பாக்களை எழுதி யிருக்கும் அவருடைய உற்சாகம் குன்றிப்போ யிருக்கிறது.

---

1. தோத்திரப் பாடல்கள், ஆறு துணை, 3.

2. பாஞ்சாலி சபதத்தின் இரண்டாம் பாகத்தில் அர்ச்சுனன் தன்னுடைய பராக்கிரமத்தைக் கூறும் செய்யுளில் வருகிறது.

தமிழபிமானிகள் இப்பதிப்பை ஆதரித்து வாங்கி ஆசிரியனுடைய உற்சாகத்தை உயர்த்தி அவரால் தமிழில் புதிய இலக்கியங்கள் பிறக்கும்படி செய்வார்கள் என நம்புகிறேன்.

புதுச்சேரி ; சித்தார்த்தி ஆவணி 22உ } வ. வே. ஸுப்ரமண்ய ஐயர்

ஸ்ரீ. தேசிகவிநாயகம் பிள்ளை இந்நூலிலும் சில பாடபேதங்களைக் குறித்தனுப்பினார்கள்.

தே: ஸ்ரீ. தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள் குறித்துள்ள பாடம்.

மு: முதற்பதிப்பிற் கண்ட பாடம்.

ப: பக்கம்.

ப. 283. வரி 16. 'மிகத்' என்பதற்குப் பதிலாக 'மிக்கத்'.

ப. 290. வரி 11. தே: 'தன்னைத்' என்பதற்குப் பதிலாக 'தம்மைத்'.

ப. 293. 'கண்ணன்—என் அரசன்' என்ற பாடல் 1917-வது வருஷத்து முதற்பதிப்பில் இல்லை.

ப. 295. வரி 11. தே. சித்தச் சோற்றினுக் கேவல்.

ப. 298. வரி 7. தே : 'கொள்பயனென்றில்லை' என்பதற்குப் பதிலாக 'கொள்பயனென்றிலை.'

ப. 300. வரி 7. மு: பிழையிலைப் போலும்.

ப. 305. வரி 17. மு: ஸஸஸ—ஸாஸாஸா-ப ப பா.

ப. 308. வரி 1. மு: பெண்ணடீ. வரி 20. மு: கேளாதிருப்பான்.

ப. 325. வரி 13: தே: 'பாண்டமடி நானுனக்கு' என்பதற்குப் பதிலாக 'பாண்டமிங்கு நானுனக்கு' என்று பாடம்.

ப. 325. வரி 24. தே: 'எண்ணமில்லை' என்பதற்குப் பதிலாக 'எல்லையில்லை'. மு: எண்ணமில்லை'.

ப. 326. வரி 8. தே: 'நாடியஉ' என்பதற்குப் பதிலாக 'நாடியது' என்று பாடம்.

---

# பாஞ்சாலி சபதம்

## பொருள் விளக்கமும் குறிப்புகளும்

[ஸ்ரீ. பாரதியார் முதற் பதிப்பில் எழுதியன]

### முதற் பாகம்

முதற் பாட்டிலிருந்து 18-ஆம் பாட்டு வரையில் நொண்டிச்சிந்து.

லாலல லால்ல லா—ல்ல
லாலல லால்ல லால் லலா

என்ற மெட்டில் நடப்பது.

பாட்டு 1; வரி 7.

. ஆமெனும் பொருளனைத்தாய்—'உள்ள வஸ்துக்கள் யாவு மாகி' என்பது பொருள். 'ஆம்' எனுஞ் சொல் சம்மதியைக் குறிப்பது மட்டுமேயன்றி உண்மையையும்

குறிக்கும். வடமொழியில் 'ஓம்' எனுஞ் சொல்லுக்கு 'ஆம்' என்றே பொருள். எவ்விடத்தும் 'இல்லை' யாதலின்றி 'ஆம்' என இருத்தல் பற்றியே, வேதத்தில் பிரம்மத்துக்கு 'ஓம்' எனும் பெயர் கொடுக்கப்பட்டிருப்ப தறிக.

பாட்டு 4; வரி 2.

மிக்கபல் லுரையெனுங் கருமையிட்டாள்—வேத மாகிய கண்ணில் (ஞான நூல்களாகிய கண்ணில்) பல வித 'வியாக்கியானங்கள், பாஷ்யங்கள்' எனும் கரிய மையைப் பூசியவள். மை கண்ணுக்கு நல்லது, அழகுங்கூட. ஆனால், அளவுக்கு மிஞ்சிப் பூசினால் விகாரமாகத் தோன்றுவதுடன் கண்ணே போனாலும் போய்விடும். நமது தேசத்தில் ஒரு வேளை இப்படி நடந்திருக்குமோ? ஸரஸ்வதி அறிவுத் தெய்வமாதலால், அவளுக்கு ஆத்ம ஞானமே (வேதமே) விழி யெனப்பட்டது.

பாட்டு 4; வரி 3, 4.

சீதக் கதிர்மதியா (ம்) நுதல்—குளிர்ந்த ஒளியுடைய மதியே ஸரஸ்வதி தேவிக்கு நெற்றியாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. 'ஊகம்'[1] என்பது அவளுடைய் கூந்தல்.

பாட்டு 8; வரி 7, 8.

சிந்தையி லறமு முண்டாம்—எனிற்
சேர்ந்திடுங் கலிசெயு மறமு முண்டாம்.

ஒரு சங்கத்தின்—ஒரு ஜாதியின், ஒரு தேசத்தின்—அறிவு மழுங்கா திருக்கும் வரை அதற்கு நாச மேற் படாது. பாரத தேசத்தில் முற் காலத்திலே பாரத ஜாதி முழுமையின்

---

[1] முதற் பதிப்பிலுள்ள பாடம்: 714-பக்கத்துக் குறிப்புரையைப் பார்க்க.

அறிவுக்குப் பொறுப்பாளியாகப் பிராமணர் என்னும் பெயருடைய ஒரு வகுப்பினர் இருந்ததாகப் பழைய நூல்களிலே காணப்படுகிறது. அந்தப் பிராமணர் தமது கடமைகளைத் தவறாது நடத்தி யிருப்பார்க ளானால், மற்றக் குலத்தவரும் நெறி தவறி யிருக்கமாட்டார்கள்; மஹா பாரதப் போர் நடந்திராது; பாரத தேசத்தில் பெரியதோர் க்ஷத்திரிய நாசமும் கலியும் வந்திருக்க மாட்டா. ஒரு தேசத்திற்கு ஏற்படும் உயர்வு தாழ்வுகளுக்கு அத்தேசத்திலுள்ள பிராமணர்களே பொறுப்பாளிகளென மேலே குறித்திருப்பதை விளக்கும் பொருட்டு மஹா பாரதப்போர் நடக்கு முன்பாகவே முதற் படப் பாவம் பிராமணருக்குள் புகுந்த தென்பதை நூல் தெரிவிக்கின்றது.

பாட்டு 11; வரி 1.

ஆரிய வேள் மறவர்—'மறம்' என்பது வீரம்; மறவர், க்ஷத்திரியர்.

பொதுப்படையாக இக் குலத்தாரைக் குறிப்பிடுவதற்குத் தமிழில் அரசர், மன்னர் என்னும் சொற்களை வழங்குவது முண்டு. அதாவது, க்ஷத்திரியர்களுடைய தலைவ னொருவனுக்கு மாத்திர மன்றி, அக் குல முழுமைக்குமே தமிழில் மன்னர் முதலிய பெயர்களுண்டு. நமது நாட்டில் இப் போது 'மறவர்' என வழங்கும் கூட்டத்தார் க்ஷத்திரிய வமிசத்தவ ராதல் உணர்க.

பாட்டு 13; வரி 4.

மலர் விழிக் காந்தங்கள்—காந்தத்திற் குரிய கவர்ச்சித்தொழில் செய்து கொண்டிருக்கும் (மாதர்) விழிகள்.

பாட்டு 14; வரி 5, 6.

பல தானுடைத் தொழில் செயு மாசனமும்—மாச

னம், மஹா ஜனங்கள்; பொதுப்படையான குடிகள். இவர்களே தேசத்திற்கு உயிராவர், இவர்களைச் 'சூத்திரர்' என்பது தற்கால வழக்கு. சூத்திரர் என்னும் பெயரை சில மூடர் இழிவான பொருள்பட வழங்குவது பற்றி, நூலில் அப் பெயர் தரவில்லை.

பாட்டு 16; வரி 7.

உரியோர்—பந்துக்கள்.

பாட்டு 17; வரி 8.

மறைக்குல மறவர்க ளிருவர்—வேத மோதும் குலத்திலே பிறந்தவராயினும் மறவர் தொழிலைக் கைக்கொண்ட துரோணன் கிருபன் என்னும் மஹான்கள்.

பாட்டு 19.

இஃது எண் சீர்; ஈற்றது மா.

பாட்டு 20 முதல் பாட்டு 37 முடிய

மறுபடியும் நொண்டிச்சிந்து.

பாட்டு 24; வரி 7.

பால் வளர் மன்னவர்—பால் என்பது பகுதி. பல பகுதிகளாக வகுக்கப்பட்ட அரசர் (க்ஷத்திரியர்) கூட்டங்கள்.

பாட்டு 25; வரி 5.

வழவழத் தருமன்—இது உலகவழக்கு; உக்கிரத் தன்மை முதலிய மறவர்குணங்கள் இல்லாத தருமன்.

பாட்டு 27; வரி 2.

வளமைகள்—இது உலகவழக்கு; பெருமைக ளென்பது பொருள்.

பாட்டு 29; வரி 2.

கதலியின் தோல்—கதலியென்பது ஒரு வகை மான்.

பாட்டு 33 ; வரி 3.

*அரபிய ரொட்டைகள்*—வியாசமுனிவர் அரபி தேச மென்று பெயர் குறிப்பிடாவிடினும், அவரது வர்ணனை களைப் பார்க்குமிடத்துத் தருமபுத்திரன் யாகத்துக்குக் காணிக்கையாக வந்த ஒட்டைகள் அரபிதேசத்தன வென்று தெளிவாகத் தோன்றுகிறது. இன்றும் அரபி தேசத்திலே தான் ஒட்டைகள் அதிகமாக வழங்குதலுமிக.

பாட்டு 34 ; வரி 3.

*நின்றிடும் புகழ்ச் சீனம்*—மிகப் புராதனமான காலந் தொட்டுக் கீர்த்தி யழியாது நிற்குஞ் சீன தேசம். இஃது சீன தேசத்திற் குடியரசு நாட்டிப் புகழ் மிகுதியடைய முன்னதாகவே எழுதப்பட்டது. சில தேசங்களின் பெருமை காலத்திலே மாறியும் சிதைந்தும் அழிந்தும் போகிறது. காலச் செய்கையை எதிர்த்துச் சில தேசங் கள் எப்போதும் அழிவற்ற பெருமையுடன் விளங்குகின் றன. பிந்தியவற்றுள் சீன தேச மொன்று.

பாட்டு 38 முதல் 41 முடிய

எண்சீர்ப் பாட்டு.

பாட்டு 42 முதல் 49 முடிய

லாலல லாலல லாலல லாலல
லாலலா லல
லாலல லாலல லாலல லாலல
லாலலா லல

என்று படிக்கவும்.

பாட்டு 45 ; வரி 9, 10.

*வீரர்தம் போரினரிய நற்சாத்திர வாதங்கள்*—ஆயுதங் களுடன் செய்யப்படும் உடற்போரைக் காட்டிலும் பண்டி

தர் செய்யும் சாத்திர வாதங்கள் அருமையுடையன என்பது கருத்து; அதாவது, உண்மையுடன் இவ் வாதங்கள் நடைபெறு மிடத்து என்க. உண்மை யறியாதார், உண்மை வேண்டாதார் செய்யும் வாதங்கள் சந்தையில் மீன் விற்கும் ஸ்திரீகளின் போராட்டத்திற்கு நேராகும்.

பாட்டு 53 முதல் 83 முடிய

நாலடி, எண்சீர்ச் சிந்து.

லாலல லாலல லாலலா—லல
லாலல லாலல லாலலா

என்ற மெட்டு.

சம்பாஷணைகள் முதலியவற்றைத் திறனுடனும் உண்மையுடனும் காட்டுவதற்கு இப்பாட்டின் நடை மிகவும் ஸௌகர்ய மாதலைப் பாடிப் பார்த்து உணர்ந்து கொள்க.

பாட்டு 69, 70.

இப்பாட்டுக்களின் கருத்து :—

சகுனி சொல்லுகிறான்: 'நமக்கு ஏற்கெனவே அளவிறந்த செல்வ மிருக்கும்போது, இன்னும் அதிகச் செல்வத்தை ஏன் விரும்பவேண்டும்? இருப்பதை வைத்துப் பாதுகாத்தால் போதாதா?' என்று ஒரு வேளை நீ நினைக்கின்றாய் போலும். ஆனால், இவ்வித நினைப்பு நின்போன்ற ஆரிய மன்னர்களுக்குத் தகாது. ஏனென்றால், நித்தம் ஏராளமான செல்வத்தைத் தான முதலியவற்றால் ஒரு பக்கத்திலே செலவிட்டு, மற்றொரு பக்கத்திலே போர் முதலியவற்றால் மிக்க பொருள் சேகரித்துக் கொண்டிருப்பதாகிய இரட்டைத் தொழில் ஆரிய மன்னர்களால் அனுசரிக்கப்படுவது. இருப்பதை மூடிவைக்க விரும்புவோன் அரச னல்லன், கிழச் செட்டி. எது போலெனில், கங்கை நதி நாள்தோறும் அள

வில்லாத ஜலத்தைக் கடலிலே கொண்டு கொட்டுகிறது. என்ன வீண் செலவு! இந்த 'வீண்செலவு' செய்யாவிட்டால் ஜீவனின்றி அழுகிப் போய் விடும். மலை மீதிருந்து அதற்கு ஓயாத ஊற்றுவரவு இருக்கின்றது. அதனை உலகிற் கெல்லாம் வழங்குவதுமன்றிக் கடலிலும் கொண்டு பொழிகிறது. ஆம். 'மேலே' செல்வரிடமுள்ள பொருளைக்கவர்ந்து 'கீழே' ஸாமான்ய ஜனங்களுக்குப் பல வகைகளிலே பயன் படுத்த வேண்டும். அப்போதுதான் ராஜா, கங்கை நதியைப் போல், 'ஜீவநதி' யாக இருக்கலாம். கங்கை நதியைப் போலி ஆரியர்களும்

செல்வம் வளர்தற்கே—தொழில்
ஆயிர நித்தம் புதியன—கண்டு
வாரிப் பழம்பொரு ளொற்றுவர்.

இங்ஙனமில்லாது, சத்தமற்ற நெடுங்காட்டில், மலையடிக் கீழ்ப்பட்ட இருட் குகையில் நீரைவைத்துப் பாசியால் மூடிக் காக்கும் சுனைகளைப் போன்ற ஒழுக்கம் ஆரியர்களால் வெறுத்தற் குரியது.'

## பாட்டு 81, 82, 83.

ஒருவனைப் பரமாத்மாவின் அவதாரம் என்று கூறுவதன் பொருள் இம் மூன்று பாட்டுக்களிலும் விளக்கப் பட்டிருக்கிறது.

## பாட்டு 104; வரி 8.

நீதித் தர்மனுஞ் சூதி லன்புள்ளோன்—தர்மன் சூதாட்டத்திலே பிரியமுடையவ னென்றும், அழைத்தால் எளிதில் இணங்கி விடுவா னென்றும் சகுனி கருதுவதாக முதனூலிலேயே காணப்படுகிறது.

பாட்டு 109 முதல் 114 வரை

லாலல லாலல லாலல லாலா

லாலல லாலல லாலல லாலா

என்று பாடுக.

பாட்டு 124; வரி 7.

*கேள்விக் கொரு மிதிலாதிப னொத்தோன்*—கேள்வியில் மிதிலை யாசனாகிய ஜனகனுக்கு நிகரானவன்.

இப் பாட்டின் மொத்தக் கருத்து: 'நாங்கள் உமது யாகத்திற்கு வந்து திரும்பிச் சென்ற பிறகு, உங்களைப் பாஞ்சாலி ஸஹிதமாக அழைத்து அஸ்தினாபுரத்தில் மறுவிருந்து கொண்டாட வேண்டியது மரபு. ஆனால் இதுவரை சோதிடர்கள் நல்ல நாளில்லை யென்று சொன்னார்கள். இந்த மாதந் தான் அவர்கள் நல்ல மாத மென்றனர்' என்பது.

பாட்டு 138; வரி 7, 8.

*செப்பிடு வித்தையைப் போலவே—புவிச்*
*செய்திகள் தோன்றிடு மாயினும்*

இவ்வுலகத்துச் செய்திகள், மேலளவாகப் பார்க்கும் போது, முன்பின் தொடர்பு இல்லாதனவாகித் திடும் திடுமென்று புறப்படுவன போலத் தோன்றுகின்றன. ஆனால், ஆழ்ந்து நோக்கு மிடத்து, இவை 'காரண காரியத் தொடர்' என்பதோர் தவிர்க்க முடியாத விதியால் கட்டுண்டிருக்கின்றன.

பாட்டு 148; வரி 7, 8.

*சீரடியாற் பழவேத முனிவர் போற்றுஞ் செழுஞ் சோதி*—சீர்களும் அடிகளும் இயைந்த மந்திரங்களால் முன்னைய வேதரிஷிகள் போற்றிய ஞாயிறு.

இங்கு சூரியாஸ்தமான வர்ணனை கூறப்படுகிறது. இப் பாடல்களின் கருத்து நன்கு விளங்கும் பொருட்டு, நமது "கர்ம யோகிப்" பத்திரிகையிலே இவ் விஷயத்தைப் பற்றி எழுதியுள்ள வியாஸ மொன்றை இங்கு தருகின்றோம்.

## ஸூர்யாஸ்தமனம்

உலகத்தில் எங்கு பார்த்தாலும் நிறைந்து கிடக்கும் லாவண்யங்களைத் தமிழர்கள் கவனிப்பது கிடையாது. சனிக்கிழமை சாயங்காலந் தோறும் குளக்கரைகளிற் போய்க் கருடன் பார்ப்பதற் கென்றால் நம்மவர்கள் கூட்டங் கூட்டமாக ஓடுகிறார்கள். சூரியாஸ்தமன காலத்தில் வானத்திலே தோன்றும் அதிசயங்களைப் பார்க்க ஒருவன் கூடப் போகிறதில்லை. அப்போது வானத்திலே இந்திர ஜால மஹேந்திர ஜாலங்களெல்லாம் நடக்கின்றன. இந்த க்ஷண மிருந்த தோற்றம் அடுத்த க்ஷண மிருப்பதில்லை. உலகத்திலுள்ள திரவிய முழுவதையும் செலவிட்டு வர்ணக் காட்சிகள் ஏற்படுத்திப் பார்ப்போமானாலும், அது ஸூர்யாஸ்தமன காலத்தில் வானத்திலே நாம் பொருட் செலவில்லாமல் பார்க்கக்கூடிய காட்சிகளிலே கோடியிலொரு பங்குகூடக்காணாது. வாணவேடிக்கைகள் பார்க்க ஒரு செல்வன் பதினாயிரக்கணக்கான திரவியம் செலவிடுகிறான். அவனது செல்வத்தினாலன்றோ இந்தக் காட்சி சுலபமாகிறதென்று அதைப் பார்த்து ஆயிரம் ஏழைகள் பெருமூச்செறிகிறார்கள். ஸஹோதரா, ஸூர்யாஸ்தமனத்தின் விநோதங்களைச் சென்று பார். ஸூர்யனைப் பார்த்தால் கண்ணுக்குக் கெடுதி யென்று குருடர் நம்பிக்கையைப் பொருட்டாக்காதே. ஸூர்யனைப் பார்ப்பது பாவமென்று சொல்லும் மூடர் சாஸ்திரத்தைக் கண்கொண்டு பார்க்காதே.

நமது நாட்டில் வேதகாலத்து ரிஷிகள் பிரகிருதியின் சௌந்தர்யங்களைக் கண்டு மோஹித்துப் பரமானந்த மெய்தியவர்களாய்ப் பல அதிசயமான பாடல்கள் பாடியிருக்கிறார்கள். பிரகிருதியின் அழகைக்கண்டு பரவசமெய்திக் காளிதாசன் முதலிய பெருங் கவிகள் அற்புதக் கவிதைகள் செய்திருக்கின்றனர். இக் காலத்திலேதான் இந்த துரதிர்ஷ்ட நிலைகொண்ட நாட்டில் வானம் பார்த் தறியாத குருடர்களெல்லாரும் கவிகளென்று சொல்லி வெளிவருகிறார்கள்.

ஸூர்யாஸ்தமனத்தின் அற்புத ஸௌந்தர்யங்களை எழுதிப் பிறர் மனதில் படும்படி செய்வது சாத்தியமில்லை. நேரிலே கொண்டு காட்டினாலும் பலருக்கு ஆரம்பத்திலே கண் கூசுவதுதான் அர்த்த மாகுமே யல்லாமல், விஷயம் தெரியாது. ஸஹோதரா, நீயாகவே போய்ப் பல தினம் அடுத்துப் பார்க்க வேண்டும். பிறகு தான் உனக்கு அந்த தெய்வக்காட்சி சிறிது சிறிதாக விளங்கும். ஸூர்யோதயத்திலேயும் ஸூர்யாஸ்தமனத்திலும் வானத்தில் நடக்கும் இந்திர ஜாலக் காட்சியில் க்ஷணந்தோறும் புதிய புதிய விநோதங்கள் மாத்திரமேயன்றி இன்னுமொரு விசேஷ முண்டு. நேற்றிருந்தது போல இன்றைக்கிராது. இன்றிருப்பது போல நாளையிராது. தினந்தோறும் வெவ்வேறு வியப்புக்கள், வெவ்வேறு உலகங்கள், வெவ்வேறு மஹிமைகள், வெவ்வேறு கனவுகள், வெவ்வேறு ஆனந்தங்கள், வெவ்வேறு அதிர்வசனீயங்கள்.

சில தினங்களின் முன்பு ஓர் மாலைப்பொழுதில் நான் கண்ட அதிசயங்களை ஒருவாறு இங்கு குறிப்பிடுகிறேன். அடிவானத்தில் ஸூர்ய கோளம் தகதகவென்று சுழன்று கொண்டிருந்தது. இருபதுகோடி மின்னல்களை எடுத்து

ஒரு சக்கரமாக வார்த்துச் சுழற்றுவது போலிருந்தது. ஆரம்பத்திலே நான் கண் கூசும். சிறிது நேரம் உற்று நோக்கிக் கொண்டிருந்தால், பிறகு கண்கூச்சம் தீர்ந்து போய்விடும். இரண்டு வட்டத் தகடுகள் ஒன்றின்மேலொன்று சுழலும். கீழேயிருப்பது சுத்தமான மின் வட்டம். மேலே மரகதவட்டம். பச்சை வர்ணம்! அற்புதமான பசுமை!

பச்சைத்தகடு பின்புறத்திலிருக்கும் மின்தகட்டை முழுதும் மறைத்துக்கொண்டிருக்கும். ஆயினும் இடையிடையே பின்னுள்ள வட்டத்தின் வயிரக்கிரணங்கள் கண்மீது பாயும்.

பார்! ஸூர்யனைச்சுற்றி மேகங்களெல்லாம் தீப்பட்டெரிவது போலத் தோன்றுகின்றது! ஆஹா! என்ன வர்ணங்கள்! எத்தனை வித வடிவங்கள்! எத்தனை யாயிர விதமான கலப்புகள்! அக்கினிக்குழம்பு! தங்கம் காய்ச்சி விட்ட ஓடைகள்! எரிகின்ற தங்கத்தீவுகள்!

நீல ஏரிகள்! கரும்பூதங்கள்! எத்தனை வகை நீலம்! எத்தனை விதச் செம்மை! எத்தனை வகைப் பசுமை! எத்தனை வகைக் கருமை! நீல ஏரியின்மீது மிதக்கும் தங்கத் தோணிகள்! எரிகின்ற தங்க ஜரிகைக் கரைபோட்ட கரிய சிகரங்கள்! தங்கத் திமிங்கிலங்கள் மிதக்கும் கருங்கடல்! எங்கு பார்த்தாலும் ஒளித்திரள். வர்ணக்களஞ்சியம். போ, போ; என்னால் அதை வர்ணிக்கமுடியாது.

பாட்டு 153; வரி 1, 2.

செங்கதிர்த் தேவன் சிறந்த ஒளியினைத் தேர்கின்றோம்
அவன் எங்களறிவினைத் தூண்டி நடத்துக.

இது "தத் ஸவிதுர்வரேண்யம்" என்று தொடங்கும் காயத்ரி மந்திரத்தின் தமிழ் மொழி பெயர்ப்பு.

பாட்டு 155 ; வரி 6, 7.

இத்தனை மக்களு மெங்க ணிருந்தனர் இத் தினமட்டு மென வியப்புற—'இந்நாள் வரை இத்தனை ஜனங்களும் எங்கே யிருந்தனர்' என்று (காண்போர்) வியப்பெய்தும் வண்ணமாக.

பாட்டு 157 ; வரி 7, 8.

தோரணங் கொஞ்ச—தோரணங்கள் அழகுடன் குழைந்திருப்ப.

பாட்டு 158 ; வரி 3, 4.

பொன்னரங்கினி லிருந்தான்—கண்ணில் புலவனை—ராஜ மண்டபத்திலே வீற்றிருந்தவன் ஆகிய திருதராஷ்டிரனை.

பாட்டு 158 ; வரி 7.

வின்னயம்—வில்வித்தை, யுத்த சாஸ்திரம்.

பாட்டு 159 ; வரி 3, 4.

பணிக் கொடியோன்—பாம்பைக் கொடிச் சின்னமாகவுடைய துரியோதனன்.

பாட்டு 160 ; வரி 1.

இளங்கொடி—பாஞ்சாலி.

பாட்டு 160 ; வரி 6.

உடல் வலித்தொழில்—கஸ்ரத், சரீர பலத்துக்காகச் செய்யப்படும் அப்பியாசங்கள். இதனை வடமொழியில் 'வ்யாயாமம்' என்பர்.

பாட்டு 161 ; வரி 5—8.

வந்ததொர் துன்பத்தினை...—

துன்பம் நேரிடுங்கால், அதனை அவ்விடத்தே அப் பொழுதே மாய்த்துவிட வழி செய்வார்கள். அவ்வாறன்றிப் பின் வரப்போகும் துன்பங்களை நினைத்து நெஞ்சமுடைந்து போய் யாதொரு செய்கையும் ஓடாமல் சலிப்படைந்திருத்தல் ஆரியர்களுடைய மரபன்று.

பாட்டு 162; வரி 3.

தோணலம்—தோள்வலி, வலிமை.

பாட்டு 164; வரி 5.

வென்றிகொள் பெருஞ் சூதர்—துர்யோதனன் சபையில் வந்திருந்த சூதர்களின் பெயர், விவிம்சதி, சித்ர ஸேனன், புருமித்ரன், ஜயன்; சகுனி இருக்கவே செய்கிறான்.

பாட்டு 165; வரி 7.

ஆலமுற்றிடத் தழுவி—(ஆலம்—மார்பு); மார்புறத் தழுவி.

பாட்டு 166; வரி 1.

அறத்தோன்றல்—'தரும புத்திரனே' என்னும் விளி.

பாட்டு 168; வரி 1, 2.

பழிக் கவற்றை யொர் சாத்திரமெனப் பயின்றோன்—பிறர் ஸங்கீதம், கணிதம், வியாகரணம், யுத்த தந்திரம் முதலிய சாஸ்திரங்கள் படிப்பதுபோலச் சூதாட்டத்தை ஒரு சாஸ்திரமாகப் பயிற்சி செய்து எதிர்க்க முடியாத நிபுணத் தன்மை வாய்ந்திருந்த சகுனி.

பாட்டு 168; வரி 7, 8.

செலுஞ் செலவினுக் கழிகிலை—செலவுக்கு நெஞ்சழிய மாட்டாய். (விளையாட்டில் கொஞ்சம் திரவியம்) செலவிடுவதற்கு அஞ்ச மாட்டாய்.

பாட்டு 169 ; வரி 2.

*பிசுனன்—உலோபி.*

பாட்டு 171 ; வரி 1.

*தோல் விலைக்குப் பசுவினைக் கொல்லும்—தோல் விலையாகக் கிடைக்கும் பொருளை விரும்பிப் பசுவைக் கொல்லுதல் போலப் பொருளாசையால் யுதிஷ்டிரனைக் கெடுத்துத் தருமநாசஞ் செய்யத் துணிந்தவனாகிய(சகுனி).*

பாட்டு 171 ; வரி 3.

*நூல்விலக்கிய செய்கைக ளஞ்சும் கோன்பிறேன்—தருமராஜன் ; அறநூல் விதிகளைத் தவறாதவன்.*

பாட்டு 171, வரி 8.

*கவறை நஞ்செனக் கூறினர்—சூதாட்டத்தை விஷமாகக் கருத வேண்டு மென்றார்கள். 'கவற்றை' என் றிருத்தல் நேர்.*

பாட்டு 175 ; வரி 6, 7.

*நம்மவர் காத்திடும் பழவழக்கை மாத்திர மறந்து விட்டாய்—க்ஷத்திரியர்களுக்குள்ளே யிருக்கும் புராதன சம்பிரதாய மொன்றை மாத்திரம் நீ மறந்துவிட்டா யென்று சகுனி சொல்லுகிறான். வழக்கு—வழக்கம், பூர்வாசாரம், 'மாமூல்'. அந்தப் பூர்வாசாரம், இன்ன தென்பது பின்னே எட்டாம் வரியிற் கூறப்படுகிறது, 'மன்னர் வல்லினுக் கழைத்திடில் மறுப்பதுண்டோ?' என, ஒரு அரசனை மற்றொருவன் 'என்னுடன் சூதாட வா' என வலிந் தழைக்கும் போது மாட்டேனென்று சொல்ல லாகா தென்பது கருத்து. க்ஷத்திரியன் நஷ்டங்களுக்குத் துணிந்திருக்க வேண்டுமென்ற நல்ல கொள்கையால் விளைந்த கெட்ட வழக்கங்களில் இதுவொன்று. அறிவுடைய*

வர்கள் கூடப் 'பூர்வாசார' மென்ற காரணத்தால் தீய வழக்கங்களை அனுசரித்தல் பாரத தேசத்திற் கேற்பட்ட சாபம் இப்போது தான் நீங்கி வருகிறது.

பாட்டு 175, வரி 8.

வல்—சூது.

பாட்டு 177 ; வரி 5.

வல்லமர்—சூதுப்போர்.

பாட்டு 178, 179, 180, 181.

இப் பாட்டுக்களிலே இப் 'பூர்வாசாரங்களில்' ஆராய்ச்சி யில்லாது பக்தி செலுத்துவோரின் மடமை காட்டப்படுகின்றது. பழமையிலே பெரும் பகுதி உயர்வு சான்றது தான். அதிலும், பாரத தேசத்தினராகிய நம்ம வரின் நடைகள் அறிவும் அறனும் பொதிந்தன வாகும். ஆயினும், இழிந்த அமானுஷீக நடைகள் சில இவற்றோடு கலந்துள்ளன.

'எனது தந்தை க்ஷயநோயால் இறந்து போனான். எனக்கும் க்ஷயநோய் வந்திருக்கிறது. எங்கள் பாட்டனுக்கும் இந்த நோயுண்டு. ஆதலால் இந்த நோய் தீர்ப்பதற்கு நான் மருந்து தின்னமாட்டேன்,' என்று ஒரு மனிதன் சொல்லுவானானால் அவன் எவ்வளவு பெரிய மூடன் ? லோக க்ஷேமத்துக்கும் லோகாபிவிருத்திக்கும் இந்த 'மாமூல்' பக்தி எத்தனை பெரிய இடையூறு என்பதை நம்மவர் இன்னும் நன்றாகத் தெரிந்து கொள்ளவில்லை.

பாட்டு 182 ; வரி 4—8.

மேலை நாஞ்செயுங் கர்ம மல்லதே...—

நமது செய்கையின் விளைவுகளுக்கு மாத்திரமேயன்றி நம்மைச் சேர்ந்தவர்களின் கர்மப் பயன்களுக்கும் நாம் ஆளாகிறோமென்பதை இச் செய்யுள் விளக்குகின்றது.

பாட்டு 183 முதல் 195 முடிய

லால லாலலா லா லாலா
லால லாலலா லா

என்ற மெட்டுள்ள சிந்துகள். தெருவில் ஊசிகளும் பாசிமணிகளும் விற்பதோடு பிச்சை யெடுக்கவும் செய்கிற பெண்கள் 'மாயக்காரனம்மா—கிருஷ்ணன்—மகுடிக்கார னம்மா' என்று பாடும் நடை. சூதாட்ட வருணனைக்கும் அதிலேற்படும் பரபரத்த வார்த்தைகளையும் செய்கைகளை யும் விளக்குதற்கும் இந் நடை மிகவும் பொருந்திய தென்பது எளிதிலே காணப்படும்.

பாட்டு 185; வரி 8.

பின் னடக்குக—மேலே விளையாட்டு நடக்குக.

பாட்டு 186; வரி 1—4.

ஒருவ னுடைப் பணயம்...—தருமன் சொல்வது.

பாட்டு 186; வரி 5—8.

வருமமில்லையையா...—துரியோதனன் சொல்வது.

பாட்டு 187; வரி 1—3.

பொழுது போக்குதற்கே...—இஃது கர்ணன் வசனம்.

அங்கர்கோன்—கர்ணன்.

பாட்டு 187; வரி 5—8.

பழுதிருப்ப தெல்லாம்—தருமன் வசனம்.

பாட்டு 189 ; வரி 6.

பாரமான பொற்றேர்—இங்கு, தேர் பணயமாக வைக்கப்பட்டது என்பது கொள்ளக் கிடக்கின்றது.

பாட்டு 191 ; வரி 2.

அடிமை செய்து வாழ்வோர்—மாதர்கள் பணயமாக வைக்கப்பட்டன ரென்பது தொக்கு நிற்கின்றது.

பாட்டு 196 ; வரி 6.

பழி மக்காள்—பழிப் பிள்ளைகளே, பழிக் கிடமாகிய பிள்ளைகளே.

பாட்டு 199 ; வரி 1.

கெலித்திடல்—வெல்லுதல். இது திசைச்சொல், கிராமியம்.

பாட்டு 201 ; வரி 8.

கேட்குங் காது மிழந்து விட்டாயோ ?—கோப மிகுதியால் தன்னை மறந்து அரசனுக்குக் கண் ணில்லாமையைக் குறிக்க நேரிட்டது.

பாட்டு 203 ; வரி 6.

மந்திரம்—சூழ்ச்சி.

பாட்டு 203 ; வரி 8.

வெற்பிடைப் போக்குதி—காந்தாரத்து மலைநாட்டி லிருந்து வந்தவனுதலால், சகுனியை மீட்டும் அவனது மலை நாட்டுக்கு அனுப்பி விடுக என்று சொல்லியது.

# குறிப்புரை

பாஞ்சாலி சபதம் முதற்பாகம் 1912-ஆம் வருஷத்தில் புதுச்சேரி வித்யாபிவர்த்தினி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப் பெற்றது. அதிலுள்ள பாட பேதங்கள் மு என்று குறிக்கப் பட்டுள்ளன.

தே: என்பது ஸ்ரீ. தேசிகவிநாயகம் பிள்ளையவர்களின் குறிப்பு.

முதற் பாகம்

பாட்டு 1, வரி 3. மு: மாய்ப்பதுவாய்ப்—பவந்.

பாட்டு 4. தே: 'வேதத் திருவிழியாள்' என்று தொடங்கும் இப் பாடல் கையெழுத்துப் பிரதியில் அடிக்கப்பட்டுள்ளது. வரி 3. மு: 'சீதக் கதிர் மதியா—நுதல்'. வரி 4: மு: சேர்ந்த தோளுகவண் குழலுடையாள்.

பாட்டு 6, வரி 2. மு: வாக் குத வுவளெனத் திட மிகுந் தேன்.

பாட்டு 8, வரி 7: மு: 'சிந்தையிலறமு முண்டாம்'.

பாட்டு 10, வரி 8. மு: நொறுக்க வல்லோர்.

பாட்டு 11, வரி 6. மு: யானைகளெனத் திரிவோர்.

பாட்டு 20, வரி 5. மு: வில்லுடையோன்—ஒருக்.

பாட்டு 21, வரி 8. மு: முதலென மிலைந்தனவே.

பாட்டு 26, வரி 4. மு: செய் தப்பத முழக்கியதும்.

பாட்டு 30, வரி 5. மு: தலத்திலுளார்.

பாட்டு 34, வரி 7. 'பொருள்' என்ற சொல் ஊகித்துக்கொண்டது.

பாட்டு 43, வரி 12. மு : யெய்திடச் செய்தியால்

பாட்டு 61, வரி 5. மு : கொண்ட குடிவகை.

பாட்டு 64, வரி 1. மு : புத்திரனல்லவோ ?

பாட்டு 72, வரி 3. மு : கொண்டவரல்லவோ ?

பாட்டு 78, வரி 8. மு : கொடுத்தனரல்லவோ ?

பாட்டு 122, வரி 7. மு : சிறந்திட நம்மைச்.

பாட்டு 133, வரி 4. மு : மழித்திட.

பாட்டு 153, வரி 2. மு : எங்களறிவு விளக்க முறச் செய்திடவே—என.

பாட்டு 163, வரி 3. மு : மந்திரி வகையும்.

பாட்டு 169, வரி 1. மு : மண்டிலத்தார்.

பாட்டு 171, வரி 8. மு : கவறை நஞ்சென.

பாட்டு 172, வரி 6. தே : போலொன்றுஞ் சொல்லார்.

பாட்டு 196, வரி 8 : மு : துவென்றெள்ளி.

## இரண்டாம் பாகம்

பாட்டு 53, வரி 7. தே : 'என்றன்' என்று ஒரு தனிச் சொல் ஊகித்துக்கொள்ளலாம்.

பாட்டு 55, வரி 6. தே : 'என' என்பது முதற் பதிப்பில் இல்லை; ஊகித்துக்கொண்ட பாடம்.

பாட்டு 60, வரி 6. தே : ஈரற்கறியும்.

பாட்டு 97, வரி 6. தே : மூளு நற்.

---

# ஸ்வசரிதையும் பிறபாடல்களும்

முன் பகுதிகளின் விஷய பாகுபாட்டுக்கு உட்படாத 37 செய்யுட்கள் இக் கடைசிப் பகுதியில் சேர்க்கப்பட்டுள்ளன. அவற்றுள் 'ஸ்வசரிதை' யென்பது 1910 நவம்பரில் முதன்முதல் அச்சிடப் பெற்றது. அதன் முகவுரையிலே ஆசிரியர் பின் வருமாறு எழுதியிருந்தார் :—

இச் சிறிய செய்யுள்-நூல் விநோதார்த்தமாக எழுதப்பட்டது. ஒரு சில பாட்டுகள் இன்ப மளிக்கக்கூடியதானாலும் பதர் மிகுதியாகக் கலந்திருக்கக்கூடும் இதன் இயல்பு தன் கூற்றெனப்படும். அதாவது, கதாநாயகன் தன் சரிதையைத்தான் நேராகவே சொல்லும் நடை. இக் காவிய முறை நவீனமானது. இஃது தமிழறிந்த நூலோர்கள் அங்கீகரிக்கத் தக்கதுதானா என்று பார்க்கும் பொருட்டுச் சிறிய நூலொன்றை முதலில் பதிப்பிடுகிறேன். இதனைப் பதம் பார்த்து மேலோர் நன்றென்பாராயின் இவ்வழியிலே வேறு பல வெளியாக்குவேன். அனுபவக் குறைவினாலும் ஆற்றற் குறைவினாலும் நேரும் பிழையினைப் புலவர் பொறுத்தருள் செய்க.

18-வது பாட்டும் இத்துடன் பதிப்பிக்கப் பெற்றது.

2, 3, 4, 20, 21, 26 பாடல்கள் சமீப காலத்திற் பத்திரிகைகளிலே வெளிவந்தன. 7, 8, 24, 25, 27 இவை ஐந்தும் இதுவரை வெளிவரவில்லை. 29, 30, 31 இவை கட்டுரைகளினிடையே யுள்ளன. 5, 6, 9, 10, 11, 12, 13, 14, 15, 16, 17, 28 ஆகிய பன்னிரண்டு பாடல்களும் 1922

வருஷத்தில் வெளியான 'பாரதி நூல்கள்' இரண்டாம் பாகத்தில் உள்ளன. 19-வது பாடல் பாரதி நூல்கள் முதற் பாகத்திலுள்ளது. அதே பாகத்திலுள்ளதான 22-வது பாடல் முதன் முதல் ஜன்ம பூமி என்னும் நூலில் வெளியாயிற்று. 23-வது பாடல் தேசிய கீதங்கள் 1934 வருஷப் பதிப்பிலே முதன் முதல் வெளியிடப்பட்டது. வசன காவியங்களான 32, 33, 34, 35 ஆகிய நான்கும் காட்சி என்னும் பெயரால் 1930-வருஷத்திலே பதிப்பிக்கப் பெற்ற பகுதி 6இல் உள்ளன. நாடகங்களான 36, 37 இரண்டும் சித்தக்கடல் என்னும் பெயரால் 1930-வருஷத்திலே பதிப்பிக்கப் பெற்ற பகுதி 11இல் உள்ளன.

